MANUALS FOR INDIAN TEACHERS

# The Kindergarten System



BY

C. GORDON

# குழந்தையும்
# அவன் கல்விப்பயிர்ச்சியு

ஸி. கார்டன் இயற்றியது

MACMILLAN & CO., LIMITED
MADRAS, BOMBAY, CALCUTTA AND LONDON
1919

 [விலை, அணா [illegible]

# குழந்தையும் அவன் கல்வீப் பயிற்சியும்




CORRIE GORDON
*Lecturer, Teachers' College, Saidapet*
*and*
*Superintendent, Kindergarten Department*



மாக்மில்லன் அண்டு கம்பெனி, லிமிடெட்
சென்னை, பம்பாய், கல்கத்தா, லண்டன்
1 9 1 9




கிண்டர்கார்டன் யூனியனுக்கும் குழந்தைகளுக்கும்

இந்தச் சிறு புஸ்தகத்தை மனதொப்பி பொதுமுயற்சியால் உண்மையாய்ச் செய்த உபாத்தியாயர்களுக்கும் மாணாக்கர்களுக்கும் அர்ப்பணம்.

# முன்னுரை.

மூலாதாரப் படிப்பு பள்ளிக்கூடங்களில் அமர்ந்திருக்கும் உபாத்
தியாயர்கள் தனியாக வேலை செய்கிறார்கள். தங்களைப்போன்ற உபாத்
தியாயர்களுடன் கலந்து பரஸ்பரம் விஷயங்களை சொல்லிக்கொள்ளு
வதற்கு சமயங்கள் வாய்ப்பது வெகு துர்லபம். அப்படிப்பட்ட
உபாத்தியாயர்களுக்குத்தான் இப்புஸ்தகம் முக்கியமாய் உத்தேசிக்
கப்பட்டது. அவ்வுபாத்தியாயர்களுக்கு உதவுவதற்கென்றே தமிழ்
முதலிய பாஷைகளில் பிரசுரம் பண்ணிவரும் புஸ்தகக்கோர்வை
யில் இது ஒன்று. சிறு குழந்தைகளுக்கு போதிப்பதிலும் சிறுவய
துள்ள உபாத்தியாயர்களுக்கு சிக்ஷணமுறை போதிப்பதிலும் அனேக
வருஷங்கள் பாடுபட்டு வந்த அனுபவத்தின் பயனாகும் இப்புத்
தகம். இதில் எழுதப்படும் ஒவ்வொரு கோட்பாடும் ஆதரித்துபேசும்
ஒவ்வொருமுறையும் அனுபவத்தில் சோதித்து பார்த்துத் திறமென்று
கண்டவை.

இப்புத்தகத்தை முழுதிலும் வாசியாமல் ஒரோர் பாகத்தை வாசிக்க
நேருமாதலாலும் கோட்பாடுகளை அநுஷ்டான முறையில்லாமல் சொல்
லப் புகுவதால் ஓர்வித பிரயோசனமும் உள்ளபடி ஏற்படுவதில்லை
யென்று அனுபவத்தில் தெரிந்திருப்பதாலும், எவ்வளவு ஒத்தாப்
போல் சேர்க்கலாமோ அவ்வளவுவரையில் கோட்பாட்டையும் அனுஷ்
டானத்தையும் கலந்து எழுத முயன்றிருக்கிறேன். இத்தால் புஸ்த
கத்தின் சில பாகங்களில் சொன்ன அனேக விஷயத்தையே திருப்
பிச்சொல்லும்படி நேர்ந்திருக்கிறது வாசிப்போர்க்கு அது அசௌகர்ய
மாயிராதென்று எண்ணுகிறேன். சிக்ஷணமுறையால் பயிற்றப்படு
வோர்க்கும் இப்புத்தகம் உபயோகப்படும்.

முதற்பாகத்தில் ஆறுவயதுக்குட்பட்ட பிள்ளைகள் விஷயமாக
வும் இரண்டாம் பாகத்தில் 6 முதல் 8,9 வயதுள்ள பிள்ளைகள்
விஷயமாகவும் பெரும்பாலும் சொல்லப்பட்டிருந்தபோதிலும் இவ்
விரண்டு பாகங்களுக்கும் இடையில் ஒரு வரம்பு ஏற்படுத்துவது

உத்தேசமன்று. ஏனெனில் சிறு பிள்ளைகளின் வேலை பெரிய பிள்ளைகள் கிரமங்களை அதிகமாய் கலக்கக்கொண்டு செய்யும் வேலையில் மறைந்திருக்கவேண்டிய தவசியம். இப்புத்தகம் 'கிண்டர்கார்டன் யூனியன்" என்னும் ஸபையார்க்கு அர்ப்பணம் செய்யப்படுகிறது. டீசர்ஸ் காலேஜ் மாணவரில் சிலரால் உற்சாகப்படுத்தப்பட்டு ஏற்படுத்தியது இந்த சபை. தங்கள் தேசத்துக்குழந்தைகளுக்கு நல்லது செய்யவேண்டுமென்று விருப்பமுள்ளவர்களெல்லாம் இதில் சங்கத்தினர்களாம். இந்த போதனுமுறையை பிரசுரப்படுத்துவதற்கு தங்களாலியன்றதை செய்ய இச்சங்கத்தினர்கள் முயல ஒப்புக்கொள்கிறார்கள். இந்த சபைக்கு முதல் அக்கிராசனுதிபதியாயிருக்கும் கௌரவம் எனக்கு வாய்த்திருக்கிறது. ஸபையின் நோக்கங்களை கைகூட செய்வதற்கு இப்புத்தகத்தால் சிறிதாகும் என்று மனதார எண்ணி நான் எழுதிய இப்புத்தகத்தை கொடுக்கிறேன்.

இப்புத்தகத்தை எழுதுவதற்கு எனக்கு உபகாரமாயிருந்தவர்களை எல்லாம் நன்றி பாராட்டிச்சொல்ல சாத்தியமில்லை. சிலரையாவது இங்கு கூறலாம். இந்த காலேஜில் இயற்கை சாஸ்திரபோதகராயிருக்கும் ம-ா-ா-ஸ்ரீ M. O. பார்த்தசாரதி அய்யங்கார், M.A., L. T. அவர்களால் எடுக்கப்பட்ட புகைப்படங்களிலிருந்து இப்புத்தகத்திற்கு விளக்கப்படங்களாக எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆட்டங்கள் முதலானவற்றிற் விளக்கங்களாக சேர்க்கப்பட்டிருக்கும் சித்திரங்களிற் சில, சிக்ஷணமுறை வித்தியர்த்தியான V. ராபர்ட் என்பவரால் வரையப்பட்டவை. பிரிசிடென்சி காலேஜில் கணிதசாஸ்திரபோதகராயிருந்து, தற்போது இக்காலேஜில் அதே சாஸ்திரத்தை போதித்து வரும் ம-ா-ா-ஸ்ரீ T. K. வெங்கிட்டராம அய்யர், M.A., L.T. அவர்கள் "எண்ணிக்கை" அத்தியாயம் முழுவதையும் செவ்வையாய் வாசித்துப்பார்த்து அதை முற்றிலும் அங்கீகரிக்கிறார். வாசிப்பு அத்தியாயத்தைப்பற்றி. ம-ா-ா-ஸ்ரீ S. ஜெகன்னுதய்யர் அவர்களும், செய்யுள் அத்தியாயத்தைப்பற்றி ம-ா-ா-ஸ்ரீ. M. R. சுப்பிரமணிய அய்யர், B.A., L.T. அவர்களும் சில குறிப்புகள் சொன்னார்கள்.

தென்னிந்தியாவில் மூலாதாரப் பாடசாலைகளில் உபாத்தியாயராய் அமர்ந்திருப்போர்கள் பெரும்பாலும் கஷ்டமானதும் எப்போதும் சிரமப்பட்டே செய்யவேண்டியதுமான வேலையைச் செய்யும் விஷ

யத்தில் என் மனப்பூர்வமான உடனுணர்வை காண்பிக்கின்றேன். அவர்களுடைய சிரமமும் அவர்கள் மாணவர்களின் சிரமமும் இப் புத்தகத்தால் குறையுமென்று நம்புகிறேன். பிரோபெல் அவர் காலத்தில் சிக்ஷணகாரியத்தில் உழைத்தோர்க்கு; "**வாருங்கள்! நம் பிள்ளைகளுக்கென்று உயிர்வாழ்வோம்**" என்று சொன்ன வாக்கியத்தையே உபாத்தியாயர்களை பார்த்துச் சொல்லி முடிக்கிறேன்.

டீசர்ஸ் காலேஜ்,
சைதாப்பேட்டை

CORRIE GORDON.

This book has been put into Tamil for me by M.R.Ry. K. A. Srinivasachari Avergal of the Teachers' College, for which he has my very best thanks. An excellent Kindergartner himself, his every wish is to spread the System through his country and to help his fellows in the field of Education, and to this end he has translated my work for me.

C. G

## அட்டவணை.

### முகவுரை அத்தியாயம்.



### முதல் பாகம்.

### ஆறுவயதிற்குட்பட்ட குழந்தை.

# ஆறுவயதுக்குட்பட்ட பிள்ளைகளுக்கான பாட திட்டம்.

## ஆறுவயதுக்குட்பட்ட பிள்ளைகளுக்கான பாட அட்டவணை.

## இரண்டாம் பாகம்.

# அநுபந்தம்.

# கிண்டர்கார்டன் என்னும் பாலசிக்ஷண முறை.

## முகவுரை.



நாம் வாழும் இந்நாளில் குழந்தைகள், பதார்த்தரசனைக் கிரமத்தில் தங்களுக்குரித்தான ஸ்தானத்தை கிட்டி அடைந்து வருகிறார்கள். தேச வாழ்க்கையில் குழந்தைகளின் பிரதான்யத்தை எல்லோரும் நன்குணர்ந்து குழந்தைகள் தகுந்தபடி விருத்தியாவதற்கு ஏற்ற உபாயங்களைத் தேடிக்கொண்டிருக்கிறார்கள். இவ்வுபாயங்களை "கிண்டர்கார்டன்" என்னும் சிக்ஷணமுறையில் காணலாம்.

ஆனால் "கிண்டர்கார்டன்" என்கிற பதத்திற்கு வெகு விபரீதமாய் பொருள் கொண்டிருக்கிறார்கள். திருத்தற்கரிதாம்படி இப்படி விபரீதமாய் அனர்த்தம் கொள்ளப்பட வேறு பதம் இருப்பதாகவே தெரியவில்லை "கிண்டர்கார்டன் என்றால் பெட்டி பண்ணுவது, காகிதம் கிழிப்பது, கட்டைகளும் குச்சிகளும் வைத்துக் கொண்டு விளையாடுவது, இல்லாமற்போனால் "பைத்தியக்கார ஆட்டங்கள்" ஆடுவது, என்று ஸாமான்யமாய் அபிப்பிராயம் இருப்பதாகத் தோன்றுகிறது. படித்தவர்கள் செவ்வையாய் விஷயங்களை அறியக்கடவரா யிருக்கையிலும் அவர்களுக்கு கிண்டர்கார்டன் என்பது உள்ளபடி இன்னதுதானென்று பிடிபட்டதாக ஏற்படவில்லை. இதுவே ஸ்கூல் இன்ஸ்பெக்டர்களிற் சிலர் தாங்கள் கிண்டர்கார்டனை ஒத்துக்கொள்ளவில்லையென்று பெருமையடித்துக் கொள்வதற்கும் வேறு சிலர் "இந்தியா கிண்டர்கார்டனுக்குப் பக்குவமான தசையில் இல்லை" என்று சொல்வதற்கான காரணங்களில் ஒன்றாயிருக்கலாம். போதனைக்கிரமப் புத்தகங்கள் எழுதுவோர்கூட 'கிண்டர்கார்டன்' என்று ஒரு அத்தியாயம் எழுதுகிறார்கள். ஆனால் அதில் பிரோபெல் சொன்ன வஸ்துக்களையும் தொழில்களையும் விவரிப்பது தவிர அந்த அத்தியாயத்தில் வேறொன்றுமில்லை. இத்தால் என்ன ஏற்படுகிறதென்றால், அவர்கள் பிரோபலினுடைய கிரந்தங்களை தொட்டுபார்த்திருந்தாலும் அவற்றின் கருத்தை அறிந்தவர்களன்றென்பதுதான்.

கிண்டர்கார்டன் என்பது ஒரு பாடமன்று. அது ஒரு முறை. அதன் நியாயங்கள் பள்ளிக்கூடமுழுவதும் ஊடுருவி பரந்துகிடக்கும். இம்முறையை ஏற்படுத்தியவர் ஜர்மனி தேசத்தில் பிறந்தவராகிய ப்ரெடரிக் பிரொபெல் என்பவர். குழந்தை ஜீவனின் பாவங்கள் குழந்தை விளையாட்டுக்களில் பூர்ணமாய் பிரகாசிப்பதை அவர் கண்டார். பிற்காலத்து அபிவிருத்திகளெல்லாம், விதைக்குள் மரம் அடங்கியிருப்பதுபோல், குழந்தை விளையாட்டில் அடங்கியிருப்பதைக் கண்டுணர்ந்தார்.

கிண்டர்கார்டன் என்கிற வார்த்தைக்கு "பிள்ளைகள் தோட்டம்" என்று பொருள். கிண்டர்கார்டனில் பிள்ளைகள் மனுஷ்ய ரூபமான புஷ்பங்களாக பாவிக்கப்படுகிறார்கள். அவர்களை நிர்ப்பந்திப்பதில்லை, தடுப்பதில்லை. ஆனால் புஷ்பங்களைப்போல் இயற்கைப்படி பிரவர்த்திக்க விடப்படுகிறார்கள். அவர்களை சிறு இயந்திரங்களாகப் பாவித்து நடத்துவதில்லை. தோட்டக்காரனுக்கு ஸமான்ய புத்தி மிகவுண்டானதால் தன் புஷ்பங்கள் இயற்கைக்கு மாறான வெறெந்தவிதமாயும் வளரவேண்டுமென்று எதிர்பார்ப்பதில்லை. முதலில் நிலத்தை தகுந்த வழியில் பண்படுத்தி அப்புறம் விதைக்கிறான்; செடிகளுக்குத் தண்ணீர் வார்க்கிறான்; வேண்டியபோது கழிக்கிறான்; களையிருந்தால் பிடுங்கி யெறிகிறான்; கொழுகொம்பு வேண்டியதற்கு கொழுகொம்பு சொருகுகிறான்; இதெல்லாம் தவிர்த்து மற்றதை இயற்கையே செய்யும்படி விடுகிறான். அதேமாதிரி கிண்டர்கார்டன் முறையை ஆசரிப்பவர்களும் பாலர் தோட்டக்காரனும் பிள்ளைகளுக்கு கற்பிக்க முயலுமுன் அவர்கள் இயற்கை ஆசைகளை முதலில் கவனிக்க வேண்டியது. உபாத்தியாயர்கள் பிள்ளைகளுடைய ஸ்வாபவத்தை தற்போது கவனித்தறிவதைவிட அதிகமாய் கவனித் தறியவேண்டும். ஸாத்தியமானவரையில் பிள்ளைகளுக்கு ஸ்வாதந்தரியம் கொடுக்க வேண்டும்.

இம்முறையின் முக்கிய அம்சங்களாவன 1. ஸ்வப்பிரயத்தனம், 2. ஸ்வாதந்தர்யம், 3. கற்பனசக்தி, 4. ஸம்பந்தம்.

இம்முறையின் கருத்து பிள்ளைகளை நன்றாய் வேலை செய்யவும், நன்றாய் விளையாடவும், காரியங்களில் அதிஉற்சாகமாயிருக்கவும், உபயோகமானவழியில் ஒற்றுழைக்கவும் செய்வதே.

## உபாத்தியாயர்.

சிறு குழந்தைகளுக்கு கற்பிப்பவன் முகமலர்ச்சி அகமகிழ்ச்சி யுடையவனுய் குழந்தைகளிடத்து அன்பும் உடனுணர்ச்சியுமுள்ள வனு யிருக்கவேண்டும். பாடவும், வாத்தியப்பெட்டி முதலியவை வாசிக்கவும், பலகையில் சித்திரம் முதலியவரையவும் வல்லவனு யிருக்கவேண்டும்.

கல்வி.—அவன் கற்றவற்றுள் பின்வருவனவை சேர்ந்திருக்க வேண்டும். 1. நல்ல நூல்களில் முக்கியமாய் செய்யுளில் பரிசயம் வேண்டும். ஏனெனில் கவியின் அலங்காரோக்திகள் குழந்தை பருவத்திற் கேற்றவையாயும் களிப்பூட்டுவையாயு மிருக்கின்றன. 2. குழந்தையின் இயற்கையைப் பற்றிய அறிவு வேண்டும். இந்த அறிவு குழந்தை ஸ்வபாவத்தை தானே நேரில் ஊன்றிப்பார்த்து வந்த அனுபவத்தினடியாகவும், சரீர தத்வசாஸ்திரம் மனஸ் தத்வசாஸ்திரம் இவைகளை யதோசிதமாய் கற்றதின் உதிவியாலும் வரவேண்டும். 3. தாவரவர்க்கம் ஜீவவர்க்கம் இவற்றைப்பற்றி கற்றிருக்கவேண்டும். 4. ஸாதாரணமான கைத்தொழில்களில் அப்பியாசம் இருக்கவேண்டும். இருந்தால்தான் குழந்தைகள் பரபரவென்றிருக்கும் காலத்தில் பயன்படும் வழியே அவர்களை செலுத்த வகை தெரியும்.

கடமைகள்.—உபாத்தியாயரின் கடமைகள் பிரபலமானவை. அவற்றை செவ்வென செய்யத் தைரியமும் சிரத்தையும் வேண்டும். குழந்தையின் சக்திகளும் திறமைகளும் விகாஸமடைந்து வருவதை ஊன்றிப் பார்த்து வருவதோடு, குழந்தைக்கு நல்லதில் விருப்பமும், கெட்டதில் வெறுப்பும், உண்டாகச் செய்யவேண்டும். புதிய ஆசைகளை எழுப்பி, புதுப்பற்றுதல்களை வளர்த்து, இயற்கை நற்குணங்களை கிளப்பி, இவற்றுல் உண்டாகும் ஆவல்களை தணிக்குமாறு நூல்கள், இயற்கை செயற்கைகளின் ஸமிருத்தியைக் காட்டித் தர வேண்டும்.

உபாத்தியாயருக்கு பின்வருவன நினைவி லிருக்கவேண்டும். முதலாவது குழந்தை தானே விருத்தியாக திராணி அடைவிப்பது உபாத்தியாயர் காரியம்; நிர்ப்பந்தமாய் விருத்தியாக்குவதன்று. இரண்டாவது: ஒழுக்கம், புத்தி, தேஹம் இவை விருத்தியாவதற் கனுகூல

மான நிலைகளில் குழந்தைகளை அமர்த்தவேண்டுமே யொழிய, மனம் போனபடியாவது, தன் புத்திக்கு சரியெனப் பட்டாலும்கூட அப்ப டியாவது, ஒழுக்கம் முதலியவற்றில் குழந்தையை இப்படியும் அப்படியும் இழுக்கக்கூடாது. மூன்றாவது இதமான விஷயங் களில் பற்றுதல் போம்படியும், சக்திகள் அப்பியாஸத்தால் பெருகு வதால் அவை சுபாவ வழியாய் உபயோகப்படுவதற்கும் தக்க ஸாத னங்களை தேடி வைக்கவேண்டுமே யொழிய உபாத்தியாய ரிஷ்டத் தையே முன்னிடக்கூடாது. நான்காவது ஏவுதலால் குழந்தையா னது நல்லதை செய்வதைவிட குழந்தை நல்லதை இச்சிக்கும் படிக்கும் அந்த இச்சையால் நல்லதை செய்யும்படிக்கும் தூண்டு வது மேலாகும். [ஏவாமக்கண் மூவாமருந்து]

'ஓதுவதொழியேல்' என்பதை உபாத்தியாயர் கைக்கொள்ள வேண்டும். ஞானத்தையே நாடி நிற்கவேண்டும். பெரிய நூலாசிரி யர்கள் "ஸல்லாபத்துக்கு ஒருபோதும் தட்டில்லை என்பதையும், அந்த ஸல்லாபத்தால் தயாதாக்ஷிண்யாதி குணங்களையும், அறிவையும் பெருக்கிக்கொள்ளலாம் என்பதையும்" உபாத்தியாயர் மறத்தலாகாது. குழந்தைகளுடைய பெற்றோர்களின் ஸஹவாஸத்தால் அன்பு முத லிய குணங்கள் பெருகும். பாலர்களுடன் பழகுவதால் புத்தி சோர்வின்றி ஸ்புரத்தாயிருக்கும். பெரிய நோக்கங்களை கருத்திலிருத் திக்கொண்டு பிள்ளைகளிடத்தில் அன்பு ஆதரவுடன் நடந்தால் உபாத்தியாயரின் சீலம் குறை நீங்கி நிறைவுபெற்று சிறப்புற்று விளங்கப்பெறும்.

## குழந்தை.

பிறந்த ஏழு வயதுவரையில் குழந்தையின் மூளை வெகு விரை வாய் வளர்கிறது. இவ்வளவு துரிதமாய் வளர்ந்துவரும் காலத்தில் புத்திக்கு அதிக சிரமம் கொடுக்காமல் அதிக ஜாக்கிறதையாய் பார்த்து வரவேண்டும். குழந்தைக்கு வெகு நேரம் வரைக்கும் ஒரே விஷயத்தை நாடி நிற்கவியலாது. ஆனதுபற்றி எந்தப்பாடத்துக்கும் 20 நிமி ஷத்திற்குமேல் கால அளவு கூடாது.

அசைவற்று உட்கார்ந்திருப்பது சிறு குழந்தைகளி னியல்புக்கு மாறாகும். ஆதலால் உலாவுதற்கும், திடம்தரும் ஆட்டங்கள் ஆடு வதற்கும், பலவகைப் பொருள்கள்கொண்டு தன்னிச்சையாய் பாவப்

பிரகாசமான செயல்களைச் செய்வதற்கும் அடிக்கடி அவகாசங்கள் தரவேண்டும். ஆலோசிக்குங்கால் குழந்தை இயங்குவதற்கு ஏராளமான அவகாசம் கொடுப்பதால் அவன் மூளை அபிவிருத்திக்கே வழி செய்கிறோம். ஏனெனில் சிறு குழந்தை எத்தனைக் கெத்தனை பலவிதமான பயிற்சியடைகிறதோ அத்தனைக்கத்தனை அதிகமாய் அவன் மூளை அபிவிருத்தியாகிறது.

**கூடியமட்டில் தன்னிச்சையாய் விடுவதன் ஆவசியம்.**—ஸதா கட்டுக்காவல் கண்காணித்தலில் வளரும் குழந்தைக்கு பிறர்மேல் சார்ந்திருப்பது இயல்பாய்விடும். மேலும் மிகவும் சுயேச்சையாய் வளரும் குழந்தையைவிட அது மூளைவலுவிலும் குறைந்திருக்கும்.

குழந்தையின் பிரத்தியேகத்துவப் பிரகாரத்தை கணிசிக்கவேண்டும். அவனுக்கு வேண்டிய அளவு அவகாசம் கொடுத்து அவன் சாமர்த்தியத்தாலாகாதபோது தான் ஒத்தாசைக்கு போகவேண்டும்.

இளமையில் ஏற்பட்ட வழக்கங்கள் பிற்கால முழுதும் பாதிக்குமாதலால், பணிவு, பொறுமை, வேளைதப்பாமை, சுசியாயிருத்தல்களை குழந்தைகள் அறிந்துகொள்ளும்படி செய்யவேண்டும். தயை, மரியாதையான காரியங்கள், இன்னவை யென்று காட்டி அவற்றைச் செய்ய உற்சாகப்படுத்த வேண்டும்

அநுஷ்டானத்தின் பிரபாவம் எல்லாம் வல்லது. குழந்தையை அன்பாயும் ஆதரவாயும் நடத்தவேண்டியது. அது குழந்தையின் உரிமையென்பதை உபாத்தியாயர் நன்குணரவேண்டும். குழந்தையின் எதிரில் அவனைப்பற்றி விவேகமற்ற வார்த்தைகளைச் சொல்வது தவறு.

உபாத்தியாயர் தன் நடையுடை பாவனை பேச்சு இவற்றை ஒருபோதும் மறக்கக்கூடாது. ஏனெனில் சிறு பிள்ளைகள் பார்ப்பதையெல்லாம் தங்களையுமறியாமல் அநுகாரம் செய்கிறார்கள். உபாத்தியாயரைப் பார்த்துத்தான் பெரும்பான்மையாய் பிள்ளைகள் தன் நோக்கங்களை ஏற்படுத்திக் கொள்ளுகிறார்கள்.

குழந்தையின் இச்சாசக்தியை வளர்க்கவேண்டும். அதை நசுக்குதல் கூடாது. சுறுசுறுப்பை நல்ல வழிகளில் செலுத்தவேண்டும், முற்றிலும் அடக்கிவிடக்கூடாது.

குழந்தையின் கண், கிட்ட இருக்கும் பதார்த்தங்களை பார்க்கும் படி, அமைந்திருக்க வில்லை. அதன் பார்வை தூரப்பார்வை. வயதாறு ஆகும் வரையில் நுட்பமான வேலை செய்யச்சொல்லக் கூடாது. புஸ்தகங்களிருந்து வாசிக்கச் சொல்லவும் கூடாது.

வெளிச்சத்தை பார்த்துக்கொண்டு உட்காருவதால் கண்களுக்கு அதிக கூச்சமுண்டாகும்.

சிறு தசைகளுக்கு முன் பெருந்தசைகள் வளர்கின்றன. ஆகை யால் செய்யும் வேலையானது கை நீட்டினபடி வரைதல், மணலி லும் சிறுபாத்திகளிலும் கொத்துதல், பெருங்கட்டைகளை கொண்டு கட்டுதல் போன்ற பெரிய இயக்கங்களையுடையதா யிருக்கவேண்டும்.

## உபாத்தியாயரும் பெற்ருேரும்.

குழந்தையின் நற்குணங்களைப் பயிற்றுவதிலும் நல்ல வழக்கங் களை உண்டாக்குவதிலும் உபாத்தியாயரும் பெற்ருேரும் ஒற்றுமைக்க வேண்டும். இவ்விஷயமாய் அவரவர்க்குள்ள சிரமங்கள் என்னவை யென்று ஒருவரையொருவர் பார்ப்பதாலும் பெற்ருேர்கள் குறித்த தினத்தில் பள்ளிக்கூடத்தில் வந்து விசாரிப்பதாலும் தெரியவரும்.

## ஆறுவயதிற்குட்பட்ட குழந்தை யிருக்கவேண்டிய சந்நிவேசம்.

1. வெளிச்சமும் காற்றும் நன்ருய் உலாவும் விசாலமான அறை.
2. குழந்தைகள் எளிதில் தூக்கிப்போட்டுக் கொள்ளும்படியான சிறு மேஜைகள் நாற்காலிகள்.
3. விளையாடுவதற்கு இடம்.
4. தோட்டம்.

# முதற்பாகம்.

## ஆறுவயதிற்குட்பட்ட குழந்தை.

### அத்தியாயம் I.

குழந்தை—பாடக்கோத்து.

குழந்தை இயற்கையின் ஆராய்ச்சியால் நமக்கு தெரிந்தவையாவன:

1. குழந்தை யதேச்சையாய் இயங்கவேண்டும்.

2. அதன் தசைகளுக்கு நிர்பந்த மில்லாமல் தக்கவேலை கொடுக்கவேண்டும்.

3. அதிக நேரம் குழந்தையை நிர்பந்தத்தில் வைக்கக் கூடாது. ஒரு பாடமானதும் யதேச்சையாய் விளையாட விட வேண்டும்.

4. இயற்கையாய் தானறியாமலே தன்னைச் சுற்றி இருப்பதைப் பார்த்து குழந்தை அநுகாரம் செய்கிறது. அதுதான் குழந்தை தன் மனோபாவத்தை தெரிவிக்கும் வழி. ஆகையால் அநுகாரத்துக்கு தக்கமாதிரிகளை அவனுக்கு தரவேண்டும். குழந்தையின் இயல்பையும் அவனுக்கு வேண்டியவற்றையும் அவன் உணர்வும் பற்றும் போகும் வழியையும் அநுசரித்து மாதிரிகளை தேர்ந்தெடுக்க வேண்டும்.

5. குழந்தை பிணியின்றி வளர்வதற்கு தூக்கம் வெகு அவசியம். ஆகையால் அவசியமானபோது தூங்குவதற்கு தக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

6. குழந்தைகள் அசைவற்று வெகு நேரம் உட்கார்ந் திருக்கக் கூடாது. அவர்களின் ஆசனங்கள் எளிதில் நகர்த்தக் கூடியவையா யிருக்கவேண்டும்.

7. வெய்யில், மழை முதலியவை இல்லாதபோது திறந்த வெளிகளில் வேலைசெய்ய வேண்டும்.

## இயற்கை பற்றுதல்கள்.

குழந்தைகளுக்கு பிராணிகளிடத்தில் கொண்டாட்டம். குழந்தைகளின் பருவத்திற்கேற்ற பொருள்களை தேடிவைக்க இச்சிக்கும் புத்தியான உபாத்தியாயர் கூடியவரையில் இயற்கைவர்க்க பொருள்களையே குழந்தைகளைச் சுற்றி வைக்க முயலுவார். மூன்று நான்கு வயதுக் குழந்தைகளுக்கு பிராணிகளைக் கண்டால் வெகு ஆசை. ஆகையால் புறு, குழி முயல், ஆட்டுக்குட்டி, பூனை, கோழி, மீன் முதலியவற்றை பள்ளிக்கூடத்திலும் விளையாடும் இடங்களிலும் வளர்க்கலாம். இந்தப் பருவத்தில் குழந்தைகளுக்கு ஒன்றைப் பார்ப்பதைவிட ஒன்றை செய்வதிலேயே நோக்கம். பிராணிகளுக்கு தீனி கொடுக்கவும், தண்ணீர் காட்டவும், புல் போடவும், அவற்றினிடத்தில் பிரீதியாய் நடக்கவும் குழந்தைகளை விட வேண்டும். பிராணிரக்ஷணம் மனுஷ்யனை இரக்க சுபாவமுள்ளவனுக்க வல்லது. குழந்தைகளை தங்களுக் கிஷ்டமான ஜந்துக்களுக்கு தீனி போட்டு ரக்ஷிக்க விடுவது பிராணிகளிடத்தில் அவர்களுக்கு பிரீதியும் கௌரவமும் உண்டாக்க சிறந்த மார்க்கமாகும். குழந்தைகள் இரைச்சலும் சேஷ்டைகளும் நிறைந்த சாமான்ய பள்ளிக்கூடத்தில் கூட புறுக்கள் முட்டையிட்டு குஞ்சு பொரிக்கும்.

சில பள்ளிக்கூடங்களில் பல காரணம்பற்றி இஷ்டமான ஜந்துக்களை வளர்க்க முடியாது. அந்தப் பள்ளிக்கூடங்களில் ஓரோர் நாள் அப்படிப்பட்ட ஜந்துக்களை கொண்டு வரலாம். பொதுவாய் பிள்ளைகளுக்கு தங்கள் வீட்டு ஜந்துக்களை பள்ளிக்கூடத்திற்கு கொண்டுவரவும் எல்லோரோடு சேர்ந்து கொண்டு தீனி போடவும் அவற்றோடு விளையாடவும் வெகு சந்தோஷம்.

பிராணிகள் இருப்பதோடுகூட சிறு பிள்ளைகள் ஒவ்வொன்றிற்கும் ஒரு பாத்தி கொடுக்கவேண்டும். அவர்கள் அதில் இஷ்டமான செடியை வைத்து தண்ணீர்கொட்டி வளர்ப்பார்கள். பூக்கும்போது பூவைப் பறித்து உபாத்தியாயர் மேஜைக்காவது, வீடுகளிலோ வைத்திய சாலைகளிலோ உடம்பு செம்மையாய் இல்லாமலிருக்கும் குழந்தை இருந்தால் அவனுக்காவது கொடுக்கலாம். உபாத்தியாயர் மேஜை

யின்மேல் ஒரு பூப்படிகம் இருக்கவேண்டும். குழந்தைகள் அதுநிறம்ப தினம் பூ கொணர்ந்துவைத்து, அன்றன்று புது ஜலம் கொட்டி பூக்களை வாடாமல் பார்க்கவேண்டும்.

சூரியன், சந்திரன், நக்ஷத்திரம், ஆகாசம், மேகம், மழை, சாயை, சூரியாஸ்தமனம், மரங்கள், வானவில் இவற்றை எல்லாம் கவனிக்கும்படி சிறு குழந்தைகளை தூண்டி உற்சாகப் படுத்தவேண்டும். இயற்கை சக்திகளைப் பார்த்து குழந்தைகளாயிருக்கும்போது அவர்கள் ஆச்சரியப் படுவதானது நம்மைச் சுற்றிலுமுள்ள "பெருமை தங்கிய அழகுவாய்ந்த அற்புத உலகை" பிற்காலத்தில் அவர்கள் ஆழ்ந்தறியவும் அனுபவிக்கவும் எல்லாம் படைத்த இறைவனிடத்தில் பக்தி பண்ணவும் ஒரு உபாயமாகலாம்.



## அத்தியாயம் II.

### தேகப்பயிற்சி.

பள்ளிக்கூட நேரத்தில் பெரும்பாகத்தை விளையாட்டு இயக்கங்களில் செலவிடவேண்டும். அவ்வியக்கங்களுள் தன்னிச்சையாய் விளையாடுவது, வரிசையாய் நடப்பது, ஓடுவது, நொண்டுவது, தாளத்துக்கு இசைந்தாற்போன்ற இதர இயக்கங்கள் சேர்ந்திருக்க வேண்டியது. தன்னைச் சுற்றிலுமுள்ளதைப் பார்த்து அநுகாரம் செய்வது குழந்தைக்கு இயல்பு.

பெரியவர்கள் செய்வதை தாங்களும் செய்யவேண்டுமென்று பிள்ளைகளுக்கு ஆசை. வேலை செய்வோர்களைப் போல் அவர்களை செய்ய உற்சாக படுத்தவேண்டும். அப்படிச் செய்தால்தான் குழந்தைகளுக்கு பார்த்தவைகளின் தன்மை பூர்ணமாய் புலப்படும். இதனால் அவர்கள் புத்திஸ்புரத்தாய் கிளம்பும். உன்னிப்பார்க்கும் சக்தியும் உடனுணர்ச்சியும் வலுக்கும். வேலையில் கௌரவம் தோற்றும். கையால் செய்யும் வேலைகளில் மூளைக்கு பயிற்சி ஏற்படுவதால் குழந்தைகளின் தேகப்பயிற்சியில் கைவிரல்களுக்கு பலவித வேலை கொடுப்பதையும் சேர்க்கவேண்டும்.

## விரல் ஆட்டங்கள்.

I. (1) அவயங் காக்கும் பெட்டைக்கோழி,
அன லாக்கவே முட்டைகளை,
நாள்க ளாய்க் காத்திருக்குமே.



(2) கேட்கும் ஓர்சத்தம் பெட்டைக்கோழி,
குஞ்சுகள் தோடு உடைப்பதை,
டிக் டிக், என்று கத்திக்கொண்டு.

(3) கூட்டமாய் குஞ்சு வெளியேற,
பெட்டை பெருமை யடையுமே,
கெக் கெக், கென்று அழைக்குதே.

(4) கூட்டிற்குள் கோழி யடையவே,
குஞ்சுகள் வெளியே அலையுமே,
எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டு.



(5) தானியம் தட்டில் இங்கேயுண்டு,
தின்னுங்கள் கோழி குஞ்சுகளே,
பொறுக்கி பொறுக்கி பொறுக்கியே.

(6) வந்தனம் நாம்போய் வருகிறோம்,
சந்தோஷம் திரும்ப சந்திப்பது,
பெட்டை சிறு குஞ்சுகளே.





II. (1) பாலர்கள் உருட்டும் பந்துதானிது,
பலமாய் அடிக்கும் சம்மட்டியிது.

(2) பாலர்கேற்ற பாட்டு கைத்தட்டுகளே,
வீரர்கள் அவர்க்கு நிற்கிறார்களே.



(3) பாலர்ஊதும் காளம் றாற்று றாற்றுவாம்,
விளையாடுவாராம் கண்ணும் பூச்சியாம்.

(4) பாலர்களைக் காக்க குடையொன்றுண்டு,
பத்திரமாய்த் தூங்க தொட்டிலொன்றுண்டு.

### சுவாசப் பயிற்சி வகைகள்.

இவற்றை தினந்தோறும் திறந்த வெளியில் செய்யவேண்டும். பிள்ளைகளுக்கு இந்தப் பயிற்சிவகை விளையாட்டுக்களாய் இருக்கவேண்டும். உபாத்தியாயர் மிகக் கவனமாய் இவற்றை பார்த்துக்கொண்டு நடத்தவேண்டும். அனேக சிறு பிள்ளைகளின் வகுப்புகளில் பின்வரும் பயிற்சிவகைகளை மிகக் களிப்புடன் செய்திருக்கிறார்கள்.

**போய் பையில் காற்று அடைத்தல்.**—இப்பயிற்சி வகை ஆரம்பிக்கும் முன் ஒரு பிள்ளை வகுப்புக்கு முன்னாவது பிள்ளைகள் சூழ நடுவில் நின்றுகொண்டாவது ஒரு காகிதப் பையை ஒரு மூச்சில் உப்பச்செய்தால் பிள்ளைகளுக்கெல்லாம் உற்சாகம் அதிகம் ஆகும். அந்தப் பையை காற்றால் நிரப்ப அனேக தடவை அப்படிச் செய்யவேண்டி வரும். இதனிடையில் "நிறைய மூச்சு இழுக்கவேண்டும்" என்று சொல்லி அப்படிச் செய்வது அவசிய மென்பது பிள்ளைகள் மனதில் நன்றாய் பதியும்படி செய்யலாம். ஒரு பிள்ளையைக் கூப்பிட்டு காற்றால் நிரம்பிய பையை கையால் தட்டி உடைக்கச்செய்தால் பிள்ளைகளுக்கெல்லாம் வெகு வேடிக்கையாயிருக்கும்.

பிள்ளைகள் எல்லாரும் தாங்களும் அந்தமாதிரி செய்ய இப்போது தயாராயும் ஆவலாயுமிருப்பார்கள். உபாத்தியாயர் பெருமூச்சு எப்படி இழுப்பது என்று காண்பித்துவிட்டு பின்வரும் எச்சரிக்கை வார்த்தைகளின்படி அவர்களை எளிதில் செய்விக்கலாம். (1) மூச்சு இழு. (2) பையைத் தூக்கிப்பிடித்து காற்றடை (பிள்ளைகள் கைகள் இரண்டையும் வாயண்டை வைத்து உள்ளிருக்கும் மூச்சை எல்லாம் வெளி விடவும்). (3) பையை உடை (பளாரென்று கைகளைக் கொட்டவும்).

**இறகு ஊதிவிடல்.**—பிள்ளைகள் வட்டமாய் நிற்கவும். பெருமூச்சு இழுத்து சிறு இறகை ஊதி ஆகாசத்தில் பறக்க விடவும்.

**வர்ணமுள்ள சிறு புகைக்கூண்டை ஊதிப் பறக்கவிடல்.**—சின்ன புகைக்கூண்டு ஒன்றை உபாத்தியாயர் நூலால் பிடித்துக்கொள்ளவும். பிள்ளைகள் முன்போல் சுற்றி நின்றுகொண்டு

மூச்சு இழுத்து பிறகு மூச்சுவிட்டு கூண்டை உயரப் பறக்க விடவும். இப்படி பலமுறை செய்யலாம்.

**சோப் கோப்பளம் விடுதல்.**— இது பிள்ளைகளுக்கு வெகு வேடிக்கையான பொழுதுபோக்கு சரியான பிரகாரம் மூச்சு விடும்படி வற்புறுத்தலாம். சுவாசப் பயிற்சிவகைகளிலெல்லாம் மூச்சு இழுக்கும்போது வாயை மூடிக் கொள்ளும்படி நினைப்பாய் செய்யவேண்டும்.

## உபாத்தியாயர் செய்வதை அநுகாரம் செய்தல்.

தேகப்பயிற்சியில் குழந்தையின் அநுகார சக்தியை நன்கு உபயோகிக்கவேண்டும். எச்சரிக்கையைக் கேட்டும் சங்கீதத்துக்கு இசையவும் செய்யும் பயிற்சிவகைகளைவிட சிறுபிள்ளைகள் அநுகாரம் பண்ணிச் செய்யும்பயிற்சிவகைகள் சில சமயங்களில் அதிக பலனை தரத்தக்கவை. உபாத்தியாயர் செய்யும் எளிதான பயிற்சிவகைகளை கவனித்து தவறாமல் அநுகாரம் செய்தலால் குழந்தைக்கு தன் இயக்கங்களை ஒன்றுக்கொன்று பொருந்தச் செய்யவும் தயாராய் பதிலளிக்கவும் தன்னையறியாமலே பழகிவிடுகிறது. அங்கநேர்மையாய் உட்கார்தல், நிற்றல் முதலியவை பழக்கத்தில் வந்து விடுகின்றன.

பின்வரும் பயிற்சிவகைகள் சிறு விளையாட்டுக்களாக இந்தப் பள்ளிக்கூடத்தில் நடத்தப்பட்டிருக்கின்றன. பிள்ளைகளுக்கு குதூகலமாயிருக்கிறதோடு மிகப்பயனுள்ளதாயுமிருக்கின்றன. பிரமாதமான கருவிகளாவது பிரயத்தனங்களாவது வேண்டுவதில்லை. ஆனால் வேண்டியதெல்லாம் கூடி எல்லாம் நிஜம்போல் எண்ணி உற்சாகப்படுத்த வேண்டியது. அதனால் இதுவரையில் ஏற்பட்டுள்ள முறைகளுள் மிகவும் சிறந்து எல்லா விஷயங்களும் அடங்கிய முறைப்படி தேகப் பயிற்சியை சிக்ஷித்து வருகிறோம் என்கிற திருப்தி உபாத்தியாயருக்கு உண்டாகும்.

## ஆரம்ப பயிற்சிகள்.

**மூச்சு விடுதல்.**—பிள்ளைகள் ஒன்றன்பின் ஒன்றாய் நின்று முன்னவன் தோள்மேல் கைகளை வைத்துக்கொண்டு, குதிகால் படாமல் முன்னங்கால்களில் நின்று மூச்சு இழுத்து

ஓடும் வரையில் வண்டிமாதிரி சு, சு, சு, என்று புறட்படு கிறது. பச்சைக்கொடியும் ஊதலுமுள்ள ஒரு கார்டும் சிவப் புக்கொடியோடு ஒரு—'ஸிக்னல்' ஆளும் இருந்தால் ஆட்டத் தில் பிள்ளைகளுக்கு மிகவும் சந்தோஷம். இரண்டு வரிசை கள் ஏற்படுத்து. விளையாடுமிடத்துக் கோடிகளில் பிள்ளை களுக்குத்தெரிந்த இரண்டு ஸ்டேஷன்களின் பெயரை வைக்க வும். (உ-ம்.) சைதாப்பேட்டை, எழும்பூர்.

தலையை (1) முன்னுக்கு வளைத்தல்.—சீனத்தான் மாதிரி (சீனத்து பொம்மை மாதிரி) மேல், கீழ், மேல்.

(2) பின்னுக்கு வளைத்தல்.—குள்ள வாத்துக்கள் மாதிரி தண்ணீர் குடிக்கிறதற்கு தலையை நன்றாய் வளைத்து, உயரத் தூக்கி விழுங்குகிறது. மறுபடி சின்னக் குட்டையில் தலை யைக் கொண்டுபோய் வாயில் தண்ணீரைக் கொள்கிறது.

(3) பக்கவாட்டில் வளைத்தல்.—கடிகாரத்தின் பெண்டுலம் மாதிரி டிக் டிக் என்றுகொண்டு வலம் இடமாக பக்கவாட் டில் வளைத்தல்.

உடம்பை வளைத்தல்.—பூப்பொறுக்குதல்; குனிந்து பூவைப் பொறுக்கி பிறகு நிமிர்ந்து நின்று நன்றாய் மூச்சிழுத்து 'பூவை முகர்ந்து பார்க்கிறது'. பூ நல்ல வாஸனையுள்ளதென்று 'ஓ' 'ஆ' என்று மூச்சை வெளிவிடுகிறது.

கையை நீட்டல்.—(1) 'பம்பு' அடித்து ஜலம் இறைத்தல். இரண்டு கைகளாலும் நன்றாய் சுறுசுறுப்பாய் வேலைசெய்யவும். கையைப்பற்றிய பயிற்சிகளில் சுறுசுறுப்பு இருந்தால்தான் பிரயோஜனம்.

(2) கத்தியால் வெட்டுதல், சம்மட்டி அடித்தல், ரம் பத்தால் அறுத்தல் முதலியன. குழந்தைகள் வலது கையா லும் இடது கையாலும் மாற்றி மாற்றி மேற்சொன்ன வேலை களை அநுகாரம் செய்தல்.

(3) டக் அவ்வார் (வடமிழுத்தல்).—இரண்டு வரிசை ஜோடி கள் எதிரெதிராய் நிற்கவும். நடுவில் நீள ஒரு கோடுபோட்டு வலதுகாலை கோட்டிற்கு சரியாய் வைத்து வலது கையால் பிடித் திழுக்கவும். கோட்டைத்தாண்டி இழுக்கிறவன் கெலித்தான். இந்த மாதிரி இடது காலை வைத்து இடது கையால் செய்யவும்.

(பாலன்ஸ்) நிலை புரளாமை.

1. **சுவர்மேல் எட்டிப் பார்த்தல்.**—இது ஒரு சுவர் என்று உபாத்தியாயர் குழந்தைகளின் கண்களுக்கு சற்று மேலாக கையை நீட்டி இதன்மேல் யார் எட்டிப்பார்க்க முடியும் என்று கேட்கவும். குழந்தைகள் நன்றாய் எழும்பி முன்னங் கால்மேல் நிற்கும்படி கையை சற்று உயர்த்தவும். அவர் கள் நன்றாய் எழும்பும்படி பக்கத்துத் தோட்டத்தில் நேர்த்தி யான பழங்களும், பூனைக் குட்டிகளும், குழந்தைகளும் இருப்பதாகவும், எட்டிப் பார்த்தால் தெரியுமென்று சிறுகதை கள் கட்டி சொல்லல்.

2. **ராக்ஷதனும் குள்ளனும்.**—குழந்தைகள் கைகளை தலை க்குமேல் தூக்கிக்கொண்டு முன்னங்கால்லால் 4 அடி நடக்க வும், பிறகு இடுப்பில் கைகளைவைத்து முழங்காலை நன்றாய் நீட்டி முதுகை நிமிர்த்திக்கொண்டு 4 அடி நடக்கவும். நாலு தப்படிக் கொருதரம் இப்படி மாற்றி மாற்றி செய்யவும்.

3. **தண்ணீர் கொண்டுவருதல்.** — பிள்ளைகள் தலையில் தண்ணீர்க் குடமிருப்பதாக நினைத்துக்கொள்ளட்டும், அல்லது புஸ்தகங்களை வைத்துக்கொள்ளட்டும். தலை நிமிர்ந்திருக்கும் படி சொல். காலை நன்றாய் ஊன்றி தடுமாறாமல் நடக்கவும்.

4. **கனிகளில் வேலை செய்வோர்போல் உட்காருதல்.**—குழந் தைகள் முழங்காலை மடக்கி நன்றாய் முன்னுக்கு நீட்டி குதி மேல் உட்கார்ந்து பிறகு கைகளால் முழங்காலை கட்டிக்கொள் ளவும். அனேகதடவை பிரயத்தனம் பண்ணினால் சரியானபடி உட்கார முடியும்.

5. **சிபாய் வட்டம்.**—மழைகாலத்தில் சிபாய்கள் அதிக தூரம் நடந்த பிறகு, பூமி ஈரமாயிருந்தால் வட்டமாய் வந்து நெருங்கி நின்று 'உட்காருங்கள்' என்றவுடன் நாற்காலியில் உட்காருவதுபோல் காலைமடித்து பின்னிற்பவன் முழங்கால் களில் உட்காருகிறார்கள்.

6. **தேவதை நடை.**—கைகளை தோள்மட்டத்தில் பக்கத்தில் இரக்கை மாதிரி விரித்து சத்தப்படாமல் முன்னங் காலில் நடத்தல்.

7. **சேவல் நடை.**—சேவலைப்போல் சுற்றிலும் குழந்தைகள் நடக்கவும். முதலில் வலக்காலை எடுத்து ஆரம்பிக்க வேண்டும். நடப்பதில் மூன்று வித இயக்கங்களிருப்பதால் பளு வலதுபக்கமும் இடதுபக்கமும் மாறிமாறி விழும். கீழ்காட்டப்பட்ட விதம் அந்த இயக்கங்கள்.



8. **ஏற்ற மரம்.**—இருவர் எதிரெதிராய் நின்று இரண்டு கைகளையும் கெட்டியாய் பிடித்துக்கொண்டு மாற்றி மாற்றி குனிந்து நிமிரவும். ஆரம்பிக்கையில் ஒருவன் குனியவேண்டும். மற்றவன் நிமிர்ந்திருக்க வேண்டும்.

## தோள் இடித்துத் தள்ளல்.

பிள்ளைகள் இரண்டு வரிசையாய் கைகளை நீட்டிக் கொண்டு நின்று வலதுகாலை முன்வைத்து திடமாய் நிற்கவும். உள்ளங்கைகளும் உள்ளங்கைகளும் தொட்டுக் கொண்டிருக்கவும். "போ" என்று சொன்ன மாத்திரத்தில் இருவரும்

ஒருவரையொருவர் தள்ளுகிறார்கள். எதிரியை இருக்கு மிடத்தைவிட்டு பின்பக்கமாய் தள்ளிவிடப் பார்ப்பதுதான் ஆட்டம். ஆட்டம் முழுமையும் உள்ளங்கைகள் தொட்டு இருக்கவேண்டும். கைகள் மடங்காம லிருக்கவேண்டும்.

### இரட்டிப்பு திரும்பல் (தலையணை).

இருவர் எதிராய் நின்று இருகைகளையும் கெட்டியாய் பிடித்துக்கொண்டு விடாமல் கைகளுக்கு கீழாக திரும்பு கிறார்கள். இப்போது முதுகும் முதுகும் எதிராயிருக்கின் றன. முதலில் அரையின் உட்பாகத்தை பார்த்து திரும்பு கிறார்கள். பிறகு அரையின் வாயிற் பக்கத்தை நோக்கி திரும்புகிறார்கள். இவ்விதமாக ஒவ்வொருவரும் வலது பக்க மாகவும் இடது பக்கமாகவும் திரும்ப பயிலுகிறார்கள்.

### நீந்துதல்.

மார்புக்கு எதிரில் கையை மாறி மாறி போட்டு நீந்துவது போல் காட்டவும்.

### வயிறு.

**இடி.**—அரை தகுந்ததாயும், சுத்தமாயுமிருக்கும்பட்சத் தில் குழந்தைகளுக்கு இவ்விளையாட்டில் அதிக ஆசை. குழந்தைகள் மல்லார்ந்து படுத்து பாதங்களை மாற்றி மாற்றி கூடுமான மட்டும் அதிகவேகமாய் பூமியில் உதைக்கவும். இதனால் உண்டாகும் சப்தம் இடி. எவ்வளவுக் கெவ்வளவு சப்தம் அதிகமோ அவ்வளவுக் கவ்வளவு வேடிக்கை. இடி தூரத்தில் இடிப்பதை காட்ட அதிக சத்தமில்லாமலும் வேக மில்லாமலும் உதைத்துக் கொள்ளவும்.

**உயர்ந்தபடிகளில் ஏறுதல்.**—ஒவ்வொரு படியும் அதிக உயரத்தில் இருக்கிறது. கூடுமானால் காலைத்தூக்கி நேர்கோண மாக வளைத்து ஒரு அடி எடுத்து வைக்கவும். மற்றொரு காலால் இம்மாதிரியே செய்யவும். வயிறு சம்மந்தமான பயிற்சி வேண்டுமானால் காலை அதிக உயரத் தூக்கவேண்டும்.

### பார்ச பயிற்சி.

**காற்றால் ஓடும் யந்திரம் அல்லது காற்றாலை.**—கைகளை பக்க வாட்டில் நீட்டவும். தேகத்தை வலது பக்கமாகவும் இடது

பக்கமாகவும் மாறி மாறி வளைக்கவும். முன்னும் பின்னும் உள்ள வரிசைகள் மாறு திசைகளாக செய்தால் அதிலும் ஜோடிகள் நேராக ஒன்றன்பின் ஒன்ருய் நின்று செய்தால் ஆலையின் நாலு பாய்களும் வேலைசெய்வது நன்ருய் தெரியும். விளையாட்டை மாற்றி கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு திசைக் கொன்ருய் பிள்ளைகளை நிறுத்தி அந்தந்த திக்குகளாய் நினைக்க வும். அடிக்கும் காற்றுக்கு தகுந்தாப்போல் காற்ருலை சுழலும்.



## குதித்தல்.

**கங்காரு பாச்சல்.**—கைகளை தரைபக்கமாய் தொங்கவிட்டு குனியவும். உடல்மாத்திரம் நிமர்ந்து இருக்கவேண்டும். பிறகு எழும்பி முன்பக்கமாய் பாயவும். உடல் வளையக்கூடாது.

## துள்ளிக் குதித்தல்.

குழந்தைகள் தவழ்கிறுப்போல் இருந்து முன்னுக்கு துள்ளிக் குதிக்கிறுர்கள். கைகள் முதலில் பூமியைத் தொடுகின்றன. அதன்பிறகு பாதங்கள் தொடுகின்றன. இது குழி முயல் பாய்வதுபோல் இருக்கிறது. இதை சீக்கிரமாயும் இலாகவமாயும் செய்யவேண்டும்.

## ஓர் பரீக்ஷை.

குழந்தைகள் கண்களை மூடிக்கொண்டு கெடிகாரம் கரும் பலகை உபாத்தியாயர் மேஜை இவைபோல் நன்ருய் பார்த்திருக்கக்கூடிய இதர பொருள்கள் இருக்கும் திக்காய் குதித்துப் பாயவும். இந்த பரீக்ஷை கவனித்துப்பார்க்குஞ்சக்தியையும் ஞாபகசக்தியையும் விருத்தியாக்குகிறது. திசை அறியும் புலனை பழக்க உதவுகிறது.

## குதித்தோடும் பந்து.

குழந்தைகள் முன்னங்கால்களின்மேல் நின்று அதிக சப்தமின்றி குதிக்கவும். முதலில் உயரகுதித்து வரவர குறைந்துகொண்டு கடைசியில் நின்றுவிடவும். முன்னங்கால்மேல்தான் குதிக்கவேண்டும். இல்லாவிட்டால் முதுகு எலும்புக்கு கெடுதியும் பாதத்திற்கு உபத்திரவமும் வரும்.

## கடைசியாக ஒரு வார்த்தை.

ஒரே பாடத்தில் இவை எல்லாவற்றையும் செய்ய முடியுமென்று சொல்லவில்லை. எப்போதும் ஒவ்வொரு வர்க்கத்திலிருந்து சிலவற்றை பொறுக்கிக்கொள்ளவேண்டும். அப்படிச் செய்தால் தேகத்தின் ஒவ்வொரு தசைகளுக்கும் பயிற்சி வரும் என்பதை திடமாய் நம்பலாம். எவ்விடத்தும் விருத்தி வரச்செய்ய இது ஒரேவழிதான். ஒரேமாதிரி யில்லாமலிருப்பதற்கு குழந்தைகள் சந்தோஷமாய் ஆடின இன்னும் சில ஆட்டங்களை இங்கு கூறுவோம்.

## 1. நாற்காலி ஆட்டம்.

நாற்காலிகளை ஒன்றுவிட்டொன்று வலதுபுறமாகவும் இடதுபுறமாகவும் திருப்பி ஒரே வரிசையாய் போடவும்.

நாற்காலிகள் எத்தனை இருக்கிறதோ அதைவிட ஒரு பையன் அதிகமாக இருக்கவேண்டும். பாட ஆரம்பித்தவுடன் பிள்ளைகள் நாற்காலிகளைச்சுற்றி ஓடுகிறார்கள். பாட்டு ஓய்ந்ததும் ஒவ்வொருவரும் உட்கார்ந்துகொள்ள நாற்காலியை தேடி வருகிறார்கள். நாற்காலி அகப்படாதவன் ஆட்டத்தைவிட்டு போகவேண்டும். பாட்டு நிறுத்தப்படும் ஒவ்வொரு தடவையும் ஒரு நாற்காலியை எடுத்துவிடவேண்டும். கடைசியாய் எவன் நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறானோ அவன் தான் ஜெயித்தவன்.

## 2. காட்டு மனிதன்.

கொஞ்ச தூரத்துக்கப்பால் பூமியில் சமதூரத்தில் இரண்டு கோடுகளை இழுக்கவும். இந்த இரண்டு கோடுகளுக்கும் நடுவில் காட்டுமனிதன் நிற்கிறான். மற்றபிள்ளைகள் இரண்டாய் பிரிந்து இருபுறத்திலும் கோட்டுக்கு வெளியே நிற்கிறார்கள். இந்த விளையாட்டு என்னவென்றால் இருகோடுகளுக்கு இடையிலுள்ள அந்த காட்டுமனிதன் இடத்தை, அவன் கையில் அகப்படாமல் குருக்காகச்சென்று தாண்டுதல். இப்படித் தாண்டிப் போகும்போது எவனை காட்டுமனிதன் தொடுகிறானோ அவன் காட்டுமனிதன் ஆகிறான். மேல் மேல் இப்படித்தான் விளையாட்டு.

## 3. மரத்தைத் தோடுதல்.

ஒரு குழந்தை மற்றவர்களை பிடிக்க ஓடுகிறது. மரத்தினால் செய்யப்பட்ட ஏதாவது ஒருபொருளை தொட்டுக்கொண்டிருக்கும்போது அவனை பிடிக்கக்கூடாது. அப்படி தொட்டுக்கொண்டு நிற்பதற்கு காலநிர்ணயமுண்டு. (பிடிப்பவன் எண்ணுவதால் கணக்கிடப்படலாம்) அந்த காலத்திற்கு பிறகு அதே இடத்தில் நிற்கலாகாது.

## 4. கை டென்னிஸ்.

இந்த விளையாட்டிடத்தின் நடுவில் ஒரு கோடு கிழித்து இரண்டு சமமாக பிரிக்கவும். இந்த கோட்டின்மேல் ஒரு தடித்த கயிறை இழுத்து பிடிக்கவும். ஒரு டென்னிஸ் பந்தை பூமியில் அடித்து மேலே கிளம்பும்போது கையால் முன்னுக்கு

அடிக்கிறது. எப்போதும் அந்த பந்து கயிற்றுக்கு மேலாகப் போகவேண்டும். எதிர்க் கக்ஷிக்காரன் தகுந்த இடத்தில் இருந்துகொண்டு திருப்பி அடிப்பான். பந்து பூமியை தொடு



வதற்கு முன்னுவது அல்லது முதல்தரம் பூமியில்பட்டு கிளம் பின உடனேயாவது அந்தப் பந்தை திருப்பி அடிக்கலாம். ஆட்டக்கணக்கு பாட்மிண்டன் மாதிரியோ டென்னிஸ் மாதி ரியோ உபாத்தியாயர் இஷ்டப்படி செய்துகொள்ளலாம். கக்ஷிக்கு (12) பன்னிரெண்டு பிள்ளைகள் இருக்கலாம்.

கிரிக்கெட், புட்பால், பாட்மிண்டன் எல்லாருக்கும் நன் ருய் தெரிந்த விஷயம். இவைகளை விரித்துச் சொல்லவேண்டி

யது அவசியமில்லை. இவைகளை குழந்தைகள் குதூகலமாய் ஆடுகிருர்கள்.

### கண் இயக்கங்கள்.

குழந்தைகள் விழிகளை மாத்திரம் திருப்பிப் பார்க்காமல் தலையையும் திருப்பி பார்ப்பதை நாம் காண்கிரேும். இதனல் மந்தமும் ஊன்றிப் பார்ப்பதில் தவறுதலும் ஞாபகக்குறைவும் உண்டாகும். தலையை அசைக்காமல் விழியைமாத்திரம் அசைத்து பார்க்கும்படியான அனேக விளையாட்டுக்களை ஏற்படுத்தலாம்.

1. காகிதத்தால் செய்த வண்ணாத்திப் பூச்சியை வகுப்புக்கு முன்னல் நகர்த்தல்.

2. கரும்பலகையில் மிருகங்களின் உருவத்தை கோடுகளால் அமைத்தல்.

3. உபாத்தியாயர் பந்தை துள்ளிப்போகச் செய்தல்.

4. ஒரு கண்ணாடியைக்கொண்டு அவற்றில் வெளிச்சம் படச்செய்து அவ்வெளிச்சத்தை அங்குமிங்கும் நகர்த்துதல்.

இப்படிப்பட்ட இயக்கங்கள் கோட்டின் நீளத்தை சரியாய் ஊகித்தறியவும் நன்ருய் பிசகின்றி கவனித்துப்பார்க்கவும் குழந்தைகளுக்கு சாதகமாயிருக்கின்றன.



## அத்தியாயம் III.

### பாஷை.

குழந்தைகள் இளம்பிராயத்தில் வேண்டிய அளவு பலவித வார்த்தைகளை கற்றுக்கொள்ளுதலும், வார்த்தைகளை தெளிவாய் உச்சரிக்கும்படி குழந்தைகளை பயிற்றுவதும் வெகு ஆச்சரியம். குழந்தைகள் இயல்பாயும் வழக்கமாயும் உபயோகிக்கும் வார்த்தைகளின் தொகையை அதிகப்படுத்துவதானது அவர்களுடைய புத்தி சக்தியை விருத்தியாக்குவதாகும். குழந்தைகளின் அநுகாரசக்தி வெகு பலமானதால் தங்களை சுற்றியுள்ளோர் உபயோகிக்கும் வார்த்தைகளை விரைவில் கற்றுக்கொள்ளுகிருர்கள்.

நம் எலிமெண்டெரி பாடசாலைக்கு வரும் பிள்ளைகளின் வீட்டில் வழங்கும் சொற்கள் மிகவும் சொற்பம். அவர்கள் பள்ளிக்கூடத்திற்கு வருங்காலத்தில் மேற்சொன்ன குறையை ஸம்பாஷணை, கதை முதலியவற்றால் நீக்க முயற்சி செய்ய வேண்டும்.

தினம் 10 நிமிஷத்துக்கு குறையாமல் பிள்ளைகளை தன்னிச்சையாய் ஸம்பாஷிக்கவிட்டு உபாத்தியாயர் அன்புடன் கேட்டுக்கொண் டிருக்கவேண்டும். பிள்ளைகள் அறிந்ததும் ஆஸ்தையுமுள்ள விஷயமாகவே ஸம்பாஷணை இருக்கும்படியாகவும் அவர்களே முக்கால்வாசி பேசும்படியாகவும் பார்க்க வேண்டும். உபாத்தியாயர் பின்னாலேயே இருந்துகொண்டு ஸமயோசிதமாய் பேச்சை தகுந்தவழியிற் செலுத்துவதும் குறிப்புகாட்டுவதுமா யிருக்கவேண்டும். பிள்ளைகளே கேள்விகள் கேட்கவும் அவர்களே உத்தரம் சொல்லவும் கூடியமட்டில் பார்க்கவேண்டும். அவர்களாலியலாத விஷயத்தில் உபாத்தியாயர் உத்தரம் சொல்லலாம். வீடு, தெரு, வயல்கள், வியாபாரங்கள், குழந்தைகள் விருத்தாந்தம், பிராணி செடி கொடி இவைகளைப் பற்றியவை, குழந்தைகளுக்கு லோகத்தில் வேறு எவற்றில் பற்றிருக்குமோ, அவையாக எல்லாம் ஸம்பாஷணைக் குரித்தானவையே. ஆனால் பிள்ளைகள் பிழையறப் பேசும்படியும் அநுசிதமான வார்த்தைகளைச் சொல்லாமலும், எடுத்ததை இன்னொன்றுக்கு போவதன்முன் சொல்லிமுடிக்கவும், ஒருவர் பேசும்போது மற்றவர் தடுக்காமலும், உபாத்தியாயர் ஜாக்கிரதையாய் பார்த்துக்கொள்ளவேண்டும்.

## கதைகள்.

பிள்ளைகளுக்கு முதலிற் சொல்லும் கதைகள் நாள்தோறும் அவர்கள் அனுபவத்துக்கு தெரிந்தவற்றைப் பற்றியும் மிகச் சிறியனவாயும் இருத்தல் வேண்டும். உபாத்தியாயரே குழந்தைகளின் பற்றுகளுக்கேற்ப சிறுகதைகள் கட்ட வல்லவரானால் வெகு பிரயோசனமாகும். அப்படி இல்லாமற்போனால் பாலர்க்கான புஸ்தகங்களில் எத்தனையோ கதைகள் இருக்கின்றன. வெகுநாளாய் இருக்கும் கதைகளில் குழந்தைகளுக்கு வெகு பற்றுதல் உண்டு. "நாயும் நிழலும்" "காகமும்

ஜாடியும்" "நரியும் காக்கையும்" இவைபோன்ற எண்ணிறந்த கதைகள் இருக்கின்றன.

கதைசொல்லும் நடையானது குழந்தைகளின் ஸாமர்த்தியத்துக்கு சற்று மேலாயிருக்கவேண்டும் ஆனால் அவர்களால் நன்ருய் அறியத்தக்கதாயிருக்கவேண்டும். இந்தப் பருவத்தில் பூதக் கதைகளைக்கேட்க பிள்ளைகள் ஆவலாய் இருப்பார்கள். இந்தப் பருவத்தில் அவை மிகப் பிரயோசனமாயிருக்கும். இந்த லோகத்தில் பிரத்தியக்ஷமாய்ப் பார்க்கும் ஜனங்களைப்போலேயே குழந்தைக்கு அவன் மனோராஜ்யத்திலிருக்கும் தேவதைகளும் அற்புத பூதங்களும் நிசமாயிருக்கும். இந்த மாதிரியான அனுபவானந்தம் இந்தப் பருவம் தப்பினல் பின்னல் வரவே வராது. கதைகள் பூக்களைப்பற்றியும் பிராணிகளைப்பற்றியும் ஜனங்களைப்பற்றியும் இருக்கலாம். பின்வரும் புஸ்தகங்களில் இவ்விதக் கதைகளிருக்கின்றன.

"Just so Stories" and "The Jungle Book" by Rudyard Kipling;

Fairy Tales by Hans Anderson, Grimm and Jacobs;

"Peter Pan" by J. M. Barrie;

"The Arabian Nights"

"Stories of the Boyhood of the Gods"

"The Deccan Nursery Tales"

இங்கிலீஷில் இக்கதைகள் சுலபமாய் அகப்படும். தமிழில் சுலபமாய் மொழிபெயர்த்துக் கொள்ளலாம். இவற்றை மொழிபெயர்த்து பிரசுரப்படுத்த உத்தேசித்திருக்கிருேம். தற்காலம் நாங்கள் ஆசரிக்கும் முறை இதுவே.

## சுந்தரி.

1. ஓர் ஊரில் சுந்தரி என்று ஒரு பெண் இருந்தாள். அவளுடைய தாயார் அவள் குழந்தையா யிருந்தபோதே இறந்துவிட்டாள். அவளுடைய தகப்பனருடைய முதல் பெண்சாதிக்கு சில பெண்களிருந்தார்கள். சுந்தரியின் தாயார் இறந்த பிறகு அவள் தகப்பனர் வேறு கல்யாணம் செய்துகொள்ளவில்லை.

2. சுந்தரி எல்லாப் பெண்களையும்விட சிறியவளானபடியால் வீட்டிலுள்ள வேலை எல்லாம் இவளே செய்யவேண்டியதாயிற்று. வீட்டிலிருந்த மற்றப் பெண்களெல்லாரும் இவளை வீணாக அடிப்பதுண்டு. இவளிடத்தில் கொஞ்சமேனும் பட்சமின்றி இவளை தங்களிஷ்டப்படியெல்லாம் தொந்திரவுசெய்து வந்தார்கள். அக்காமார் இட்டவேலையை இவள் செய்யாவிட்டால் இவளுக்கு நல்ல திட்டும் அடியும் கிடைப்பதுண்டு.

3. ஐயோ பாவம்! இவள் என்னசெய்வாள். இவளோ அதிக புத்தியுள்ளவள். சாந்தகுண முடையவள். வீட்டு வேலையை அதிக ஊக்கத்துடன் செய்துவந்தாள். வீட்டிலுள்ளவர்களைத்தவிர, மற்றவர்களெல்லாரும் இவளுடைய குணத்தை மெச்சினார்கள். இவள் படும் கஷ்டத்தைப் பார்த்து அதிக வருத்தப்பட்டார்கள்.

4. இப்படி யிருக்கும்பொழுது, அந்த ஊர் அரசன் அரண்மனையில், ஓர் விருந்து நடந்தது. அதற்காக ஊரிலுள்ளவர்களை யெல்லாம் அழைக்கப்பட்டிருந்தது. அவ்விருந்திற்கு சுந்தரி தவிர மற்றப்பெண்கள் எல்லாரும் போய்விட்டார்கள். இவளோ தன் தலைவிதியைப்பற்றி யோசித்துக் கொண்டு, அழுதுகொண்டே அக்காமார் செய்யச்சொல்லி யிருந்த வேலையைச் செய்துகொண்டிருந்தாள்.

5. இவ்விதம் இவள் அழுவதைக் கவனித்திருந்த ஒரு குலதேவதை ஓடிவந்து "குழந்தாய், நீ ஏன் அழுகிறாய், நான் உனக்கு உபகாரம் செய்வதற்காகவே இப்பொழுது வந்திருக்கிறேன்; அழாமல் உனக்கு என்ன வேண்டுமோ அதைச் சொல், உன் இஷ்டப்படி செய்கிறேன்" என்றாள். இதைக் கேட்டு பெண் மிகவும் சந்தோஷங்கொண்டு, தன்னுடைய கஷ்டங்களையெல்லாம் அவளிடம் சொல்லி, தானும் அரண்மனைக்குப் போகவேண்டும் என்னும் இஷ்டத்தை வெளியிட்டாள்.

6. இதைக்கேட்டவுடனே தேவதையானவள் ஒரு பெரிய பூசினிக்காயை ஒரு மந்திரக்கோலால் தொட்டு ஒரு உயர்ந்த வண்டியையும், இரண்டு எலிகளைத்தொட்டு இரண்டு அழகான குதிரைகளையும், சில மூஞ்சூர்களைத்தொட்டு வேலைக்காரர்களையும் உண்டாக்கினாள். பிறகு சுந்தரியையும் மந்தி

ரக்கோலால் தொட்டு அவளுக்கு நல்ல உடுப்பையும், ஆபரணங்களையும், அவளுடைய பாதங்களுக்கு தங்க மேஜோடுகளையும் உண்டாக்கினாள். உடனே இவளை இந்த உடுப்புகளுடன் புதிதாய் உண்டாக்கின வண்டியிலேறிக்கொண்டு போகச்சொன்னாள். ஆனால் தேவதை இவளுக்கு ஒரு ரஹஸ்யம் சொல்லியிருந்தாள். அதாவது என்னவென்றால், சுந்தரி பன்னிரண்டுமணி வரைல்யிதான் இருக்கலாமென்றும், அதற்கப்புறமிருந்தால் இவளுடைய அழகான உருவம் மாறி பழைய நிலைமைக்கு வருவளென்பதுதான்.

7. இரட்டைக் குதிரைகள் பூட்டிய விலையுயர்ந்த வண்டியிலேறிக்கொண்டு அநேக சிப்பந்திகளுடன் இவள் அரண்மனைக்குப் போய்ச்சேர்ந்தாள். இவள் வரவைக்கண்டு அங்கிருந்தவர்களெல்லாரும் 'இவளாரோ புதிதாயிருக்கின்றதே' என்று ஆச்சரியப்பட்டார்கள். அரசகுமாரன் விருந்துக்கு வந்த பெண்களெல்லாரையும்விட இவளிடத்தில் அதிக பிரியமாயிருந்தான். விருந்தானவுடன் இவளிடம் சென்று சினேகம்செய்து அதிக சந்தோஷத்துடன் பேசிக்கொண்டும் விளையாடிக்கொண்டு மிருந்தான்.

8. இப்படி யிருக்கும்போது மணியோ பன்னிரண்டு அடிக்க ஆரம்பித்தது. சுந்தரி திடீரென்று தானிருந்த இடத்தை விட்டு எழுந்து அதிக அவசரத்துடன் அரண்மனையை விட்டு வெளியே ஓடினாள். இதற்குள் இவளுடம்பிலிருந்த உடுப்பு மாறிவிட்டது. தங்க மேஜோடுகளில் ஒன்று கழன்று கீழே விழுந்துவிட்டது. பழைய ரூபத்துடன் வீடுபோய்ச் சேர்ந்தாள்.

9. அரசகுமாரன் இவள் விரைவாக அரண்மனையை விட்டு ஓடுவதைக் கண்டு பின்தொடர்ந்தான். நிமிஷத்திற்கெல்லாம் மாயமாக இவன் கண்ணுக்கு புலப்படாமல் போய்விட்டாள். அவள் அணிந்திருந்த மேஜோடுகளில் ஒன்று இவன் கையில் அகப்பட்டது. இவள் காணமற்போகவே அதிக விசனத்துடன் வேலையாட்களை விட்டு தேடச்சொன்னான். யார் தேடியும் பயனில்லை. ஆகையால் தன்னிடமிருக்கும் மேஜோடு யார் காலுக்கு சரியாயிருக்கிறதோ அந்தப்

பெண்ணைத் தான் கலியாணம் செய்துகொள்வதாக பிரசுரப் படுத்தினன்.

10. இந்த சமாசாரம் அவ்வூரிலிருந்த பெண்களெல்லாருக்கும் தெரிந்தவுடனே அவர்கள் அதிக ஆவலுடன் அரண்மனைக்குச்சென்று, தங்கள் பாதத்திற்கு அந்தமேஜோடு சரியாக விருக்கிறதா என்று பார்த்தார்கள். சுந்தரியின் அக்காமார்களும் வீணுக பிரயாசப்பட்டார்கள். கடைசியாக இவர்களொருவருக்கும் சரிப்படவில்லை. சுந்தரி தன் பாதத்தில் போட்டுப் பார்த்தாள். இவளுக்குச் சரியாக இருந்தது. (இவளைப் பார்த்து மற்றப்பெண்களெல்லாம் பொறுமைகொண்டு வெட்கத்தினுல் தலைகுனிந்து வீடுபோய்ச் சேர்ந்தார்கள்.) சுந்தரி மற்றெரு மேஜோட்டையும் அரசகுமாரனிடத்தில் கொடுத்தாள். இதைக்கண்டு அவன் அதிக சந்தோஷம் கொண்டு சுந்தரியை கலியாணம் செய்துகொண்டான்.

11. முன் சுந்தரியைச் சீர்மாருக நடத்திவந்த அக்காமார்களிடத்தில் சுந்தரி இப்பொழுது அவர்கள் செய்த குற்றத்தைப் பாராட்டாமல், அதிக பக்ஷமாயிருந்தாள். இவளும் அரசகுமாரனும், அவர்கள் ஆயுள் பர்யந்தம், மிகவும் சௌக்கியமாய் வாழ்ந்து வந்தார்கள்.

### பிராஸம் முதலியவையுள்ள பாட்டுக்கள்.

பூதக்கதைகளை விட்டால் அடுத்தபடி பிள்ளைகளுக்கு வெகு களிப்பை தரக்கூடியவை பிராஸம் முதலியதுள்ள பாட்டுக்கள்தான். ஒரு பொருளுமில்லாத பிராஸச் சொற்களைக் கேட்க பிள்ளைகளுக்கு வெகு பிரீதி என்பது அப்பாட்டு சொல்லுகையிலேயே அவர்கள் ஆமோதித்து சிரிப்பதாலேயே தெரியும். பொருளில்லாத பிராஸப்பாட்டுகள் குழந்தையின் ஹாஸ்யரஸ அறிவை கிளருகிறது. கேவலம் ஓசையிலுள்ள விருப்பத்தைத் தணிக்கிறது. ஒலியின் சேர்க்கையில் ஒரு ருசியை தூண்டுகிறது. ஆகவே குழந்தைக்கு காவிய உணர்வை விருத்தியாக்க ஆரம்பிக்க இவை சிறந்த சாதனமாகும்.

இம்மாதிரி பாட்டுகளை பிள்ளைகளுக்கு சொல்லும்போது வெகு ஜாக்கிரதையுடன் குழந்தையின் மனதில் வ்யக்தமாய்

ஒருவித பிம்பம் ஏற்படச் செய்யவேண்டும். இதற்கு சுலப மான மார்க்கம் கலவரமில்லாமல் வார்த்தைகளால் வர்ணித்து ஸம்ஜ்ஞை மூலமாய் அறிவித்தல், துரிதமாய் கரும்பலகை களில் வரைதல், படங்கள் காட்டுவது, நாடகம் மாதிரி ஆட்டுவிப்பது. பாவப் பிரகாசமான வேலைகளை களிமண் சுண்ணும்பு கட்டியும் காகிதமும் இவற்றைக்கொண்டு செய்யவும்.

1. நிலா! நிலா! வாவா
நில்லாமல் ஓடிவா;
மலைமேலே ஏறிவா;
மல்லிகைப்பூ கொண்டுவா;
நடுவீட்டிலே வையே;
நல்லதுதி செய்யே;
வெள்ளிக்கிண்ணத்தில் பால்சோறு;
அள்ளி எடுத்து அப்பன் வாயில்
கொஞ்சிக் கொஞ்சி ஊட்டு
குழந்தைக்குச் சிரிப்புக்காட்டு.

2. காக்கா! கண்ணுக்கு மை கொண்டுவா.
குருவி! கொண்டைக்குப் பூக் கொண்டுவா.
கொக்கு! குழந்தைக்குத் தேன் கொண்டுவா
கிளியே! கிண்ணத்தில் பால் கொண்டுவா.

3. சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு
தாமரைப்பூவே ,,
குத்துவிளக்கே ,,
கோவில்புறுவே ,,
பச்சைக்கிளியே ,,
பவழக்கொடியே ,,
சோலைக்குயிலே ,,
சுந்தரமயிலே ,,
கண்ணேமணியே
கற்பகக்கொடியே
கட்டிக்கரும்பே ,,
கனியே பாலே ,,

4. கைவீசம்மா கைவீசு
கடைக்கு போகலாம் ,,
பட்சணம் வாங்கலாம் ,,
பாடித் தின்னலாம் ,,
பழங்கள் வாங்கலாம் ,,
பரிந்து புசிக்கலாம் ,,
சட்டை வாங்கலாம் ,,
தரித்துக் கொள்ளலாம் ,,
கோயிலுக்குப் போகலாம் ,,
கும்பிட்டு வரலாம் ,,
தேரைப் பார்க்கலாம் ,,
திரும்பி வரலாம் ,,

5. வாவா மழையே மனங்குளிர—வாவா மழையே.
வாவிகுளங்கள் ஏரி, நிறைய
மாநிலத்து வெப்பங்குறைய—வாவா மழையே.
காய்ந்தமரங்கள் தழைத்துசெழிக்க
காசினியெல்லாம் செல்வங்கொழிக்க—வாவா மழை
வறுமையெங்கும் ஓடியொளிக்க [யே
மானிடர்கள் மனம்களிக்க—வாவா மழையே.



## அத்தியாயம் IV.

### கைத்தொழில்.

சிறு பாலர்களுக்கு கொடுக்கும் வேலைகள் அநேக விதங்களாய் இருத்தல் வேண்டும். ஒரே தொழில் செய்வதில் அவர்கள் சீக்கிரத்தில் சலித்துப் போகிறார்கள். ஒவ்வொரு தொழிலைச் செய்யும்போது உபாத்தியாயருக்கு திடநோக்கம் ஒன்று வேண்டும்.

### பிரோபெல் வஸ்துவர்க்கங்களும் (Gift) தொழில்களும்.

குழந்தை இந்த வஸ்துக்களை உபயோகிக்க தெரிந்து கொள்ளவேண்டும். ஆகையால் பாடமும், பாவப்பிரகாசமான வேலையும் மாற்றி மாற்றி வரவேண்டும். பாலர்கள்

செய்யப்புகும் தொழிலைப்பற்றி குழந்தைகளோடு பேசவேண்டும். அவர்கள் ஊகித்து சொல்லட்டும். குற்றங்களை எடுத்துச் சொல்லட்டும். அவர்கள் கேள்விகளை கேட்கட்டும். அவர்கள் அபிப்பிராயங்களை பகுமானிக்க வேண்டும். நாம் ஒதுங்கி இருக்கவேண்டும். குழந்தைகள் திடவஸ்துவை உபயோகித்த பிறகுதான், பரப்புக்களையும், கோட்டுருவங்களையும் அறிய வல்லவராகிறுர்கள்.

## Gift—வஸ்து வர்க்கங்கள்.

1. பந்துகள்

2. உண்டை, சமநீளக் கட்டைகள்.

3, 4, 5, 6. அனேகவித உருவமுள்ள கட்டைகள்.

இந்த உருவங்களை கையில் எடுத்து அவர்கள் முன்பார்த்த உருவங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் தெளிவாய் வரையறுத்த பாவங்கள் மனதில் வர உதவியாகிறது.

7-வது வஸ்து வர்க்கத்தில் மடிப்பதற்கும், வெட்டுவதற்கும் கொடுக்கும் காகிதத்திலும் பரப்பு அல்லது தளத்தின் தன்மையைப்பற்றி ஆரம்பம்.

குழந்தைகள் உபயோகிக்கும்போது, உருமாருதிருக்கும் பொருளையே இங்கே வஸ்துவர்க்கம் (கிப்ட்ஸ்) என்பது (உ-ம்.) கட்டை, கல், வளையம்.

குழந்தைகள் கையாடுவதால் வஸ்துக்கள் முற்றிலும் உருமாறிப்போமானுல் அக்காரியங்களை தொழில் என்னப்படும். (உ-ம்.) களிமண், வரைவதற்கான பண்டங்கள். 'கிப்ட்' குழந்தைகள் பார்த்த உருவத்தை அறியச்செய்கிறது. 'தொழில்' மனதில் வந்த பாவங்களை உறுதியாக்குகிறது. ஆகையால் இது அதிக சக்தியைக் கொடுக்கிறது.

திடவஸ்துக்களையும், ஸமதள வஸ்துக்களையும், கோட்டால் அமைந்த வஸ்துக்களையும் பக்கத்தில் பக்கத்தில் வைத்துக்கொண்டு வேலைசெய்வது நல்ல வழிதான். ஓர் உருவத்தைப்பற்றி சரியான அறிவை உண்டுபண்ணுவதற்கு நல்லவழி என்னவென்ருல் களிமண்ணில் அந்த உருவத்தைச் செய்து, பிறகு அதை சீமைச் சுண்ணும்பால் மொத்தமாயும், கோடுகளாலும் வரைதலே.



பிள்ளைகளின் கைத்தொழில்.

ஆகையால் சிறு குழந்தைகளுக்கு போதிப்பதில் முதலில் பொருள்களை கையாண்டு அப்பொருள்களைப்போல் களிமண் போலுள்ள சாமானால் அமைக்கவேண்டும். இதன் பிறகு பரப்புக்களைப் பற்றியும் கடைசியாய் கோடுகளைப் பற்றியும் பாடம் ஏற்படுத்தவேண்டும்.

கைத்தொழிலில் பின்வருவன இருக்கவேண்டும்.

1. பலவித உருவமுள்ளனவும், பருமனுமுள்ளனவுமான கட்டைகளால் கட்டுதல்.

2. களிமண்ணிலும், மணலிலும், உருவத்தை அமைத்தல்.

3. காகிதம் மடித்தல், கிழித்தல்.

4. மொத்தமாய் சித்திரம் வரைதல்.

5. கோட்டால் மாத்திரம் சித்திரம் வரைதல்.

6. தெளிவான பாவங்கள் ஏற்படுவதற்கும், தங்கள் பாவங்களை முற்றிலும் வெளிப்படுத்த உதவுவதற்கும் தகுந்த பொருள்களைக்கொண்டு பலவிதமாய் உபயோகித்தல்.

பாவப்பிரகாச வேலையில் குழந்தையை அவனிஷ்டப்படி விடவேண்டும். இஷ்டபிரகாரம் அவன் உருவத்தை அமைக்கவோ அல்லது வரையவோ செய்வான். உபாத்தியாயர் தானே பொருள்களைக் கொண்டு பாவப்பிரகாசமான வேலையை செய்து, வஸ்துக்களை எவ்வெவ்விதமாய் உபயோகிக்கலாமோ அதையெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாய் காண்பிக்கவேண்டும். பிள்ளைகள் உபாத்தியாயர் செய்ததைப் பார்த்து செய்யலாகாது. முதலிலிருந்தே வஸ்துக்களை பார்த்தே செய்யவேண்டும். பிறகு ஞாபகத்திலிருந்தும் பிறகு மானஸ கற்பனையாகவும் செய்யவேண்டும். வெவ்வேறு விதமான சாமான்களை உபயோகித்து வரவேண்டும். குழந்தைகளுக்கு தாங்களறியாமலே இன்னின்னவற்றை இப்படி இப்படி செய்யவேண்டுமென்று அறிவு வருகிறது.

பாலர்களுக்குத் தொழில்.

1. கட்டைகளை அடுக்குதல் – இவைகள் சாதாரண மரத்தில் பண்ணப்பட்டு பெரியதா யிருக்கவேண்டும். இந்தக் கட்டைகளை ஒழுங்காக கையாடவேண்டும். கொஞ்சநேரம் அப்

பியாசம் செய்தபிறகு உபாத்தியாயர் 'வை' என்று சொன்ன மாத்திரத்தில் அவைகளை எடுத்து இருந்த இடத்தில் கொண்டு சேர்க்கவேண்டும்.

2. மணலில் வேலை.—குழந்தைகளுக்கெல்லாம் மணலில் தோண்ட சந்தோஷம். அவர்களை மணலில் இஷ்டம்போல் விளையாட விடவேண்டும். ஒவ்வொரு பாலர் வகுப்புக்கும் மணல் மேடாவது, மணல் பரப்பிய மேஜையாவது வேண்டும். அவர்கள் அதில் தாராளமாய் விளையாடும்படியா யிருக்க வேண்டும். இயற்கை பாடம், சம்பாஷணை இவை சம்பந்தமான பாடங்களில் அநேக வஸ்துக்களை கொண்டு ஒரு தோற்றத்தை காண்பிக்க நன்றாய் உதவும்.

குழந்தைகளுக்கு மணலில் விரலால் எழுத அதிக ஆவல். ஆயிரம் வருஷங்களுக்கு முன்னால் அரபியர்கள் மணலில் எழுத்துக்களை எழுதக்கற்றுக் கொடுத்தார்கள் என்பதை அறிவோம். தென்னிந்தியாவில் தெருத்திண்ணைப் பள்ளிக்கூடங்களில் பிள்ளைகள் மணலில் எழுதுவதை நாம் வெகுவாய் இப்பவும் காணலாம். கூர்மையான குச்சிகளை கையில் கொடுத்து வரையச் செய்தால் பென்ஸிலால் எழுதுவதற்கும் சித்திரம் வரைவதற்கும் தயார் செய்ததாகும். அப்படி அந்தக் குச்சியை உபயோகிப்பதனால் பென்ஸிலை எப்படி பிடிப்பது என்று கற்பிக்கலாம்.

ஈரமண்ணால் உருவங்கள் செய்வதென்றால் குழந்தைகளுக்கு கொண்டாட்டம். அனேக பாவங்களை இந்தத் தொழிலால் அறிவிக்கலாம் (உ.ம்.) 1. இயற்கை பொருள்களைப் பற்றி சம்பாஷணை ஆனதும் ஜந்துக்கள் தங்கள் கூடுகளில் இருக்கு மிருப்பை படரூபமாக காண்பிக்க உதவும். 2. பூதக்கதைகளை விளக்கும் படங்களை அமைக்கலாம்.

3. சீமைச் சுண்ணாம்புகொண்டு சித்திர வரைதல்.—பிள்ளைகளுக்கு தாங்கள் செய்யும் வேலையை வைத்து வைக்க அபேக்ஷை. பிறந்தவுடன் சீமைச் சுண்ணாம்பைப் போன்ற மிருதுவான சாமான்களை உபயோகிக்கும்படி செய்யலாம். கரும்பலகைகளை சுவரில் பொருந்தவைத்து சாதாரண உருவங்களை கையை நீட்டினபடி மொத்தமாக வரையச்செய்யலாம். நடுவிலிருந்து ஆரம்பித்து வட்ட வடிவமுள்ள பல உருவங்

களை வரையச் செய்யலாம். வஸ்துக்களை உற்று நோக்கிப் பார்த்து சிந்திக்கும்படி பிள்ளைகளைப் பழக்கவேண்டும். உபாத்தியாயர் அவர்களுடைய பிரயத்தனங்களை நன்றாயிருக்கிறதென்று சொல்லி மேன்மேல் செய்யும்படி தூண்டவேண்டும். நேரத்தில் பெரும்பாகம் யதேச்சையாய் அதாவது தன் பாவனையிலிருந்தோ, ஞாபகத்திலிருந்தோ இஷ்டம்போல் சித்திரம வரையும்படி விடவேண்டும். அவர்கள் செய்த வேலையை வைத்து வைக்கவேண்டுமானால் சீமை சுண்ணாம்பால் எழுதும்படியான பழுப்புக் காகித அட்டை உபயோகமாயிருக்கும்.

4. **களிமண்ணில் உருவமமைத்தல்.**—பாவப்பிரகாசமான வேலைக்கு களிமண் முதல்தரமானது. முதலில் பாலர்கள் இஷ்டப்பட்டதை செய்யவிடவேண்டும். பிறகு கதை, சம்பாஷணை, பாட்டு இவற்றில் வரும் காட்சிகளைப்போல் செய்யச் சொல்லவேண்டும்.

5. **காகிதம் கிழித்தல்.**—காகிதம் கிழித்தல் சிறு குழந்தைகளுக்கு மிகவும் பிரியமானது. கத்திரி பிடிக்கத்தெரியாத குழந்தைகளுக்கு காகிதம் கிழித்தல் காகிதம் கத்தரித்தலுக்கு பதிலாகும். அதற்கு வேண்டியதெல்லாம் லகுவாய் கிழிக்கக் கூடிய ஜவ்வுத்தாள் தான். இந்த தொழிலில் இரண்டு கைகளும் சமமாய் தேர்ச்சியடைகின்றன நிறங்களிலுள்ள ஆசையும் தீரும். வஸ்துக்கள் சாமான்யமா யிருந்தால் குழந்தைகளினுடைய கற்பனாசக்திக்கு அவகாசம் ஏற்படும்.

6. **விளையாட்டு சாமான்.**—இவை குழந்தை சுவேச்சையாய் விளையாடும் காலத்தில் உபயோகிக்கப்பட வேண்டியவை. முக்கியமான விளையாட்டு வஸ்துக்களாவன—பொம்மைகள், பிராணிகள், சின்னவண்டிகள், புகைவண்டி. இந்த பிராயத்தில் குழந்தைகளுக்கு அனேகவிதமான உணர்ச்சிகள் வேண்டும். இப்படிச் செய்வதாலும், உணர்வதாலும்தான் அவனுக்கு எல்லாவிதத்திலும் விருத்தி உண்டாகும். குழந்தையின் புலன்களுக்கு பற்பல உணர்வு அடைவதற்கு ஏற்ற சாதனங்களை நாம் சம்பாதித்துக் கொடுக்கவேண்டும். உணர்ச்சியானது மனுஷ்யனுடைய ஆந்தரமான விருத்திக்கு மழை

யும் சூரியவெளிச்சமும் செடிகளுக்கு எப்படியோ அப்படி யாகும். உணர்ச்சிகள் குழந்தையின் மொத்த வளர்ச்சிக்கும், எல்லா விஷயங்களிலும் ஞானவிருத்திக்கும் முக்கியமானவை. பொம்மைகளை வைத்துக்கொண்டு நாடகம் விளையாடுவதால் குழந்தைக்கு உண்டாகும் ஆனந்தம் முதலான உணர்வுகள் அவனிடத்தில் உறங்கிக் கிடக்கும் உணர்வுகளையும், சக்தி களையும் கிளப்புவதற்கோர் சிறந்த வழியாகும். கிங்ஸிலி எழுதிய, வாடர் பேபீஸ் (Water Babies) ஸ்டிவன்ஸன் எழுதின சைல்டஸ் கார்டன் அவ் வெர்சஸ் (Child's Garden of Verses) இவைகளை வாசித்தால் பொம்மைகளை வைத்துக் கொண்டு விளையாடுவதால் உண்டாகும் உற்சாகம் தெரியும். குழந்தைகள் உபாத்தியாயரையே நம்பிக்கொண் டிருக்கக் கூடாது. அவர்களே தங்கள் விளையாட்டு சாமான்களை பொ றுக்கி யெடுக்கச் செய்யவேண்டும். அவைகள் நல்ல வேலைப் பாடாய் இருக்கக்கூடாது. விளையாட்டு சாமான்களை பற்பல விதமாயும், வெகு வேலைப்பாடாயும் செய்து வருகிறார்கள். இதனால் குழந்தைகளுடைய புத்தி மந்தமாகிறது. குழந்தை களுக்கு அவைகளை நாசமாக்குவது தவிர வேறுவித முயற் சிக்கு இடமேயில்லை. ஒன்றிலே புத்தி நில்லாமல் எப்போ தும் புதிது புதிதாய் வேணுமென்கிற ஆவலுக்கிடமாய் ப்ராக்கு புத்தியும் உண்டாகிறது. அவை ஸாதாவா யிருப்பதோடு குழந்தையினுடைய கற்பனசக்திக்கு தூண்டுகோலாயு மிருக்க வேண்டும். குழந்தை சுபாவத்தைப்பற்றி பிரோபலுக்குற்ற அறிவும் ஞானமும் அவர் தெரிந்தெடுத்த விளையாட்டு சா மான்களாலேயே தெரியவரும். கேவலம் சிசுவும் வயது வந் தவனும் தங்கள் சஞ்சல தனத்துக்கு ஏற்றதாக எடுத்தாடும் பந்து, மனதில் ஸ்தூலமாய் பட்டதை வெளிக்கண்ணுக்கு புலப்படும்படி செய்துகொண்டு எவ்வளவு நேரமானாலும் சலி யாமல் வைத்து விளையாடும் கட்டைத்துண்டுகள், குழந்தை யின் கற்பனசக்தியும், கைவேலைத் திறமும் அதிகரிக்க அதிக ரிக்க எத்தனையோ காட்சிகள் குழந்தைக்குத் தோற்றும்படியும் உருமாற்றக்கூடிய வெற்றுக் காகிதத்துண்டும், ஸதா ஆனந்திப் பிக்கும் மணலும் களிமண்ணும் அவர் தேர்ந்தெடுத்தவை.



# அத்தியாயம் V.

## படங்களின் உபயோகம்.

**ஆ**தியில் தன்னறியாமல் குழந்தைகள் மனதில் படியும் பாவங்கள் லோகத்தில் மிகவும் சிறந்து பெருமையும் அழகும் வாய்ந்த இயற்கை செயற்கைப் பொருள்களால் பதியவேண்டும். தன்னறிவுக் கெட்டும்படியா யிருந்தால் அழகில் குழந்தைக்கு இயற்கையாகவே ஆசையுண்டு. எதைப் பார்த்து பிரியப்பட்டு களிப்போடு ஆச்சரியப் படுகிறார்களோ அதைப்பார்த்து அநுகாரம் செய்கிறார்கள். இப்படி அநுகாரம் பண்ணின விளையாட்டானது அவர்கள் வாழ்வையும், சீலத்தையும் மாற்றும் வலுவுள்ளது. சுற்றியிருக்கும் உலக விஷயத்தையும் அதில் தன் நிலையையும் அறிய முயலுவதில் குழந்தைகளுக்கு படங்கள் உதவியாகின்றன. "பொருளிலிருந்து படங்களுக்கும், படங்களிலிருந்து ஸம்ஜ்ஞைகளுக்கும், ஸம்ஜ்ஞைகளிலிருந்து பாவங்களுக்கும்" போவதால் குழந்தைகள் அறிவு சம்பாதிக்கின்றன என்று பிரோபெல் சொல்லுகிறார். சாமான்ய காட்சிகளை வர்ணத்தால் எழுதுகிற சித்திரவேலைக்காரன் தினசரி வாழ்க்கையின் ஸ்வாரஸ்யத்தை புலப்படுத்துகிறான். சிறு குழந்தைகளும் இந்த ஸ்வாரஸ்யத்தை வெகுவாய் அடைகின்றன. தினசரியாயுள்ள சாமான்ய காட்சிகளின் படங்களால் குழந்தையின் மனதில் இருந்த ரசிக உணர்ச்சி இயங்குகிறது. இயற்கையின் அழகுகளை பார்க்கிறோம். இந்தப் படங்களைப் பார்க்காமல் போனால் நம் மந்தபுலன்களுக்கு இவை எட்டியிராது.

### அகவல்.

"இயற்கையில் பொருள்கள் முயற்சியால் தோன்றி
எண்ணுதற்கரிய தடவைகள் தம்மில்
கண்ணினுக் கெதிரே காட்சியில் நிற்பினும்
மண்ணினிற் பிறந்த மாந்தர் யாவரும்
கணவும் கருதார், கருத்திலும் கொள்ளார்;
ஓவியத்தெழுதவும் உற்றதாய் கருதியோர்
சீரிய தன்மையும் சிறப்புடன் அமைந்ததாப்
பாரினில் யாவரும் பார்த்து புகழுமோர்

பான்மையை உடையதால், அத்தகைச் சித்திரம்
நன்மையே பயக்குமென்று யாவரும் நயந்து
திண்மையாய் கோடலின், சித்திரப் பயிற்சியும்
சிறுவரின் மனதினைச் செம்மையின் நிறவுமென்
றைய மின்றறைபவும் வேண்டுமோ சொல்லுமின்"

வாழ்க்கையின் முக்கிய பருவமாகிய குழந்தைப் பருவத்தில் நல்ல படங்களை காண்பித்தால் அவை குழந்தைக்கு ஆனந்தம் முதலிய உணர்ச்சியை உண்டாக்கி அவன் மனதைக் கவரும். குழந்தைக்கு எவையெவை பிடித்தம் என்பதை நாம் ஆராய்ந்து அறிந்து கொள்ளவேண்டும். படங்கள் குழந்தையின் அறிவுக்கு எட்டும்படி யிருந்தால் ஒழிய அவன் மனதைக் கவருவது அரிதாகும். உயிர்வாழ்க்கை, இயக்கம், சுறுசுறுப்பான செயல்கள், குழந்தைகள் அல்லது பிராணிகளின் காட்சி, இவற்றை எல்லாம் காட்டும் படங்களிடத்தில் குழந்தைகளுக்கு வெகு பிரியம்.

### தகுந்த படங்கள்.

1. Saved—Landseer
2. Little Miss Bowles—Reynold
3. At the Nursery—Waterlow
4. Feeding the Birds—Millet

இன்னும் சில படங்கள். தாயின் அன்பைக் காட்டக் கூடிய மடோனு படம், குழந்தைகள் சூழ்ந்த தாய்மார், குட்டிகளோடிருக்கும் மிருகங்கள் இவைகள் படங்கள். தனக்கு தாயொருத்தி யுண்டு என்பது குழந்தைகளுக்கு நன்ருய் தெரிந்த விஷயம். அப்படிப்பட்ட அவனை தாயாரின் அன்பை படங்கள் மூலமாய் காட்டி நன்ருய் அறியச் செய்தால் லோகத்திலுள்ள அன்புகளி லெல்லாம் மிகச்சிறந்தும், உறுதியாகவும், நீடித்து மிருக்கும் அன்பின் பெருமையை அறிய உதவி செய்கிருேம். நாம் சில நல்ல படங்களை தேர்ந்தெடுத்து பள்ளிக் கூடத்தில் நன்ருய் தொங்க விடவேண்டும். குழந்தைகள் நன்ருய் பார்க்கும்படியான இடத்தில் தொங்க விடவேண்டும். ஒரே படத்தை ஒரே இடத்தில் அதிக நாள் தொங்கவிடக் கூடாது. அடிக்கடி படங்களை மாற்றவேண்டும். இல்லாவிட்

டால் படங்களை சட்டம்போட்டு சுற்றும்படியாக ஏற்பாடு செய்து சில வாரங்களுக்கு ஒரு தடவை திருப்பிக்கொண்டு வரவேண்டும்.

வர்ணம் குழந்தையின் மனதை நன்கு கவருகிறது. இந்த ருசியை திருப்திபண்ண வர்ணமிட்ட சில நல்ல படங்கள் வேண்டும். பகட்டானதும் கழிவடையானதுமான படங்களை பள்ளிக்கூடத்தில் வைக்கலாகாது. பத்திரிகைகளிலிருந்து வெட்டப்பட்ட சில படங்களை ஒரு சிறு புஸ்தகமாக வைத்திருந்தால் பாலர்கள் பள்ளிக்கூடத்தில் பார்க்க உதவும்.

**கதைகள், இயற்கை பொருள்களின் பட விளக்கங்கள்.**— உபாத்தியாயரால் எழுதப்பட்டு கெட்டித்தாளில் ஒட்டவைத்து வகுப்பில் தொங்கும்படி செய்யலாம். பட விளக்கத்திற்கும், சித்திரப் படங்களுக்கும், வேறு விதமான காரியங்களுண்டு. சித்திரப்படங்களில் முக்கிய நோக்கம் குழந்தைக்கு ஆனந்தத்தை உண்டு பண்ணுவது; ஒரு விஷயத்தை கற்பிப்பதன்று. குழந்தை பார்க்க விரும்பும் பொருளை நாம் காண்பிக்காததனால் அவனுக்கு தற்காலத்தில் உண்டாகும் ஸூக உணர்ச்சிகளை போக்கி பிற்காலத்தில் ஞாபகத்தையும்கெடுக்கிறோம்.

**படங்களைப்பற்றி பேசுதல்.**—படத்தைப்பார்த்து இது இன்னதென்று குழந்தைகளைச் சொல்லச் செய்யவேண்டும். இப்படி பேச குழந்தைக்கு மிகவும் இஷ்டம். பாஷைகள் கற்பதற்கு இது நல்ல அப்பியாசம். சற்று வயதுசென்ற பிள்ளைகளை இந்தப் படத்திற்கு என்ன பெயர் கொடுக்கலாமென்று படத்தைக் காட்டி கேட்கலாம். குழந்தையின் கவனசக்தி சஞ்சலமும், சொற்பமுமானதால் இந்த மாதிரியான சம்பாஷணைகளில் குழந்தைகளை தன்னிச்சையாய் விடவேண்டும். நிர்ப்பந்தம் கூடாது. ஸங்கீதம், காவியம், சிற்பம், இவற்றில் சர்வோத்கிருஷ்டமானவற்றை, குழந்தைகளின் மனது, மிருது குணங்கள், ஆத்மகுணங்கள் இவற்றை வளர்த்து விருத்திக்குக் கொண்டுவரும் வேலையில், எப்படியாவது உதவும்படி செய்ய நாம் தீர்மானித்துக் கொள்ளவேண்டும். உலகினியல்பைப்பார்த்தும் அதில் வாழ்ந்தும் பெருமை யடைந்திருக்கும் மஹான்களின் சிலருடைய பாவங்களையும், உணர்ச்சிகளையும், களிப்புக்களையும், நம்பிக்கைகளையும், ஆசைகளை

யும் நாம் கிட்டி அறிய எது இருப்பது தெரிந்ததே. அம்மஹான் களைப்போல் மிகத்தெளிவாய் பார்ப்பதற்கும், ஸ்வாரஸ்யம் அறியும் திறம் மிகவாய்ந்த அவர்கள் ஆத்மாக்களை ஆனந்திப் பித்த அழகைப்பார்ப்பதற்கும், படிப்படியாய் நாமும் கற்போமானால் அவ்வநுபவத்தால் நம்வாழ்கை முற்றிலும் பெரிதாயும் அழகாயும் ஆகப்பெறும்.



## அத்தியாயம் VI.

### பாட்டு.

சிறு குழந்தைகள் ஸங்கீத ரஸத்தைக்கூட மிகவும் நன்றாய் உணர்கின்றன. தாய்மார்கள் தாலாட்டுப்பாட்டு குழந்தைகளை ஸமாதானப் படுத்துவதை இயற்கையாகவே அறிகிறார்கள். ஒன்று அல்லது இரண்டு வயதுள்ள சிசு பியானோ வாசிப்பதை கேட்டு தன் துருதுருப்பையும், சேஷ்டையையும் நிறுத்திவிடுகிறது. அல்லது பாட்டுக்கு ஒத்த பிரகாரம் இயங்கும். சில சமயங்களில் ஆவேசம் கொண்டாப்போலும் இயங்கும்.

ஸங்கீதம் களைப்பாற்றுவதாலும், களிப்பூட்டுவதாலும் அதன் பிரபாவத்தை தற்காலம் பள்ளிக்கூடங்களில் நன்குணர்ந்து நடக்கிறார்கள். உற்சாகமான நடன பாடல்களுக்கு தகுந்தபடி பள்ளிக்கூடத்து வெளியிலும், உள்ளும், குழந்தைகள் நடை பழகுகிறார்கள். ஸங்கீதம், சீர் பிரமாணமான சந்தம் இவைகளில் குழந்தைகளுக்கு இருக்கும் ஆசையை திருப்தி செய்யவும், நல்ல சங்கீதத்தில் ருசியை வளர்க்கவும் வேண்டும். இத்தால் குழந்தைகளுக்கு உள்ளபடி பிரயோஜனம் ஆகும்படி செய்யவேண்டும்.

குழந்தைகளுக்கு சங்கீதத்தில் பிரீதியுண்டென்பதற்கு அனேக ஆதாரங்களிருந்த போதிலும் ஆரோக்கியமான குழந்தைகளுக்கு ஸாமான்யமாய் கூச்சலிடுவதில் கொண்டாட்டம் என்பதற்கு ஐயமில்லை. நமக்கு கேட்க அலுப்பாயும், தொந்திரவுமாயிருக்கிற கூச்சலை போடுவதில் குழந்தைகள் எவ்வளவு சந்தோஷப்படுகிறார்கள். ஆரம்பத்தில் பலவிதமான சப்தங்களை பகுத்தறிய குழந்தைகளை வழக்கப்படுத்தவேண்டும்.

அனுமானித்துச் சொல்லும் விளையாட்டு.—இதில் குழந்தைகள் கண்களை மூடிக்கொண்டு, மரத்துண்டு, உலோகம், கண்ணுடி, சைனு சாமான் இன்னும் அனேக வஸ்துக்கள் இவைகளால் உண்டாகும் சப்தத்தைக் கேட்டு அந்த சப்தம் எதனுல் உண்டானது என்று சொல்லவேண்டும். இப்படிச் செய்வதன் நோக்கம் என்னவென்ருல் தெளிவாகவும், தவறில்லாமலும், சப்தங்களை பகுத்தறியும்படி செய்வதும், சப்தத்தில் அதிக பழக்கத்தை உண்டுபண்ணுவதும்தான்.

மிருகங்களைப்போல் கத்தும்படி முயற்சி செய்யலாம். இந்தமாதிரியான விளையாட்டுகளை அடிக்கடி செய்த பிறகு பாட்டுக்களில் ஒன்றை பியானேவில் பாடி குழந்தைகள் அதைச் சொல்ல முடியுமா என்று பார்க்கலாம்.

**சந்தத்திற்கு தகுந்த ஆட்டம்.**—பாடும் பாட்டானது சூசிப்பிக்கிறபடி குழந்தைகள் ஸ்வேச்சையாய் தோன்றினபடி பாவத்தை வெளியிடும்படி செய்யவேண்டும். சிறு குழந்தைகளை ஒருபோதும் சும்மாவிருக்க விடக்கூடாது. உபாத்தியாயர் குழந்தைகள் ஒவ்வொன்றும் தன் மனதிலிருக்கும் பாவத்திற்கு தக்கபடி உற்சாகப் படுத்தவேண்டும். மற்றப்பாடங்களிற்போல் ஸங்கீதத்திலும் இயற்கையான சுறுசுறுப்பு, ஸ்வேச்சையான செயல், தன் பாவத்தை வெளியிடுதல், விளையாட்டில் ஊக்கம் இவை எப்போதும் கவனிக்கத்தக்கன.

பிறர் பாடுவதைகேட்டு அதன்படி பாடுவதுதான் பாடக் கற்றுக்கொள்ளுவதற்கு முதலில் நல்லவழி. இயற்கையிலிருக்கும் பாட்டை கேட்கும்படி செய்யவேண்டும் (உ-ம்.) மரங்களின் இடையில் அடிக்கும் காற்றின் சப்தம், சல சலவென்று விழும் ஆலங்கட்டியின் சப்தம், சொட்டு சொட்டென்றும், பட படவென்றும் பெய்யும் மழை, தூரத்து இடி, கிட்டத்து இடி, நீர் வீழ்ச்சியின் கர்ச்சனை, அலைமோதுதல், தேனீக்கள் சிள்வண்டு கொசுகு இவைகளின் ரீங்காரம், தவளை கத்தல், ஆடு கத்தல், எல்லாவற்றிற்குமேல் பட்சிகளின் கீதம். இயற்கை பிராணிகள்செய்யும் சப்தம் பாட்டேயொழிய பேச்சல்ல.

**நடை பழகுவது.**—சிறு பிள்ளைகளுக்கான பள்ளிக்கூடத்து வேலையில் நடைபழகுவது வெகுமுக்கியம். நடை மாதிரிகளுக்குள் சிபாய் மாதிரி நடத்தல்தான் ஸாமான்யமாய் எல்லா

ருக்கும் தெரிந்தமாதிரி. பூர்வகாலத்தில்கூட சிபாய்கள் ஸங்கீதத்துக் கிசையத்தான் சண்டைக்குப்போவது அங்கிருந்து திரும்பிவருவது. பாடும் சிபாய்களை தளகர்த்தர்கள் எப்போதும் அபிமானிக்கிறார்கள். ஏனென்றால் இவர்களுடைய உற்சாகம் எல்லாருக்கும் பரவுமென்று தளகர்த்தர்கள் உணர்ந்தவர்கள். இப்படி ஒழுங்காய் நடத்தலானது நற்சிக்ஷையாகவும், பயிற்சிவகையாகவும், பிரயோஜனமாகும். கீழ் சொல்லப்படும் பாடல்கள் சைதாப்பேட்டைப் பள்ளிக்கூடத்தில் வழங்கி வருகின்றன. குழந்தைகள் அவற்றை கேட்கவும் ஸந்தோஷப் படுகின்றன.

... ... ... ... ...

1. (கல்லார்க்கும் கற்றவர்க்கும்—சங்கராபரணம்.)

GOOD MORNING.

வந்தனங்கள் தந்தனமே வந்தனங்கள் தந்தோம்
வந்தனங்கள் தந்தெங்ஙனம் பாடுகின்றோம் பாரீர்.
வந்தனங்கள் தந்தனமே, வந்தனங்கள் தந்தோம்,
வந்தனங்கள் எல்லோர்க்கும்நாம், அன்புடனே தந்தோம்.
வந்தனமே, யிங்குவேலை, செய்து விளையாடி
மகிழ்வுடனே பாடியாடி, நாள்கழிக்க வந்தோம்.
வந்தனங்கள் தந்தனமே, வந்தனங்கள், தந்தோம்
வந்தனங்கள் எல்லோர்க்கும்நாம், அன்புடனே தந்தோம்.

2. (கல்லார்க்கும் --கரஹரப்ரியா.)

SOLDIER BOY.

பாரிலின னத்தமியா அரசெங்கணும் புகழ்ந்தே,
பரவுஞ்சிவப் போடுவெண்மையும், நீலமுஞ்சேர் கொடியை.
தீரமுடனேந்து மெழிற்போர் வீரவாலிபா நீ
செல்லுமிட மெங்கென்பதை யெனக்குரை செய்வாயே.
சீரிலிங்கு மெந்நாட்டிற் காவெந்த விடன்தனியே,
தேவையோ யானங்கு செல்வேன், களிப்புடனே விரைவாய்.
போர்தனில் வெற்றிகொளு மாட்சி பெறவிரும்பில்
பொங்கமுடன் வந்திடுவாய் நீயுமென்ற னுடனே.

3. (கருவிலுருவாகி வந்து—மேட்டு.)

இன்பமுடன் எவ்வுயிர்க்கு வாழ்ந்திடவே கடல்சூழும்
இவ்வுலகைப் படைத்த ஈசனின்—அடிபோற்றி.
அன்புடனே யிவ்வுலகில் உற்றவுயிர்க் கெல்லாமிப்போ.
அரியவுண வளித்தும் இங்கு—மகிழ்வோனே.
துன்புற்றவர் களிப்புறவே விண்ணிடையிற் பாடுகின்ற
துகளுறுபல் புள்ளினத்தை—படைத்தோனே.
நின்புகழை யுரைத்திடவே—யார்க்கு மரிதன்றோ யிங்கு
நீணிலத்தில் எங்கும் நின்ற - பெருமாளே.

4. (கல்லார்க்கும்—சங்கராபரணம்.)

பரவுலகி லுறுமீசனே, வென்றன்முறை, கேளாய்,
பகலிரவுன் வசமல்லவோ, வடியேனருட், கடலே,
சரணமலர் போற்றுமெனைக் கடைக்களிற்கண், டருளாய்,
தயவுடனென் மனைசுற்றமுங் காத்தருள்செய், வாயே.
தரணியிலே யென்னுடனே கூடிவிளை யாடுந்
தருபாலனர யன்புடனே பாவித்தருள் பரனே,
வரதாபய கரனே, யெமைநாடோறு நற்குணத்தில்
மண்ணுலகில் மிகுந்தோங் கிடவைதே யருள்புரிவாய்.

5. (கல்லார்க்கும்—கரஹரப்பிரியா.)

மீனினங்காள், விண்ணெங்கனும், பூத்தொளிருஞ் சிறிய,
மீனினங்கா ளென்றுமொளி வீசிவிளங் குமினே,
யானுமிங்கே யுங்கள்வர, லாறிதென, வறியே.
யேதனவே யதிசயித்து நிற்கின்றது காணீர்.
வானிடத்தே மனமணுகாத் தூரத்தினிற் கப்பால்.
வயிரநீ கருங்களழ கேதென்றுரை செய்வேன்.
மீனினங்கா ளுங்கவிள யான்காண்பொழுது தோறு
மெய்யனுமை யாக்குமையன் சிறப்பெண்ணியே துதிப்பேன்.

# ஆறு வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு பாட திட்டம்.

## இயற்கை பாடம்.

1. பள்ளிக்கூடத்தில் வளர்க்கும் பிராணிகளை கவனித்தல்.

2. தோட்டத்தில் குழந்தைகளுக்கு என்று ஏற்படுத்தப் பட்ட பாத்திகளில் கிழங்குகள், செடிகள், புஷ்பங்கள் இவைகளை கவனித்தல்.

3. உபாத்தியாயர் மேஜைமேல் வைப்பதற்காவது அல்லது அசௌக்கியமான குழந்தைகளுக்கு கொடுக்கவாவது புஷ்பங்களை சேகரித்தல்.

4. ஆற்றின் கரையிலாவது, தோப்பிலாவது உபாத்தியாயருடன் செல்லுதல். அவ்விடத்தில் புஷ்பங்கள், இலைகள், கற்கள் முதலியவற்றைச் சேகரித்தல்.

## சம்பாஷணையும் கதையும்.

1. பிராணிகளையும் புஷ்பங்களையும்பற்றி பேசுதல்.
2. பழக்கமான பிராணிகளைப்பற்றி பேச்சும் கதையும்
3. வெயில், மழை முதலியவற்றின் ஸ்திதியில் மாறுதலுண்டானாலும், இயற்கை ஸம்பவங்கள் உண்டானாலும், அவை குழந்தையின் வாழ்கைக்குக் கிட்டிய சம்பந்தமுண்டானால் பருவங்களைப்பற்றிப் பேச்சு.
4. குடும்பம், வீடு சம்பந்தமான சின்ன கதைகள்.
5. குழந்தைகளை கிராமத்தில் செய்யும் அனேக கைத்தொழில் சாலைகளுக்கு கொண்டு காட்டிய பிறகு அத்தொழில்களைப்பற்றி பேசுதல்.
6. இலகுவான பூதக்கதைகள், புராணக்கதைகள் (உ-ம்.) சின்டரல்லா, ரெட்ரயிடிங்ஹுட் தெக்ஷிணபாலர் கதைகள்.

## கைத்தொழில்.

1. கட்டை அடுக்குதல்.
2. மணிகோர்த்தல், புஷ்பங்கள் அல்லது விதைகளை மாலையாகக் கோர்த்தல்.
3. களிமண், மணல் இவைகளில் உருவமமைத்தல்.
4. காகிதம் மடித்தல், காகிதம் கத்தரித்தல்.
5. மொத்தத்திலும், கோட்டிலும் சித்திரம் வரைதல்.
6. விளையாட்டு சாமான்களைக்கொண்டு விளையாடுதல்.

## பாடுதல்.

1. முதல் முதல் பார்க்கும்போதும், கடைசியாய் பிரியும் போதும் சொல்வதற்குரிய பாட்டுகள்.
2. இலகுவான ஸ்தோத்திரங்கள், பிரார்த்தனைகள்.
3. பிராஸப் பாட்டுகள்.
4. கதை, ஆட்டம் இவற்றைப்பற்றிய பாட்டுகள்.

## தேகப்பயிர்ச்சி.

1. நடை பழகுதல்.
2. ஓடுதல்.
3. அநுகார ஆட்டங்கள்.
4. சுவாஸபயிற்சி வகைகள்.
5. தசை சம்பந்தமான தேக அப்பியாசங்கள்.
6. பாட்டுக் கச்சேரி (நாற்காலியாட்டம்).
7. பந்து ஆட்டங்கள்.
8. ஸ்வேச்சை விளையாட்டு.

## பாட அட்டவணை.

குழந்தைகளுக்கு பாட அட்டவணை கூடியமட்டிலும் நிர்பந்தத்துக்கு உட்படாம லிருக்கவேண்டும். ஒரு பாடமும் 20 நிமஷத்திற்கு மேற்படக்கூடாது. குழந்தைகள் தாராளமாய் அங்குமிங்கும் சலிக்க இடமிருக்கவேண்டும். என்னுடைய கிண்டர்கார்டன் பள்ளிக்கூடத்தில் அனேகமாய் அநுசரித்துவருகிற பாட அட்டவணையை இங்கு மாதிரிக்கு காட்டப் பட்டிருக்கிறது.

## ஆறு வயதுக்குட்பட்ட பிள்ளைகளுக்கான பாட அட்டவணை.

| காலம். | திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி. |
| --- | --- |
| 10 | பள்ளிக்கூடம் திறந்ததும் பெயர் வாசித்தல், ஆடைகள் கைகள் இவைகளை பரிசோதித்தல். |
| 10–15 | இயற்கைபாடம் பிராணிகளை கவனித்தல், வகுப்பிலுள்ள செடிகளுக்கு தண்ணீர் கொட்டுதல், வகுப்பிலுள்ள வதங்கின புஷ்பங்களை எடுத்தெறிதல், புது புஷ்பங்கள் கொண்டுவர தோட்டத்திற்கு செல்லுதல். |
| 11 | பாஷை பாடம், கதை, கதையை நடித்தல், ஸ்வேச்சை விளையாட்டு, பாட்டு. |
| 12 | தூக்கம் வேண்டியவர்கள் தூங்குதல், மற்றவர்கள் கட்டை யடுக்குதல், மணலில் விளையாடுதல். |
| | 12–30—1–30 வரையில் விடுமுறை. |
| 1–30 | சம்பாஷணை. |
| 1–45 | கைத்தொழில் (பாவப்பிரகாசமானதும், நிருமிப்பதுமானதும்). உருவமைத்தல், சித்திரவேலை காகிதம் கத்தரித்தல். இந்திரியங்களுக்கு அப்பியாசம், கட்டை யடுக்குதல். |
| 2–5 | ஆட்டங்களும், தேகப்பயிற்சிகளும், அல்லது இயற்கைப் பாட சம்பந்தமாக உபாத்தியாயருடன் உலாவுதல். |
| 2–45<br>3 | இஷ்டப்பிரகாரம் விளையாடுதல். |

# இரண்டாம் பாகம்.

## 6 முதல் 8 வயதுள்ள பிள்ளைகள்.

### அத்தியாயம் I.

#### பொதுத்திட்டம்.

பெரிய குழந்தைகளின் பாடங்கள் சிறு குழந்தைகளுடைய பேச்சு விளையாட்டுகளுடைய தொடர்ச்சியை அனுஸரித் திருக்கவேண்டியது என்பது நன்கு தெரிந்த விஷயம். அந்தப் பாடங்கள் வரவர வேடிக்கை ஸ்வரூபம் குறைந்து யதார்த்தமாகவே பாடங்களாகின்றன. பாடங்களின் நேரமும் அதிகப்படுத்தப் படுகின்றது. பாடங்கள் முன்னிலும் வரையறுக்கப்பட்டதாகும். ஆனால் இன்னமும் ஸ்வயேச்சையே கிண்டர்கார்டனில் பிரதான மார்க்கம். ஸ்வயேச்சை யென்றால் கூச்சலிடுவதும், குழந்தைகள் இஷ்டமானபோது இஷ்டமானதை செய்வதல்ல. ஸ்வயேச்சை யென்றால் சாதுர்யமாய் சில விஷயங்களை குழந்தைகளுக்கு கற்பிப்பது என்பதுதான். குழந்தையை தன்னாலானமட்டும் விஷயங்களைத் தானே கண்டறிந்துகொள்ளும்படி விடவேண்டும். வேண்டும்படி இயங்க விட்டு அவனைக் கேள்விகள் கேட்கும்படி செய்யவும் அந்தக் கேள்விகளுக்கு பதில்சொல்லவும் அவனுக்கு இயற்கையாயுள்ள சுறுசுறுப்புக்கும் அவகாசம் கொடுக்கிறோம். யாதொரு பிரயோஜனமுமில்லாத விஷயங்களை குருட்டுப்பாடம் பண்ணும்படி செய்கிறதில்லை.

**சீலத்தை வளர்த்தல்.**—தினந்தோறும் பள்ளிக்கூடத்தில் நடக்கும் ஒவ்வொரு நுண்ணிய விவரமும், ஒவ்வொரு சம்பந்தமும், ஒவ்வொருசெயலும், குழந்தையின் சீலத்தை வளர்ப்பதற்காம்படி செய்யலாம். கிரமமாக விருத்தியாகும் அறி

வும், கவனசக்தியும் தன் கூட்டாளிகளிடத்தில் அன்பை உண்டுபண்ண சாதனமாகும். வேலையில்லாமல் சோம்பேறியின் கைகள் குரும்பைச் செய்கின்றன. கைகளை உபயோகிக்கும் வழி தெரிந்ததும் குரும்பை செய்யாமல் தடுத்து நல்ல காரியங்களை செய்ய எத்தனிக்கின்றன.

**பக்தியாய் நடக்க கற்பிக்கவேண்டும்.**—எது பரம்பொருளின் ஆதீனத்தில் இருக்கிறோம் என்று உணர்ச்சியை குழந்தைகளிடத்தில் எடுத்து உண்டுபண்ணுமோ, ஜகத்தினுடைய அழகையும் ஒழுங்கையும், பரம ரஹஸ்யத்தையும் கண்டு பக்தியுடன் ஆச்சரியப்படும்படி எதெது செய்யுமோ, பூஜிக்கவேண்டுமென்கிற உணர்ச்சியை எதெது உண்டாக்குமோ, அல்லது நிஜமான பெருமையைப்பார்த்து புகழச்செய்யுமோ அதெல்லாம் பக்தியை வளர்க்கும்.

எந்த காலத்திலும் நல்ல வழக்கங்களை ஜாக்கிறதையாக பயிலச் செய்யவேண்டும். பேச்சிலும், செய்கையிலும் மரியாதையையும் உண்மையுடைமையையும் வற்புறுத்தவேண்டும். வகுப்பை எப்போதும் சுத்தமாய் வைத்துக்கொள்ள வேண்டும். ஸாமான்கள் அததனிடத்தி லிருக்கவேண்டும்.

**உபாத்தியாயர் மாதிரியாயிருத்தல்.**—யாருடன் பழகுகிறார்களோ அவர்களைப்பார்த்து அவர்களைப்போல் நடக்க எத்தனிப்பது குழந்தைகளின் இயற்கை. குழந்தைகளுக்கு நல்ல சீலம் புகட்டுவதற்கெல்லாம் உபாத்தியாயர் இருக்கும் தன்மையே மூலகாரணமாம். உபாத்தியாயரின் குரல், நடை, உடை, பொறை, மரியாதை, அன்பு இவைகளெல்லாம் குழந்தைகளின் சீலத்தில் கட்டாயம் பிரதிபலிக்கின்றன. சிறு குழந்தைகளுக்கு கற்பிக்கும் உபாத்தியாயர் ஸுமுகமாயிருக்கவேண்டும். தன் வேலையை ஆசையுடன் செய்யவேண்டும். தன்னைச்சுற்றிலு முள்ளவர்களுக்கெல்லாம் முகமலர்ச்சியும் செய்வனவற்றில் ஆசையும் வரும்படி செய்யவேண்டும். இது குழந்தைகளுடைய ருசிகளையும் பற்றுதல்களையும் பரிவுடன் அறிவதற்கும், விருத்தியாக்கி புஷ்டீகரிக்கவும் ஸாதனமாகும். இளம் பருவத்திற்கேற்ற புதுபுது பற்றுதல்களை திருப்தி பண்ணவும் அவர்கள் இயல்பாய் செய்யும் செயல்களை நல்லவழியில் செலுத்தவும் நாம் ஸமர்த்தராயிருக்கவேண்டும். அவர்

களுடைய உற்சாகத்தை அடக்குவதைவிட தகுந்தவழியில் செலுத்துவதுமேல். நம் ஏவல்கள் 'செய்' என்று உடன்பாடா யிருக்கவேண்டும் "செய்யாதே என்று எதிர்மறையாயிருக்கக் கூடாது.



## அத்தியாயம் II.

### தாய்பாஷை கற்பித்தல்.

சுயபாஷையைக் கற்பிப்பதுதான் பள்ளிக்கூடத்து படிப் பில் மிகவும் முக்கியமானது.

கிண்டர்கார்டனில் பேசும் சக்தியை விருத்தி செய்யும் விஷயத்தை முதன்மையாகக் கொள்ளவேண்டியது. மனதி லுள்ள கருத்தை வாயால் சொல்லுவதில் நல்ல அப்பியாசம் பெற்று அதோடு கதைகளை நடனரூபமாய் காட்டியும், சிறு பாட்டுக்களை ஒப்பிக்கச்செய்தும், சுற்றிலுமுள்ள விஷயங் களைப் பற்றி பேசச் செய்தும் பழக்கப்பட்ட பிள்ளை இவ்வித பழக்கமில்லாத பிள்ளையைவிட வெகு ஸமர்த்தனுயிருப்பன்.

நல்ல பாஷாஞானத்தை உண்டாக்குவதற்கு முதற்சாதனம் திருத்தமாய் பேசுவதை கேட்கத்தகுந்த ஸமயம் வாய்ப்பது தான். திருத்தமானபேச்சை வீடுகளில்கேட்க வழியில்லை யாதலால் உபாத்தியாயரிடமிருந்து அவன் கேட்கும்பேச்சு நல்ல நடையிலிருக்கவேண்டும். முதலில் அவன் கருத்துக் களை கோர்வையாய் அமைத்துக்கொள்ளச் செய்வது முதல் வேலை. பிறகு தெளிவாயும் தவறின்றியும் பேசப்பழக்குவது. குழந்தையை அவனுக்கு ஸஹஜமானபடி பேச விடவேண்டும். இப்படி பேசவேண்டும் அப்படி சொல்லவேண்டுமென்று தடு த்து தொந்திரவு செய்யக்கூடாது "நீ சொல்வது ஒரு வாக் கியமாயிருக்கவேண்டும்" என்பதுபோன்ற நிர்ப்பந்தங்களை செய்யக்கூடாது. இப்படி எல்லாம் செய்தால் குழந்தைகளுக்கு ஸஹஜமான வாக்குசாதுர்யம் மீளாமல் போய்விடலாம். ஆனல் பிழையறப்பேசும் திறத்தை அபிவிருத்தி செய்யவும். அவன் பிழையாய் பேசுவதைத் திருத்துவதற்கும் மார்க்கம் என்ன என்று கேட்கலாம். நமது மார்க்கம் எதிர்மறையாயிருப்பதை

விட உடன்பாடா யிருப்பதுதான் மேல். நம் சம்பாஷணைக ளும், கதைகளும், செய்யுள் தொகுதியும், கூடியவரையில் நா னாவிதமாயிருக்கவேண்டும். பொருள்களைக்கொண்டு உற்சாக முண்டாகும்படியும், படங்கள் முதலியவற்றால் நன்றாய் விளக் கியும், கற்பித்தால் பலவிஷயத்துக்கடுத்த அனேக தகுந்தவார்த் தைகளை குழந்தை தெரிந்து கொள்ளுவதற்காகும். தவிர தன் வாயாலே தன் மனதிலுள்ளவற்றைச் சொல்ல ஒவ்வொரு குழந்தைக்கும் எவ்வளவு கூடுமோ அவ்வளவு அவகாசம் கொடுக்கவேண்டும். முக்கியமான அம்சம் ஒன்றுண்டு. பிழை யற்ற வாக்கியங்களை அடிக்கடி பல ஆவிருத்தி அவன் மனதில் படும்படி செய்யவேண்டும்.

ஆரம்பத்தில் அதிகமாய் ஒன்றையும் எதிர்பார்க்கக் கூடாது. சில பெரிய தப்பிதங்களை மட்டும் எடுத்துக்காட்டி அவற்றைத் திருத்தவேண்டும். மற்றவற்றை போகப்போக ஒன்றிரண்டாக காண்பிக்கவேண்டும். ஒவ்வொரு பாடத்திலும் குழந்தைக்கு பலபல தகுந்த வார்த்தைகளை தெரிவிக்கவே ண்டு மென்பதையும் அவன் பேச்சுக்கடையை செம்மைப் படுத்தவேண்டு மென்பதையும் ஞாபகத்தில் வைக்கவேண்டும்.



## அத்தியாயம் III.

### கதைகள்.

பள்ளிக்கூடத்து வேலையில் வேடிக்கையின்றி சிரமம் தரக் கூடியதில் கதை வெகு உதவியாகும். தகுந்த கதை ஒன்றை நன்றாய்ச் சொல்லக் கேட்குங்கால் குழந்தை தேனைமுற்றிலும் ஒருங்கே சேர்ப்பதுபோல் காண்கிறான். இப்படி ஒருங்கே சேர்க்கும் வழக்கமானது பிற்காலத்தில் நல்லவேலை செய்வ தற்கு நல்ல ஆரம்ப பிரயத்தனமாகும்.

ஸாமான்ய திறமையுள்ள பிள்ளைகளுக்கு ஒரு சிறு கதை அல்லது படித்த பாடத்தின் ஸாராம்சத்தை திருப்பிச்சொல் லும் ஸாமர்த்தியம் வேண்டும். சொற் பிழைகளை திருத்த வேண்டும். ஆரம்பிக்கையிலேயே அதிகமாய் எதிர்பார்க்க லாகாது. பிரபலமான தப்புகளைமாத்திரம் எடுத்துக்கொண்டு

அவற்றை நன்ருய் கவனிக்கச்செய்யவும். போகப்போக மற்ற வற்றை தடவைக்கு ஒன்றிரண்டாய் கவனிக்கவேண்டும்.

கதை சொல்வதென்ருல் குழந்தையின் புத்திக்கு வெகு சிரமம். ஆகையால் அவன் பேச்சு நாம் நினைக்குமாறு இல்லாத போதெல்லாம் திருத்துவது யுக்தமல்ல அது அவனுக்கு மானக்குறைவாகவும் படும். கதையால் குழந்தையின் புத்தியை பல வழிகளால் விருத்திக்குக் கொண்டுவர நமக்கு ஒரு ஸாதனம் ஏற்படுகிறது. குழந்தையைச்சுற்றி பெருந்தன்மைகளை நிறைக்க ஒருவழி யுண்டாகிறது. சுற்றியிருக்கும் பெருந்தன்மைகளால் குழந்தையுமறியாமல் அவன் வாழ்க்கையும் அவன் சீலமும் மாறுவதற்கு ஏது உண்டாகிறது. கதைகளை கேட்பதால் நல்ல நோக்கங்கள் ஏற்பட்டு நற்காரியங்களைச் செய்ய தூண்டுதல் உண்டாகிறது.

கதையை திருப்பிச்சொல்லச் செய்வதன் ஆரம்பத்தில் கரும்பலகையில் வரிசையாகக் குறிப்புகளை எழுதவும். இவ்விதமாக ஆரம்பம்முதல் வரிசையாகவும், ஒழுங்காகவும் வேலை செய்ய வழக்கப்படுத்தவும். (உ-ம்.) சிண்ட்ரல்லா கதையை பின் வருமாறு பிரிக்கலாம்.

1. சமையற் கட்டு.
   (a) சிண்ட்ரல்லா தன் சகோதரிகளுக்கு உதவுதல்.
   (b) அவளுடைய ஞானத்தாயாகிய தேவு வருதல்.
2. சிண்ட்ரல்லா பண்டிகைக்கு வருதல்.
3. கண்ணுடி ஜோடு.

ஒரு குழந்தை கதையைச் சொல்லும்போது மற்றவர்கள் கவனித்து கேட்கவும். தப்பிதங்களிருந்தால் கவனித்து வாருங்களென்று சொல்லவும். தப்பிதங்களை அவர்களை திருத்தச் சொல்லவும். ஆனால் கதை சொல்லவேண்டிய வரையில் சொல்லி முடிப்பதற்குள் ஒருவரும் குறுக்கிடக்கூடாது. ஒரு விஷயத்தை பலவிதமாய்ச் சொல்வதை அங்கீகரிப்பதாலும், உற்சாகப் படுத்துவதாலும், ஒரேவிதமாய்ச் சொல்லி அலுப்பு வாராமல் பல முகமாய் இருக்க முயலவும், அந்தந்த பிள்ளைகளின் பிரத்தியேக ஸ்வபாவத்தை விருத்தி பண்ணவும் உபாத்தியாயர் முயலவேண்டும். வயதுவந்த பிள்ளைகள் தகுதியான வார்த்தை

களை பிரயோகிக்கவும் வார்த்தைகளின் பொருள் வேறுபாட்டை கண்டுபிடிக்கவும், வர்ணனைக்கு ஏற்றவார்த்தைகளை எடுத்துச் சொல்லவும் வேண்டும்.

பொதுவாய் தெளிவும், திருத்தமுமுள்ள பேச்சை குழந்தைகளிடத்தில் எதிர்பார்க்க முடியாது. சிரமமில்லாமல் பேசவும் திருத்தமானதைக் கண்டால் இது திருத்தமென்று உணரவும் பிள்ளைகள் பயிலவேண்டும்.

இந்தப் பருவத்தில் செய்யும்வேலையை குழந்தைகள் இப் பருவத்தில் பேசும் திறமைகளாலேயே பரீக்ஷித்து அளவிட முடியாது. ஏனெனில் அது பெரும்பாகம் தற்போது புத்தியின் உள்ளேயே அமுங்கிக் கிடக்கும். பிறகாலத்தில் அது கீழாருக விருந்து மேலுக்கு வரும்.



## அத்தியாயம் IV.

### செய்யுட் பாடம்.

செய்யுளிலும், பாட்டிலும் திரும்பத்திரும்ப வருகிற சப்தத்தினுல் குழந்தைகளுக்குள்ள ஆசையைப்பற்றி முன் அத்தியாயங்களில் சொல்லியிருக்கிறது. இப்படி பிராஸ முதலியவற்றில் அவர்களுக்கு ஸஹஜமாயுள்ள ஆசையை திருப்தி செய்விக்கவேண்டும். இந்த ஆசையும் எதுவும் ஒழுங்காயும் வரிசையாகவும் இருக்கவேண்டுமென்கிற இச்சைதான். அவர்கள் ரஸிகராய் கோரும்வற்றை கொடுக்கவேண்டும். அவனுடைய காவ்யருசியையும் வளர்க்கவேண்டும். ஆசையை விருத்தி செய்யவேண்டும். குழந்தை அறிந்து ஆனந்திக்கக்கூடிய காவ்யங்களை அவர்களுக்கு சொல்லிக் கொடுக்கவேண்டும். அவர்களுக்கு ஆனந்தம் உண்டாவதானுல் காவ்யங்களைச் சொல்லிக் கொடுக்கவேண்டும்.

செய்யுளானது குழந்தையின இயற்கையை உள்ளபடி கவரவேண்டுமென்ருல் அது வெகுவாய் உபாத்தியாயருக்குள்ள ஸ்வாரஸ்ய ஞானத்தால்தான் ஆகவேண்டும். அழகாயும் மனோகரமாயும் இருக்கக்கூடிய சிறு செய்யுள் தொகுதிகளை சில சமயங்களில் தெரிந்தெடுக்கவேண்டும். பெரிய உண்மைகளை வற்

புறுத்துகிற செய்யுள்களை பிள்ளைகள் மனப்பாடம் பண்ண வேண்டும். பெரிதாயிருக்கும் செய்யுள்களை அப்போதைக் கப்போது உபாத்தியாயர் வாசித்துக்காட்டி பொருளையும் விளக்கவேண்டும். முற்றிலும் நம் மனதைக்கவர்ந்து காரிய காரியாய் ஆகவேண்டுமானால் காவ்யத்துக்கு தகுந்தபடி நம் மனநிலை இருக்கவேண்டும்.

இன்று நாம் ஆறுதல் வேண்டலாம்; நாளைக்கு நாம் தெம் பாயிருக்கலாம்; ஆனால் தெம்போடு களிப்பும் வேண்டும் என்று விரும்பலாம். இன்று தத்துவஞான நூல்களில் உலா வும்படி தோன்றுகிறது, நாளை லகுவிஷயமான செய்யுளைப் படிக்க விரும்புகிறோம். ஆகையால் குழந்தைகளுக்கு சமயத் திற்கு தகுந்தாப்போல் பரிதாபம், சிரிப்பு, சந்தோஷம் இவற் றை உண்டுபண்ணக்கூடிய செய்யுள்களை நிதானமாய் ஆலோ சித்து தெரிந்தெடுத்துச் சொலலவேண்டும். செய்யுளின் விஷயத்தை நாம் ஜாக்கிரதையாக கவனித்துப் பார்க்கவேண் டும். குழந்தைகளை திடீரென்று அனேக புதிய பாவங்களின் நடுவில் விடுவது பிரயோஜனமில்லை. அவன் திகைத்து மனந் தடுமாறுவான். செய்யுளின் கருத்தை அறிவதற்கான பிரயத் தனங்களை விட்டு விடுவான். ஆகையால் ஒரு செய்யுளை சொல் லுவதற்கு முன் அதன் கருத்துக்கள் குழந்தைகளுக்கு வெகு வாய் தெரிந்திருக்கும்படி பார்ப்பது நலம்.

செய்யுளை சிறு குழந்தைகளுக்கு காதுகள் மூலமாய் அறி விக்கவேண்டுமேயொழிய கண்கள் மூலமாய் அறியச்செய்ய லாகாது. அதாவது குழந்தைகளுக்கு செய்யுளை படித்துக் காட்டவேண்டும். அவர்களை பார்த்துப் படித்துக்கொள்ளும் படி செய்யலாகாது என்னென்றால், செய்யுளைப் படிக்க அவர்களுக்கு இசையும் சந்தமும் தெரியாது சில இடங்க ளில் வேண்டும்போது அபிநயித்துக் காட்டலாம். செய்யுளின் வியாக்கியானத்தை தவிர்க்க அதை கற்பிப்பதற்கு சிலநாள் முன்னரே குழந்தைகளை இடை யிடையே தயாரிக்கலாம். பழக்கத்திலில்லாத செய்யுளிலுள்ள வார்த்தைகளை வேறு பாடங்களிலும் சம்பாஷணையிலும் உபயோகித்து குழந்தை களுக்கு அறிவிக்கலாம்.



## அத்தியாயம் V.

### வாசிக்கச் சொல்லிக் கொடுத்தல்.

சிறு பிள்ளைகளுக்கு வாசிப்பு கற்பிப்பதென்றால், அதற்கு ஒருபக்கம் சுயபாஷையில் தங்கள் கருத்துக்களை வெளியிடும் சாமர்த்தியம் பிள்ளைகளுக்கு எவ்வளவு விருத்தியாயிருக்கிற தென்பதோடும், இன்னொருபக்கம் பிள்ளைகளின் உணர்ச்சி அபிவிருத்தியோடும், நல்ல நூல்களின் வாயிலால் புத்தி நிறைவு பெறுவதோடும், இருக்கும் கிட்டிய ஸம்பந்தம் நோக்கத்தக்கது.

தெரிந்த வார்த்தைகள் சொற்பம்.—எலிமெண்டரி பாடசாலைகளுக்கு வரும் பிள்ளைகள் அறிந்த வார்த்தைகள் சொற்பமானதால் வாசிக்கச்சொல்லிக் கொடுப்பதற்கு ஆரம்பதசையில் அது வெகு சிரமத்தைத் தருகிறது. ஆகையால் வாசிக்க சொல்லி கொடுக்குமுன் பேசப் பழக்கியிருப்பது அத்தியாவசிகம். புத்திக்கு நிறைவு, விரிவு, தூண்டுதல் தரக்கூடிய கதைகள், பாட்டுகள், செய்யுள்கள், இயற்கை முதலியவற்றைக் கவனிக்கும் பாடங்கள் ஒருகடவை ஆயிருந்தாலொழிய வாசிக்கச்சொல்ல பிரயத்தனப்படக் கூடாது.

வாசிக்க ஆரம்பிக்கத் தகுந்த வயது.—குழந்தைக்கு தன்னைச் சுற்றிலுமுள்ள பதார்த்தங்களிடத்தில் இயற்கையாய் இருக்கக்கூடிய பற்றுதல்களில் பரிசயமுண்டாவதற்குமுன் அப் பதார்த்தங்களுக்கு அறிகுறிகளானவற்றை கற்கும்படி குழந்தையை உபத்திரவிப்பது எவ்விதப் பயனுமின்றி அறியாமையாற் செய்யும் தப்பிதங்களில் ஒன்றென்பதை உணர ஆரம்பித்திருக்கிறோம். ஆகையால் ஐந்து வயதுக்குப்பட்ட பிள்ளைகளுக்கு வாசிக்கச்சொல்லிக் கொடுப்பதில்லை.

முதல் வாசிப்புப் பாடம். பள்ளிக்கூடத்திலும், வீட்டிலும் விளையாட்டு ஸ்தலத்திலும் பிள்ளைகளுக்கு பழக்கமான வார்த்தைகளை தேர்ந்தெடுக்க வேண்டும். முதற்பாடத்தில் சுமார் ஐந்து வார்த்தைகளிருக்கலாம்.

**கா, கை, டு,** போன்ற ஒலிகளையும் உயிர்மெய் யெழுத்துக்களையும் ஆரம்பத்தில் உபயோகிக்கக்கூடாது. **படம், மரம்,** இவைபோல் சுலபமாயிருக்கவேண்டும். **ஆணி, நரி** என்று இருத்தல் கூடாது.

அடுத்த பாடங்கள் முதல்பாடத்தை அனுசரித்ததாகவே இருக்கவேண்டும் **கா, தீ, பூ,** டெ என்பவற்றில், ா, ீ, ூ, ெ என்னும் குறிகள், **ஆ, ஈ, ஊ, எ** என்னும் ஒலிகளைக் காண்பிக்கிறதென்பது தெரிந்த விஷயம். ஆகையால் மேற்குறித்த ா, ீ, ூ, ெ என்னும் அடையாளங்களுக்கு **ஆ, ஈ, ஊ, ஏ,** என்றே பெயர்வைத்து வரிசையாய் பாடத்துக்கொன்றாய் அவற்றைப்பற்றி நடத்தலாம்.

இரண்டாவது பாடத்தில் **ஆ** என்னும் ஒலியையும், அதனடையாளமான, **ா** வையும் ஆரம்பிக்கவேண்டும். **ஆ** என்கிற உயிரெழுத்தைச் சொல்லவேண்டாம். **தாகம், பாடம், காகம், நாய்** இம்மாதிரியான வார்த்தைகளை உபயோகிக்கலாம்.

ஆனால் இரண்டாம் பாடத்திலிருந்து பாடம் நடத்து முறை பின்வருமா றிருக்கவேண்டும்.

1. முதலில் கதைசொல்லுதல்.

2. ா அடையாளமுள்ள வார்த்தைகளையும், வாக்கியங்களையும் எடுத்துக்கொள்ளல்.

3. கடைசியாய் வாசிப்பதிலும் எழுதுவதிலும் இவ்வார்த்தைகளை உபயோகித்தல்.

பாடக்கடைசியில் **ா** அடையாளங்களை உபயோகித்த நான்கு, ஐந்து வார்த்தைகள் பிள்ளைகளுக்குத் தெரியும். இந்த வார்த்தைகளை மொத்தமாய் பார்க்கும்போது ஒவ்வொரு வார்த்தைக்கும் சம்பந்தமிருப்பது தெரியும். இந்த சம்பந்தம் கதையால் வெளிவரும்.

திருஷ்டாந்தமாக ஐ ஒலியின் அடையாளமான—ை—மாத்திரம் எடுத்துக்கொண்டால் கீழ்வருமாறு பாடம் நடத்தலாம்.

| காரியம். | சமாசாரம். முறை | கதை விளக்கம். |
|---|---|---|
| கதையை சொல்லுதல் | கடைத் தெருவில் ஒரு கிழவி வடை சுட்டுக் கொண்டிருந்தாள். அதை ஒரு காக்கை பார்த்துக்கொண்டிருந்து ஒரு வடையை தூக்கிக்கொண்டு போய்விட்டது. அதை வாயில் கௌவிக்கொண்டு ஒரு பாறையின் மீது உட்கார்ந்தது. அப்பொழுது இரை தேடிவந்த ஒரு நரி இதைக்கண்டது. அந்த நரி அந்த வடையை அடைய விரும்பிற்று. அதற்காக காக்கையின் இறகுகளை பற்றியும், அதன் குரலைப்பற்றியும், அழகைப்பற்றியும் நரி வர்ணித்தது. காக்கை தன் அழகைப்பற்றியும், குரலைப்பற்றியும் கர்வங் கொண்டு **கா கா** என்று உரத்துக்கத்திற்று. என்ன ஆயிற்று தெரியுமா? காக்கையின் வாயிலிருந்து வடை கீழேவிழுந்தது. அந்த நரி அதைக் கௌவிக்கொண்டு ஓடிவிட்டது. | சித்திரம் வரைந்துகொண்டே கதையைச் சொல்லு. |
| கேள்விகளுக்கு பதில் | 1. அந்தக் கிழவி என்ன செய்து கொண்டிருந்தாள்? 2. எங்கே அவள் வடை சுட்டாள்? 3. எது வடையை தூக்கிக்கொண்டு போயிற்று? | பதில்சிறுவாக்கியங்களாக இருக்கவேண்டும். |

4. எங்கே காக்கை உட்கார்ந்தது?
5. நரி காக்கையை எப்படி துதி செய்தது? நீ ஒரு அழகான பறவை என்றது.

இந்தக்கேள்விகளுக்கு பதில் வரும் வாக்கியங்களி லிருந்து (-ை-சப்தமுள்ள) முக்கியவார்த்தைகளை எடுத்தெழுது

வடை
கடை
காக்கை
பறவை

குறிப்பு: — முன் பாடங்களில்வந்த வார்த்தைகளில் ட, டி, க, கு இவைகளை கற்றிருப்பார்கள்.

முக்கியமான ஐ சப்தமுள்ள ை- அடையாளத்தை எழுதல்

இப்போது கரும்பலகையில் **கடை** என்று எழுது. ை- அடையாளத்தை வர்ணசீமைச் சுண்ணம்பால் எழுதவேண்டும்.

ை இதை சிவப்பு வர்ணத்தால் எழுதவேண்டியது.

1–வகுப்பு குறிப்பு பாடம்.

**டை** (அடையாளத் திற்கு) '**டை**' என்று உச்சரிப்பு '**ட**' வுக்கு '**ட**' உச்சரிப்பு ஆகையால்–**ை**–க்கு ஐ உச்சரிப்பு என்று சொல்லவும்.

ை
கடை
வடை
காக்கை
பாறை.

வார்த்தைகளை வரிசையாக எழுதவும்.

குறிப்பு:—1. முதற்பாடம் முதல் ஒவ்வொரு பாடத்திலுள்ள வார்த்தைகளையும் ஒரு காகிதத்தில் எழுதி வகுப்புச் சுவரில் தொங்கவிட வேண்டும்.

2. குறில் நெடிலுடைய அடையாளங்களின் வித்தியாசத்தைக் காண்பிக்க இரண்டுவித வர்ணங்களை உபயோகிக்கலாம்.

3. எந்த ஒரு உயிரெழுத்தின் ஒலிக்காவது (கு, து, பு இல் உ வின் அடையாளங்கள் (ு, ு, ு) இரண்டு மூன்று வித்தியாசமான அடையாளங்க ளிருந்தால் அவைகளை தனித் தனியே எடுத்துக்கொள்ளலாம்.

ா, ெ, ே முதல் ோ (கோ—இல் ஓ) வரையிலும் கற்ற பிறகு திரும்பவும் ஒருமுறை நடத்தவேண்டும். பின்வரும் அப்பியாசங்களை உபயோகிக்கலாம்.

1. கரும்பலகையில் பிள்ளைகள் பெயரை எழுதி வாசிக்கச் செய்தல்.

2. மரங்களின் பெயரை எழுதி வாசிக்கச் செய்தல்.

3. ரயில் ஸ்டேஷன்களின் பெயரை எழுதல் வாசித்தல். சிறு குழந்தைகளை வண்டித் தொடராகச்செய்து ரயில் வண்டி விளையாட்டை ஆடுதல்.

4. எழுத்துக்களைச் சேர்த்து வார்த்தையை ஏற்படுத்தல். இது ஒரு முக்கியமான பயிற்சி, இப்போது சிறு வாக்கியங்களை உபயோகிக்கலாம்.

**அடுத்த பாடங்கள்.**—செய்யுள் அல்லது பாட்டுப் பாடங்களில் நெட்டுருபண்ணின வாக்கியங்களை எடுத்துக்கொண்டு இந்த வாக்கியங்களில் வரும், **அ, ஆ** முதலிய உயிரெழுத்துக்களை செவ்வையாய் எடுத்துக்காட்டி நன்றாய் அப்பியாசம் செய்விக்கவேண்டும். அந்தப்பாட்டுகளை முதலில் பாடவேண்டும், பிறகு கரும்பலகையில் எழுதவேண்டும். கடைசியில் பிள்ளைகளை படிக்கச்செய்யவேண்டும். பிறகு சில வாக்கியங்களை ஒரு சிறு கதையாகும்படி எழுதி வாசிக்கச்சொல்லவும். அடுத்தபடியாக கையால் எழுதின புஸ்தகத்திலிருந்து சிறு வாக்கியங்களாலான ஒரு கதையை வாசித்தல் வேண்டும். நாலாவது வகுப்பு பிள்ளைகள் கைத்தொழில் செய்யும் நேரத்தில் ஒரு புஸ்தகத்தை தைத்தும், எழுதுகிறகாலத்தில் கதையை அந்த புஸ்தகத்தில் எழுதி மேற்சொன்ன மாதிரியான புஸ்தகங்கள் தயார் செய்யப் படுகின்றன.

**இதன்பிறகு வாசித்தல்.**—குழந்தைகள் சுமார் ஏழு வயதானதும் அச்சுப் புஸ்தகத்திலிருந்து வேடிக்கையான கதைகளை (தெரிந்தவையா யிருக்கலாம்) வாசிக்க ஸமர்த்தராயிருப்பார்கள். ஆனால் புஸ்தகங்கள் அச்சு பெரிதானவையா யிருக்கும்படி உபாத்தியாயர் கவனிக்கவேண்டும். வகுப்பில் ஒரு பையன் வாசிப்பதை மற்றப்பிள்ளைகள் கவனமாய் கேட்ட பிறகு வாசித்த விஷயத்தைப்பற்றி கேள்விகள் கேட்கலாம். வாசித்த பிறகு வாசித்ததில் தவறுதலுண்டானால் சொல்லுங்களென்று கேட்கலாம். ஆனால் இந்த வழக்கத்தை படிப்படியாய் ஆசரிக்கவேண்டும். இல்லாவிட்டால் பிறரிடத்தில் குற்றத்தையே பார்க்கும் கெட்டவழக்கம் படிந்துவிடும்.

**மனதிற்குள் வாசித்தல்.**—பிள்ளைகளுக்கு சில வாக்கியங்களை வாசிக்கத் தெரிந்த பிறகு முழுவாக்கியத்தையும் நன்றாய்ப்பார்த்து அதை வாசிக்குமுன் அதிலுள்ள விஷயத்தை மனதிற்கு வாங்கிக்கொள்ளும்படி பழக்கவேண்டும். ஆரம்பத்தில் வாக்கியங்கள் மிகவும் சிறியவையாக இருக்கவேண்டும். விளையாட்டுமூலமாய் இதற்கு குழந்தைகளை பயிற்றலாம். (உ-ம்.) உபாத்தியாயர் சில விளையாட்டு சாமான்களை மேஜைமேல் வைத்து பிள்ளைகளை நோக்கி "இப்போது சுண்ணாம்புக் கட்டியை கரும்பலகையிலிருந்து உங்களோடு பேசும்படிசெய்கிறேன்." கரும்பலகையில் எழுதுகிறதை மனத்திற்குள் வாசித்து அதன்படி செய்யுங்கள் என்று சொல்லவும். பின்வரும் மாதிரியான வாக்கியங்களை கரும்பலகையில் எழுதவும்.

"எனக்கு ஒரு பொம்மை கொண்டுவா,"
"பந்தை பையில் போடு,"
"ராஜத்துக்கு ஒரு பெட்டி கொடு" முதலியவை.

குழந்தைகள் அரைவட்டமாக நாற்காலிகளில் உட்கார்ந்திருக்கிறார்கள். அவர்கள் கரும்பலகையில் எழுதியிருப்பதைப் பார்த்து அதன்படி செய்ய ஓடுகிறார்கள். இரண்டு மூன்று பிள்ளைகள் தான் ஒருதடவையில் போகலாம் என்று திட்டம் செய்யவும்.

**அடுத்தபடி.**—வாக்கியங்களை கரும்பலகையில் எழுதி அதை சொல்லச்செய்யலாம். அல்லது அந்த வாக்கியம் என்ன

செய்யச் சொல்லுகிறதோ அந்தப்படி செய்யச்சொல்லலாம். பிள்ளைகள் தேர்ச்சியடைய அடைய சுலபமான சிறு கதைகளைச்சொல்லி அவற்றை அவர்களே கண்டு பிடிக்கும்படி செய்யலாம்.

மாதிரியாக வாசித்தல்.—பிள்ளைகளுக்கு புஸ்தகங்களிடத்தில் ஆஸ்தையும் மரியாதையும் உண்டாவதற்கும்; வாசிக்கக் கற்றுக்கொள்ள வேண்டுமென்கிற ஒரு ஆசையை கிளப்புவதற்கும்; உபாத்தியாயர் பிள்ளைகளுக்கு உரத்து வாசித்துக்காட்டுவது வெகுஸாதகமா யிருக்குமென்பதை நன்ருய் அறியவேண்டும். இப்படி வாசித்துக்காட்டுவது திருத்தமான உச்சரிப்புக்கள் காதில் கேட்டு வழக்கப்படுவதற்கும், சம்பாஷணைப் பாடங்களில் வழங்கும் நடையைவிட சிறந்த தமிழ் நடையை பரிசயம் பண்ணுவிப்பதற்கும் ஸாதனமாகும். ஆனல் பிள்ளைகள் உபாத்தியாயர் மாதிரி செய்வதோடு நிற்காமல் தாங்கள் செய்வதை நன்ருயறிந்து செய்யும்படி கவனிக்கவேண்டும்.

எழுத்துக்கூட்டல்.—பதத்தின் உருவை நன்ருய் கிரஹிக்க கண்ணை பழக்கவேண்டும். உபாத்தியாயர் முதலில் வார்த்தையை கரும்பலகையில் எழுதி பிள்ளைகளை நன்ருய் கவனிக்கச்செய்து பிறகு அந்த வார்த்தையை அழித்துவிட்டு ஞாபகத்திலிருந்து அதை எழுதச்செய்தால் அந்தப்பழக்கம் வரும். பிள்ளைகளால் அப்படிசெய்ய முடியாமற்போனல் இன்னமொருதரம் இந்த முறையை செய்துபார்க்கலாம். போகப்போக வார்த்தைகளைச் சொல்லி பிள்ளைகளை அவற்றை எழுதும்படி செய்யவும்.



## அத்தியாயம் VI.

### எழுதுதல்.

பாலர் வகுப்பில் மணலில் எழுதிக்கொண்டுவந்து பிறகு சிலைச்சுண்ணும்பு கொண்டு வரைய கற்றுக்கொள்ளுகிருர்கள் என்பதை முன்னுலேயே பார்த்திருக்கிருேம். லகுவான வார்த்தைகளை இன்னவை என்று அறிந்துகொள்ளுவதற்கு

5, 6 மாதம் வரையில் கஷ்டமாயிருக்கும். இந்த ஆரம்ப கஷ்டம் நீங்கினதும் எழுதக் கற்பிக்கவேண்டும்.

முதல்பாடங்கள் கையை ஸ்வேச்சையாக உபயோகித்து அனேகவிதமான சித்திரங்களை வரைதல். சுவரில் அல்லது கரும்பலகையில் எழுதப் பழகுதல். கைவீசி வரையக் கூடிய இடம் ஏதானாலும் சரி, அதில் மேற்சொன்ன மாதிரி வரையப் பழகுதல். கை இலகுவாய் இயங்கப் பழகுவது தான் இவைகளின் முக்கிய கருத்து. (Genetic Psychology by C. H. Judd.)

முதலில் இரண்டுவிதமான பாடங்கள் வேண்டும்.

1. ஸ்வேச்சையாய் கையை உபயோகித்து கோடுகளையும், வளைவு கோடுகளையும் வரைதல்.

2. சுலபமான வார்த்தைகளை எழுதப் பழகுதல்.

கூடும்போதெல்லாம் எழுத ஏற்பட்டவார்த்தைகளை சித்திர விளக்கத்தாலும், நடனமுகமாகவும் அறிவுக்குப் புகட்ட வேண்டும். கூடிய சீக்கிரத்தில் சிறுவாக்கியங்கள் எழுதப்பட வேண்டும். அவைகள்தான் ஆஸ்தையை உண்டுபண்ணும். கொஞ்சகாலம் கரும்பலகையில் எழுதி பழகிய பிறகு கோடு போட்ட அல்லது கோடுபோடாத காகிதத்தில் மிருதுவான சீமைச்சுண்ணாம்புகொண்டு எழுதச்செய்யவும்.

காகிதத்தில் பென்ஸிலால் ஸாதாரண வாடிக்கைப்படி எழுதுவதை பின்புதான் ஆரம்பிக்கவேண்டும். ஏனென்றால் அதற்கு சிறுதசைகள் ஒத்து வேலை செய்யவேண்டும். கண்களுக்கும் அதிக சிரமம். வாசிப்பவன், எழுதுபவன் இந்த இருவர்களையும் மனதில் வைத்துக்கொண்டுதான் எந்த தினுசாய் எழுதவேண்டும் என்பதை ஆலோசிக்கவேண்டும். எந்த தினுசுக்கும், தெளிவு எளிதான இயக்கம். இவை இரண்டும்தான் தினுசை நிர்ணயிக்கவேண்டிய அம்சங்களாகும்.

**தேகநிலை.**— பாதங்களை நன்றாய் பூமியில் ஊன்றி வைக்க வேண்டும். முதுகு அநேகமாய் செங்குத்தா யிருக்கவேண்டும். முதுகெலும்புத் தண்டுக் கோட்டில் தலையிருக்கவேண்டும். இடதுகை காகிதத்தை பிடித்திருக்கவேண்டும். காகிதம் மேஜை ஓரத்திற்கு அதிக ஸமீபத்தி லிருக்கலாகாது. மேஜை ஓரமும், காகிதமும் ஸமாந்தரமா யிருக்கவேண்டும்.



# அத்தியாயம் VII.

## இயற்கைப் பாடம்.

எவ்வளவு தூரந்தான் குழந்தைகளுக்கு இயற்கை பொருளிலுள்ள ஆசையை கிண்டர்கார்டனில் திருப்திசெய்விக்க முடியும்? முன்னமே சிறு குழந்தைகளுக்கு இஷ்டமான பிராணிகளை வைத்து வளர்ப்பதைப் பற்றியும் செடிகளைப் பாதுகாப்பதைபற்றியும், அவர்கள் சுற்றிலும் இருக்கும் இயற்கை பொருள்களை கவனிப்பதைப்பற்றியும் சொல்லியிருக்கிறோம். இந்த வயதில் "குழந்தைகள் தலையை புல்மேல்வைத்துப் படுத்து சின்னம் சிறிய காட்டை விழித்துப்பார்த்து அதில் அதி விநோதமான ரூபங்கள் ஏராளமாய் நிறைந்து வளர்ந்திருப்பதை கண்டதாக நினைக்காத பிள்ளையே கிடையாது" (Stevenson).

இந்த பருவத்தில் இயற்கை பாடத்தில் பின் வருவன இரண்டும் வேண்டும்.—1. கவனித்து பார்க்கும் பாடங்கள். பழக்கமான பொருள்களை உற்று கவனிக்கவேண்டும். பொருள்கள் நேரில் கொண்டுவைக்கப் படவேண்டும். தங்கள் கதைகளை எல்லாம் தாங்களே குழந்தைகளுக்கு நேரில் சொல்லவிடுவதுபோல் இருக்கவேண்டும். செய்யவேண்டியதெல்லாம் என்னவென்றால் வழிகாட்டுவது, குறிப்புக்காட்டுவது, உற்சாகப்படுத்துவது, நேரில் தெரியாத ஆவசிகமான ஸம்பந்தங்களை எடுத்துக் காட்டுதல், பிள்ளைகளுக்கு விளங்குவதற்கரிதான விஷயங்களை விளங்கச் செய்தல்.

2. வர்ணனைப் பாடங்கள். — அவையாவன: இப்போது குழந்தைகளை சுற்றியுள்ளவற்றை விட்டுவிட்டு அவற்றுக்குப் புறம்பானவற்றை கவனிக்க செய்வதும் அவர்கள் கண்டிராத காட்சிகளை மனதால் அமைக்கச் செய்வதும்தான். நாம் முதல் அவர்களுக்குத் தெரிந்து பழக்கமான வற்றைக் கொண்டு ஆரம்பித்து படங்கள், மாதிரி உருவங்கள், சித்திர விளக்கங்கள் வர்ணனைகள், இவற்றின் மூலமாய் அறியாத இப்பெரிய லோகத்தை சிறிது சிறிது பார்க்கச்செய்யவேண்டும்.

## கவனித்துப் பார்க்கும் பாடங்கள். வயது 5 முதல் 8 வரையில்-உத்தேசித்த பாடதிட்டம்

பிராணிவகை.—நாற்கால் பிராணிகள்—பூனை, நாய், பசு, ஆடு முதலியன. அவற்றுக்கே உரித்தான இயக்கங்கள், வழக்கங்கள் இவைகளை கவனித்தல். நிறம், உறுப்புகள், தோல் முதலியது. ஆகாரம், உபயோகம், குட்டிகள் வளர்ப்பு இவைகளைப்பற்றி பொதுப்படையான வர்ணனை.

பறவைகள்.—கோழி, குள்ளவாத்து, மாடப்புரு முதலியன.

மீன்கள்.—குழந்தைகள் சுலபத்தில் காணக்கூடிய பொன் மீன் முதலியன.

**சேடி வகைகள்.**—செடியைப்பற்றிய மொத்த பாவம். அதன் உறுப்புகள், அதன் பெயர். ஸாதாரணமான பூச்செடிகளைப்பற்றிய பொது விவரணம். தோட்டத்தில் வேலை செய்யும்போது கவனித்தல்.

மரங்கள்.—சமீபத்திலுள்ள ஸௌகரியமான ஏதாவது ஒரு மரம். மரத்தின் பொது விவரணம். மரங்களின் பாகங்களை சேகரித்தல். மரங்களின் உபயோகம்.

பழங்கள்.—தோட்ட ஸம்பந்தமாய் சமீபத்தில் அகப்படக்கூடிய பழங்கள்.

**காய்கறி.**—தோட்ட ஸம்பந்தமாய் சமீபத்தில் அகப்படக்கூடிய காய்கறிகள்.

**விதையின் விருத்தி.**—பட்டாணி, அவரை, பருப்பு வகையராக்கள்.

**பூச்சி புழுக்கள்.**—கொசுகு, நத்தை, சிலந்தி, ஈ, கம்பளிப் பூச்சி இவைகளைக் கொண்டுவந்து வைத்து கவனித்தல்.

**இயற்கை சம்பவங்கள்.** வாயுமண்டல நிலைமை, மழை, உஷ்ண நிலைமை, நிழல் இவைகளை கவனித்துக் குறித்தல்.

### பிராணிகளை பின் சொல்லுகிற மாதிரியில் கவனித்துக் கற்கலாம்.

1. உரு **அறிதல்** பேயர்.—பொதுவாக அந்த பிராணியின் தோற்றத்தை கவனித்து அதன் பெயரை சொல்லவும்.

2. **வீடும், வீட்டு வாழ்க்கையும்.**—இந்த விஷயம் இயற்கை பாடத்திற்கு போகும்போது கவனிக்கும் விஷயம். பார்த்தவற்றையும், தோற்றின வற்றையும் ஒன்று சேர்த்து சம்பாஷணை காலத்தில் சொல்வது, அவற்றையே களிமண், காகிதம் இவற்ருல் வெளியிடுதல்.

3. **ஸவபாவமான இயக்கங்களும், வழக்கமும்.**—இந்த விஷயங்களை உயிர் பிராணிகளை நேரில் பார்த்து தெரிந்து கொள்ள வேண்டியது.

4. **அமைப்பு.**—பிராணிகளை உயிரோடிருக்கும்போது பார்த்து தெரிந்துகொள்ளக் கூடியவரையில் தெரிந்துகொள்ளுதல்

5. சுற்றியிருப்பவற்றிற்குத் தக்கினபடி தேஹ அமைப்பு முதலான திருப்பதை கவனித்தல்.

6. இவற்றைப்போலிருக்கும் பிராணிகளோடும், இவற்றைப்போலில்லாமல் இருப்பனவற்ருேடும் ஒற்றுப்பார்த்தல்.

செடிகளைப்பற்றிய பாடங்களை மிருகங்களைப்பற்றிய பாடங்களைப்போல் நடத்தவும்.

1. பெயர். 2. எவ்விடத்தில் காணப்படுகிறது. 3. தோற்ற விவரணம். 4. சுற்றுப் பக்கத்திற்கு தகுந்தபடி இருத்தல். 5. மற்றச் செடிகளுடன் ஒற்றுப் பார்த்தல். 6. உபயோகம்.

**சாமான்ய வஸ்துக்களை கவனித்தல்.** — குழந்தையைச் சுற்றியிருக்கும் வஸ்துக்களையும், சமாசாரங்களையும் பற்றி கவனித்தல்.

தற்காலத்தில் இயற்கைப் பாடத்திலிருக்கும் மோஹத்தில் ஒன்றையே கவனித்து மற்றது விட்டுப்போகுமோ என்ற சங்கையிருக்கிறது.

வகுப்பு, சமீபத்திலுள்ள கடைகள், தபால்காரன், போலீஸ்காரன், ரயில்வண்டித்தொடர் முதலியவைகளைப் பற்றி கவனிப்பதாலும் பேசுவதாலும் இவ்வாழ்க்கையின் பல விஷயங்களைப்பற்றி சொல்லவும், ஆராய்ச்சிகளை பலமுகமாய் செலுத்தவும், நமக்கு ஸமயங்கள் வாய்க்கும்.

**அனுஷ்டான முறை.**— தோட்டம் பயிரிடுதல், செடிகளையும் பிராணிகளையும் வளர்த்தல், வெளியில் செல்லுதல், வஸ்துக்களை சேகரித்தல்.



# அத்தியாயம் VIII.

## சங்கியை அல்லது எண்ணிக்கை பாடம்.

**க**ணக்கு கற்பிப்பது முக்கியமென்பதை எல்லாரும் ஒப்புக் கொள்வார்கள். ஏனென்றால் (1) தினசரி காரியங்களில் அது உபயோகப்படுகிறது. (2) மனதிற்கு ஒருவித நற்பயிற்சி உண்டாகிறது. ஏழு வயதுக்குட்பட்டகுழந்தைகளுக்கு இருக்கக்கூடிய எண்ணிக்கை அறிவு மிதமாய்தான் இருக்கும். ஆனால் கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் முதலிய மூலாதாரமான கணக்கு முறைகளில் நல்ல பயிற்சி இருக்க நாம் முயலுவது நன்று.

முதலில் செய்யும்வேலை பெரும்பாகம் வாய்மொழியாகவும் பொருள்களைக்கொண்டும் செய்யவேண்டும். ஆனால் எந்த சமயத்தில் சம்ஜ்ஞைகளையும், கூட்டல், கழித்தல் முதலிய கணித சாஸ்திர பதங்களையும் உபயோகிக்கலாமென்பதை நம்முடைய விவேகத்தைக் கொண்டே தெரிந்துகொள்ளவேண்டும்.

சர் ஆலிவர் லாட்ஜ் சொல்லுகிறார்: "எந்த பருவத்திலும் வேணுமென்று அடக்குவதால் ஒரு பிரயோஜனமுமில்லை. பெயர்களை வேணுமென்று சொல்லாம லிருத்தலைவிட தக்க காலத்துக்குமுன் பெயர்களை சொல்லி தொந்தரவிப்பது அதிக கெடுதல். ஆனால் இரண்டும் கெடுதல்தான். ஒரு பூவை டைஸி என்றும் ஒரு நக்ஷத்திரத்தை வியாழன் என்றும் சொல்லி வியவஹரிப்பது எவ்வளவு சௌக்கியமோ அவ்வளவு சௌகரியம் தெரிந்த குணங்களுக்கு ஒரு பெயர் வைப்பதால் உண்டாகும். ஆனால் பெயரைசொல்லி பொருளைகாட்டாதிருப்பதும் நம் கண்ணுக்கு புலப்படா திருக்கையிலேயே டைஸி, நக்ஷத்திரம், எண்ணிக்கை என்று பிரசங்கம் பண்ணுவதும் மரியாதையாகசொல்லின் அறிவுடைமைக்கு எதிராகும்."

பிள்ளைகள் பள்ளிக்கூடத்துக்கு வரும்போது எண்ணிக்கையைப்பற்றி சில பாவங்கள் இருக்கும். இரண்டு, மூன்று அல்லது மூன்று, நான்கு மிட்டாய்கள் என்று பகுத்தறியும்படியான எண்ணிக்கை அறிவு அவனுக்கு வந்திருக்கும். வீட்டுவேலைகளை கவனிக்கையிலேயே தன்னை அறியாமல் அநேக எண்ணிக்கை பாடங்கள் அவனுக்கு வந்துவிடுகின்றன.

ஆறு வயதுக்குள்பட்ட குழந்தைகளுக்கு தனிமுறைப்படி எண் சம்மந்தமான பாடங்கள் நடத்தப்படா. பிரோபலுடைய கிப்டுகளும், தொழில்களும் எண் சம்மந்தமான அறிவை கொஞ்சம் விருத்திசெய்யும். உருவில்லாத பாவங்களை ஓர் உருவாக்கி ஒழுங்கு கிடைத்ததாக செய்யவும், எண்ணிக்கை களுக்குள்ள சம்மந்த விஷயமாய் சிறு குழந்தைகளுக்கு அப் பியாசங்களை நடத்துவதும் அறிவின்மையாகும். பருவத்துக்கு முன்செய்யும் காரியமுமாகும். ஆகையால் ஆறு வயது வரை யிலும் இந்த கணக்குப்பாடம் ஒரு நியமத்துக்கு கீழ் இல்லா மலும் சமயோசிதமாயும் நடத்தவேண்டும்.

**எண்ணை கற்பிப்பதற்கு உபகரணங்களின் உபயோகம்.**— பிள்ளைகளுக்கு சங்கியை அறிவுகளில் பல, பள்ளிக்கூடத்திற்கு வெளியில் தற்செயலாய் வருமாயினும் ஆரம்பத்தில் ஏதோ சில பொருள்களை கொண்டு நடத்துவது அவசியம் என்பது அநுபவத்தில் தெரியும். பிள்ளைகள் மேல் போகப்போக பொ ருள்களை உபயோகிப்பதை கொஞ்சங்கொஞ்சமாய் மட்டுகட்ட வேண்டும்.

மனுஷ்ய ஜாதிக்கு எண்ணிக்கை அறிவு பிரத்தியக்ஷ வஸ் துக்கள் மூலமாய்த்தான் வந்தது. அது போலவேதான் பிள் ளைகளும் பொருள்களைக்கொண்டு எண்ணிக்கை அறிவை சம் பாதிக்கவேண்டும் ஆகையால் கைக்கெளிதான உபகரணங் களை கையாண்டு பார்த்தும், வரிசையாய் வைத்தும், அநுபவ மடைய விடவேண்டும்.

முதலில் ஒரு பொருளைப்பற்றி ஸ்தூலமாய் ஒரு பாவமி ருக்கும். மொத்தமாயும், பிறகு பகுதிகளாகவும், மறுபடிமொத் தமாகவும் இப்படி பலதரம் மாறுதல்கள் மனதில்பட்டு கடைசி யாக உருவில்லாத பாவமானது தெளிவாய் ஓர் உருவை உடைத்தானதாய் அவன் மனதில்படும். இப்படி எண்ணிக் கை அறிவு உண்டாகிறது.

**எந்த உபகரணங்களை உபயோகிக்கலாம்.**—சிறு குழந்தை களுக்கு பற்பலவித பொருள்களைக் கொண்டே பாடத்தை நடத்தவேண்டுமென்பது குழந்தை சுபாவத்தைப்பற்றி நமக் குள்ள அநுபவத்தாலும் அறிவாலும் தோற்றும். ஏனெனில் அவர்களுக்கு மனதைக் குவிக்கும் சக்தி அதிகமாய் விருத்தி யடையா திருப்பதால் அவர்கள் செய்யும் வேலையில் எல்லாம்

ஒரு விதமாயிராது. பலவிதமாயிருப்பது அவசியம். தவிர எண்ணிக்கை அப்பியாஸங்களை பாஷைப் பாடங்களுடன் கலந்து நடத்தவேண்டும்.

1, 3, 5, 7, 8 (பந்துகள், கட்டைகள், வில்லைகள், குச்சிகள், மணிகள்,) ஐந்து, ஓடுகள், விதைகள், அட்டை நாணயங்கள் முதலியவற்றை எடுத்துக்கொள்ளவும். குழந்தையின் கவன சக்தியானது விருத்தியாக ஆக அப்பியாஸங்கள் கடினமாகிக்கொண்டு வரும்.

சற்று வயதுசென்ற குழந்தைகளுக்கு ஒரேவிதமான உபகரணத்தை உபயோகிக்கவேண்டும். டிலீச் சொல்லுகிற படி அனேகவிதமான பொருள்களை உபயோகித்தால் எண்ணில் கவனம் செல்லாமல் அந்தப் பொருளிலேயே அதன் கவனம் செல்லுவதற்கு ஏதுவாகிறது.

விரைவில் கணக்கிடும் சக்தியை விருத்தி செய்யும்படி நாம் எதிர் பார்ப்பதற்கில்லை. எண்ணிக்கையைப்பற்றிய பாவம் அவன் மனதில் உண்டாகும்படி பார்க்கவேண்டும். எண்ணிக்கை எப்படி எபபடி ஆகிறது, என்ன என்ன சேர்ந்தாகிறது, என்கிற விஷயம் பிள்ளைகள் மனதில் கொஞ்சம்கொஞ்சமாய் ஒழுங்காகவும் நன்ருகவும் பதிந்த பிறகு எண்ணிக்கை சம்பந்தமான வேலைகளை சுறுசுறுப்பாயும் விரைவிலும் செய்யும்படி பிள்ளைகளைப் பழக்கவேண்டும்.

உபாத்தியாயர் உபயோகிக்கும் உபகாரணங்கள் அவர் இஷ்டத்தைப்பொருத்தவை. குழந்தைகளுக்கு எண்ணிக்கையைப்பற்றி திடஞானம் உண்டாகக் கூடியவையா யிருக்கவேண்டும். எந்தப் பாடத்தையும் நிஜமாயிருக்கும் படிக்கும் பள்ளிக்கூடத்துக்கு வெளியுள்ள விஷயங்களை கலந்திருக்கும் படிக்கும் நடத்துவது சிரமமானதால் அதற்கு இணங்கவும்; அளவு, நிறை, கிரய விக்கிரயம் இவற்றைப்பற்றி எளிதான பாவங்கள் குழந்தைகளுக்கு ஏற்பட உதவும்படிக்கு கஜக் கோல், அடிக்கோல், திராசு படிக்கற்கள், அட்டைநாணயங்கள் முதலியவற்றை உபயோகிக்கத் தோன்றும்.

சிறு பிள்ளைகளுக்கான எண்ணிக்கைப் பாடங்களெல்லாம் அவர்களுக்கு ஆஸ்தையுள்ள விஷயங்களைக்கொண்டே நடத்தப்படவேண்டும். அவர்கள் விளையாட்டுச் சாமான்கள், அவர்

கள் கடைக்குப்போய் வாங்கும் பண்டங்கள், அவர்களுக்கு நிஜம்போலாகும் ஆட்டங்கள் இவையெல்லாம் அவர்களுக்குள்ள ஆஸ்தைகள் இன்னவை யென்றும், எண்ணங்கள் இன்னவை யென்றும் தெரிவிக்கும்.

சிறு குழந்தைகளின் மனது ஒன்றிலே நில்லாமல் ஒன்றிலிருந்து மற்றொன்றில் தாவிக்கொண்டிருக்கும். ஆகையால் அவர்கள் கவனத்தை நிறுத்த வேண்டுமானால் அவர்கள் மனம் வெளியில் செல்லாதபடி அவ்வளவு இனிதாக எண்ணிக்கைப் பாடங்களை நாம் செய்யவேண்டும்.

**வரிசையாக எண்ணக் கற்றுக்கொள்ளல்.** — பிள்ளைகள் எண்ணை கற்கும்போது, ஒன்று, இரண்டு முதலிய எண்களை அவற்றிற்கு ஏற்ற பொருட்குவியலோடு சேர்த்து பிள்ளைகள் அறிகிறார்களா என்று கவனிக்கவேண்டும். எண்ணிக்கை படங்கள் செய்யும்படி பயிற்சிகள் தரவேண்டும்.



ஒன்று



இரண்டு



மூன்று

காதால் எண்களை அறிவது, கையால் எண்ணுக்குத் தகுந்த காரியங்களை செய்வது முதலான பல வழிகளாலும் பிள்ளைகளுக்கு எண்ணிக்கையை பற்றிய பாவங்கள் மனதில் பதியச் செய்யவேண்டும். (உ-ம்.) உபாத்தியாயர் குறித்த எண் அளவாக மணியை அடிக்கவும், அல்லது பியானோவை சப்

திக்கச் செய்யவும், எத்தனைதரம் என்று பிள்ளைகள் சொல்ல வேண்டும்.

**எண்ணை போதிப்பதில் உதவும் பாட்டு, விளையாட்டு.**—சில பிள்ளைகளை வட்டமாய் நிறுத்தி அவர்களை, புருக்கூடு, தொழுவம், குட்டை, அல்லது தோட்டம் ஆக பாவிக்கவும். முதவில் குட்டை என்று வைத்துக்கொள்ளவும். உபாத்தியாயர் மற்ற பிள்ளைகளைப் பார்த்து ஆறு பிள்ளைகளை குட்டைக்குள் போய் மீன்களாயிருங்கள் என்று சொல்லவும். ஆறே பேர்கள் போகிறார்களா என்று பிள்ளைகள் கவனிக்கவேண்டும். அதிகமாய் போய்விட்டால் எத்தனைபேர் வெளியில் வரவேண்டும் என்று கேட்கவும். இப்படியே மேலும்.

இவ்விதமான அப்பியாஸங்கள் ஒரு கூட்டத்தில் எத்தனை பேரென்று மதிப்பிடவும், கூட்டவும், கழிக்கவும், ஜாஸ்தி கம்மி என்கிற பாவத்தை அறியவும், வெளிப்படுத்தவும், பழக்குகின்றன. கழித்தலை அனேக விதமான பாட்டுக்களை கொண்டு அறியச்செய்யலாம். (உ-ம். 'Ten little nigger boys') ஒன்று ஒன்றாய்க் கழிக்க இந்தப்பாட்டு உதவும். இதைப்போன்ற பாட்டுகளைகொண்டு இதா எண்களை கழிப்பதற்கு பழக்கலாம்.

**ஆட்டங்களை கணக்கிடுதல்.**—விரைவாகக் கூட்டும் சக்தியை, கணக்கிட வேண்டிய ஆட்டங்களை ஆடுவதால், விருத்தி செய்யலாம்.

அனுபவத்தில் பின்சொல்லும் ஆட்டங்கள் உபயோகமாக இருந்து வருகின்றன.

1. சில செங்கல்களைக் கொண்டுவந்து ஒவ்வொரு கல்லிலும் எண் படத்தையும் அதன் அடையாளத்தையும் வரைந்த ஒரு காகிதத்தை ஒட்டவும்.










இவ்விதமாக எழுதி ஆறேழு கற்களை மேஜையின்மேல் வைக்கவும் பிறகு ஒரு பையன் ஒரு பந்தை உருட்டி 2, 4, 3,

என்ற கற்களைத் தள்ளுகிறான். இன்னொரு பையன் ஆட்டக் கணக்கு வைத்துக்கொண்டு அவன் ஜெயித்த 2, 4, 3-யும் அவனிடம் கொடுக்கிறான். பிறகு படத்தைக் காட்டவும் படத்தைக் கவனித்து கூடியவிரைவில் கூட்டச் செய்யவும்.



கொஞ்சம் பழக்கமானதும் அடையாளங்களை அதாவது எண்களை வைத்துக்கொண்டு ஆடவும். அப்போது கரும்பலகையில் எழுதவேண்டிய விதம்.

oo + $\genfrac{}{}{0pt}{}{\circ}{\circ}$ $\genfrac{}{}{0pt}{}{\circ}{\circ}$ + °₀° = 9; 2, 4, 3 சேர்ந்தால் 9; 2 + 4 + 3 = 9.

2. **குதித்து தாண்டல்.**—தாண்டும்போதே பிள்ளைகள் ஆட்டத்தை எண்ணிக்கொள்ளலாம். ஒரு தாண்டலுக்கு ஒரு ஆட்டம் அல்லது இரண்டாட்டம் அல்லது மூன்றாட்டம் என்று வைத்துக் கொண்டால் ஒன்றொன்றாகவும், இரண்டிரண்டாகவும், மும்மூன்றாகவும் பிள்ளைகள் எண்ண கற்றுக்கொள்வார்கள்.

3. **கூடையில் பந்தை போடுதல்.**—ஒரு பிள்ளையிடத்தில் ஆறு பந்து கொடுத்து கொஞ்ச தூரத்திலுள்ள கூடையில் போடச் சொல்லவும். கூடையில் விழும் பந்துகளையும் வெளியில் விழும் பந்துகளையும் கணக்கிடச் செய்யவும். இதில் கூட்டல் கழித்தல் இரண்டும் வருகின்றன.

4. கரும்பலகையில் ஒரு பெரும் வட்டம் வரைந்து அதனுள் ஒன்றுமுதல் இருபதுவரையிலுமுள்ள எண்களை எழுதி, ஒரு குழந்தையிடம் உரோமத்தாலான மூன்று பந்துகளை கொடுத்து வரையப்பட்ட எண்களின்மேல் போடச் செய்யவும். பந்து பட்ட எண்களை கூட்டச் செய்யவும். இன்னொரு பையன் ஆட்டக்கணக்கு வைக்கவேண்டியது.

**மொத்தமாய் வைக்கப்பட்டவைகளின் எண்ணிக்கையை அறிதல்.**—கட்டைகள் அடுக்கிவைத் திருப்பதை மொத்தமாய் பார்த்து அந்த அடுக்கில் எத்தனை கட்டைகள் என்று சொல்லப் பழக்குவதால் ஒரு குவியலில் எத்தனை பொருள்கள் இருக்கின்றன வென்று சொல்லும்படி கண்பழக்கம் செய்யலாம். ஒரு விஷயத்தை தீர்மானிப்பதில் பழக்கமும், ஒரு எல்லைக்குள் எண்களை மதிப்பிடும் சக்தியும் உண்டாகும். ஒரு பூதக் கதை சொல்லி அதில் வரும் கட்டிடத்தில் பிள்ளைகளுக்கு ஒரு சிரத்தையை உண்டாக்கி அந்தக் கட்டிடத்தை பலகையில் எழுதிவிட்டு அதன் வாயிலில் கல்லால் கட்டவேண்டும் என்று சொல்லவும். உபாத்தியாயர் வாயிலின் படம் ஒன்றை ஜாக்கிரதையாய் கற்கள்வரிசை தெரியும்படியாய் வரையவேண்டும். பிள்ளைகள் நன்ருய் பார்க்கும்படி படத்தைக்காட்டி அப்புறம் மறைத்துக்கொண்டு வலது கோபுரத்தில் எத்தனை கற்கள், இடது கோபுரத்தில் எத்தனை கற்கள் என்று சொல்லும்படி கேட்கவேண்டும். பிம்பத்தை மனதில் வாங்கிக்கொண்டு தப்பில்லாமல் பிள்ளைகள் சொல்வதற்குள் படத்தை அனேக தடவை காட்டும்படியாயிருக்கும். எண்ணிக்கை பாவத்தை நன்ருய் வற்புறுத்திய பிறகு பிள்ளைகளெல்லாரையும் கட்டைகளைக்கொண்டு வாயிலைக் கட்டச்சொல்லவும்.



இதே மாதிரியாக கோவில், டவுன்ஹால் முதலியவற்றைக் கட்டச் செய்யவேண்டும். குழந்தைகள் மிகுந்த உற்சாகத்துடன் கட்டுகிருர்கள். கற்களைப்பார்த்து அவை குறிக்கும் கட்டி

டங்களை கட்ட யத்தனிப்பதால் மனதால் நிர்மாணிக்கும் சக்தி விருத்தியாகிறது. எண்ணிக்கை அறிவை தங்களுக்கு பற்றுள்ள காரியம் செய்வதில் உபயோகிக்கிறார்கள். ஒன்றொன்றாய் எண்கள் ஆனதாக நினைப்பதற்கு பதில் எண்களை மொத்தமாக மனதில் கிரஹிக்கிறார்கள்.

## எண்களை கற்பிக்க பொருள்களின் படத்தை வரைதல்.

பழக்கமான பற்பல பொருள்களை வரைந்த மிகவும் சாதாரணமான சித்திரங்கள் எண்ணிக்கைப் பாடங்கள் ஒரே விதமாயிருப்பதை நீக்க உதவும். தவிர குழந்தைக்கு எண்ணிக்



கை குவியல்களை மனதில் வாங்கி தரிக்கும்படி உதவும். மேற்சொன்ன படங்கள் கண்களுக்கு அறிகுறி மாதிரியாய் இருக்கவேண்டுமே யொழிய பிள்ளைகள் அவற்றையே கவனிக்கும்படியா யிருக்கக்கூடாது. ஏனெனில் இதர விஷயங்களில் பிள்ளைகள் மனதுசென்றால் எண்ணிக்கை நினைப்பே பிள்ளைகளுக்குப் போய்விடும்.

எண்ணிக்கைக்கு என்று நடக்கும் பாடங்களில் (1) எந்த எந்த இரண்டு எண்களைச் சேர்த்தால் குறித்த எண் உண்டாகிறது (2) பெருக்கல், வகுத்தல் இவைகளைப்பற்றிய மிக எளிதான பாவங்கள் இரண்டையும் கற்பிக்க முயலவேண்டும்.

**உதாரணம்:**—8 என்னும் எண்ணை போதிக்கும் பாடத்தில் பின்வருவன சொல்லவேண்டும்.

**கூட்டல்.**

| | |
|---|---|
| 1–ம் 7–ம் = 8<br>2–ம் 6–ம் = 8<br>3–ம் 5–ம் = 8<br>4–ம் 4–ம் = 8 | 1–ம் 7–ம்; 7–ம் 1–ம் முதலியவற்றை தலைகீழாய் மாற்றிச் சொல்லச் செய்யவேண்டும். |

**கழித்தல்.**

8–இல் 1 போனால் 7
8 — 2 — 6
8 — 3 — 5
8 — 4 — 4

**பெருக்கல்.**

| | | |
|---|---|---|
| இரண்டு 1 = 2<br>— — 2 = 4<br>— — 3 = 6<br>— — 4 = 8 | மூன்று 1 = 3<br>—— 2 = 6<br>—— 3 = 9 | நாலு 1 = 4<br>— 2 = 8 |

**வகுத்தல்.**

8 இல் நான்கு 2–கள் இருக்கின்றன.
8 இல் இரண்டு 3–களும் மீதி 2–ம் இருக்கின்றன.
8 இல் இரண்டு 4–கள் இருக்கின்றன.
8 இல் ஒரு 5–ம் மீதி 3–ம் இருக்கின்றன.
8 இல் ஒரு 6–ம் மீதி 2–ம் இருக்கின்றன.
8 இல் ஒரு 7–ம் மீதி 1–ம் ... ... ...
8 இல் ஒரு 8 இருக்கிறது.

இவைகளை மனப்பாடம் பண்ணுவதற்கில்லை. ஆனால் பிள்ளைகளின் கூட்டங்களைக் கொண்டும், பற்பல பொருள்களைக் கொண்டும், பலவித கட்டைகளைக் கொண்டும், அடிக்கடி பலவித பயிற்சிகள் செய்வதால் நன்றாய் தெரிந்துவிடும்.

அரை, கால், முக்கால், மூன்றில் ஒன்று முதலியவற்றின் பாவங்கள் பொருள்களைத் தகுந்தபடி பிரித்துக் காண்பிப்பதால் ஏற்படும். ஒரு எல்லையிட்டு அதற்குள் பிள்ளைகள் பொருள்களைக்கொண்டு எண்ணிக்கை விஷயமாக தங்களுக் கிஷ்ட

மானபடி பரீக்ஷை பண்ணி, அப்படி பண்ணின பரீக்ஷையின் பலனே வாய்மொழியாகச்சொல்லவும் எழுதவும் விட்டால் பிள்ளைகளுக்கு இந்தப் பாடத்தில் அதிகப் பற்று ஏற்படுவதோடு எண்ணிக்கைகளின் ஸ்வபாவத்தைப் பற்றிய ஞானம் விருத்தியாகும். மனதிலிருக்கும் விஷயத்தை வெளியிடும் திறமும் அதிகரிக்கும். பத்து வரையிலுள்ள எண்கள் இன்ன இன்ன சேர்ந்தால் இன்னதாகும் என்று பிள்ளைகளுக்கு நன்ருய் பரிசயமான பிறகு 10 ஓடு 1 முதல் 9 வரையிலுள்ள எண்களைக் கூட்டுவதில் நல்ல பரிசயம் வரும்படி செய்ய வேண்டும்.

10 முதல் 19 வரையிலுள்ள எண்களை பத்தும் ஒன்றும் என்று பிரித்தலில் மிக்க பயிற்சி செய்யவேண்டும்.

11 ஆவது 10–ம்—ஒன்றும்
12 ஆவது 10–ம் 2–ம்

தனித்தனியாய் 10–க்கு குறைந்தும், இரண்டும் சேர்ந்தால் 10–க்கு மேற்பட்டு மிருக்கக்கூடிய இரண்டு எண்களை கூட்டும் வகை.

உதாரணம். $5+6$

1. அந்த இரண்டு எண்களில் ஒன்றை பத்தாக்குக $5+5=10$.

2. எதிலிருந்த ஒரு எண்ணை பத்தாகவேண்டி எடுத்தாயோ எடுத்த எண்போக பாக்கியை பத்துடன் சேரு

$5+5=10; \quad 10+1=11$

இரண்டு எண்களை கூட்டுதல். ஒன்று பத்தைவிட பெரிய எண்.

உ–ம். $11+8$; இரண்டு வழியை உபயோகிக்கலாம்.
$10+8; \quad 18+1 = 19$
$1+8; \quad 10+9 = 19$

பத்துக்குப் பெரிதான எண்ணிலிருந்து பத்துக்கு குறைந்த எண்ணை கழித்தல். சிறிய எண்ணை 10 லிருந்து கழித்து வந்த பாக்கியை பெரிய எண்ணில் பாக்கியாய் நின்றதோடு கூட்டவும்.

$14-6; \; 10-6=4; \; 4+4=8$

இந்த முறைப்பிரகாரம் கூட்டல், கழித்தல்கள், எண்ணை பிரித்துக் கழிக்கும் முறைக்கு உதவியாகும்.

அனேக முறைகளை கலப்பது ஸாத்தியமா யிருப்பதோடு விரும்பத்தக்கதாகவு மிருக்கிறது. எண்ணில் நம் நோக்கமானது நடுவில் போடும் வழிகளை எல்லாம் விட்டுவிடுவது தான். (தானுகவே ஒரே வாயில் ஈவு வரவேண்டும்) இந்நோக்கம் ஈடேறுவது நடுவழிகள் பலபட்டிருந்தால் எளிதாகும்.

(Memorandum on the Teaching of Arithmetic issued by Scottish Board of Education.)

## எண் பாடம்—16.

### 1. முழுசாக அந்த எண்ணைக் கவனித்தல்.

**வில்லைகளைக்கொண்டு** 16 என்பதின் படத்தை செய்யச் சொல்லவும். சிவப்பு 10 ஐக் காட்டவும், வெளுப்பு ஒன்றுகளைக் காட்டவும் அல்லது மாறுகவாவது வைத்துக்கொள்ளவும். பிள்ளைகள் அந்த மாதிரி செய்த பிறகு, உபாத்தியாயர் தன்னுடைய அச்சில் அந்த எண்ணின் படத்தைக் காட்டவும். குழந்தைகள் உபாத்தியாயர் படத்தை ஒற்றிட்டுப்பார்த்து பிசகிருந்தால் திருத்திக்கொள்ளவும். 16 இன் படத்தை குழந்தைகளுக்கு இஷ்டமான எந்தப் பொருளாலும் செய்யலாம். (உ-ம்.) இலைகள், கொட்டைகள், பட்சிகள், புஷ்பங்கள் முதலியன. பத்தை ஒன்றுகளிலிருந்து பிரித்து தனியாகக் காட்டவேண்டும். இவ்விதமாக அந்த எண்ணுனது எவ்வளவு தெளிவாக கண்ணிற்கு புலப்படலாமோ அவ்வளவு தெளிவாக கண்ணுக்குப் புலப்படும். **பதி** என்னும் பதத்தின் அர்த்தத்தை இங்கு எடுத்துக் காட்டவும். பதினுறு என்ருல் 10 + 6 பதினுறின் எண் குறிப்பு.

### 2. எண்ணை பாதியாக்குதல்.

1. குழந்தைகள் அவர்கள் வில்லைகளை பாதியாக்குகிருர்கள். 10 இ விருந்து இரண்டை எடுத்தோ அல்லது வேறு எப்படி இஷ்டமோ அப்படி பிரிப்பார்கள்.

**முடி**வுரை.—1. குழந்தைகள் சொல்லவேண்டியது.

2. கரும்பலகையில் எழுதுவது. 16 இல் பாதி 8.

இந்த உண்மையை வைத்துக்கொண்டு ஒரு கணக்குப்-போடவும். (1) பிள்ளைகளில் ஒருவன் கணக்கு கொடுக்கவும், (2) உபாத்தியாயர் கணக்கு.

### 3. கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் பயிற்சி வகைகள்.

1. கூட்டல்.—ராமு 8 கோலிக்குண்டுகள் வைத்திருந்தான், 8 கோலிகள் ஜயித்தான், மொத்தம் எத்தனை?

கோலிகள்
$8+8=16$

கோலிகள்
$$\begin{array}{r} 8 \\ 8 \\ \hline 16 \end{array}$$

2. கழித்தல்.—ஒரு பையனிடம் 16 கிளிகளிருந்தன, அவற்றில் 8 கிளிகளை வேறு ஒருவனுக்கு கொடுத்துவிட்டான், பாக்கி எத்தனை இருக்கும்?

கிளிகள்
$16-8=8$ கிளிகள்

கிளிகள்
$$\begin{array}{r} 16 \\ 8 \\ \hline 8 \end{array}$$ கிளிகள்

3. பெருக்கல்.—ஒருத்தியிடம் 2 கூடைகள் இருந்தன. ஒவ்வொன்றிலும் 8 பழங்களிருந்தன, மொத்தம் எத்தனை?

பழங்கள்
8
2 தடவை (கூடைகள்)
16 பழங்கள்

4. வகுத்தல்.—என்னிடத்தில் 16 பந்துகளிருக்கின்றன அவைகளை இரண்டு பேருக்கு சரியாக பங்கிட்டுக் கொடுக்க வேண்டும், ஒவ்வொருவனுக்கும் எத்தனை?

பந்துகள்
2|16
8 பந்துகள் (ஒவ்வொருவனுக்கும்).

இதில் மனப்பிரயாசமே யில்லை என்பது தெளிவாகும். மன தில் அந்தந்த காரியங்களை தகுந்தபடி வார்த்தைகளால் சொல்லவும்; கடைசியாய் எழுதும் ரீதி நன்ருய் வழக்கப்படவும். மேற்கண்டபடி மனபிரயாசத்தை எவ்வளவு குறைக்கலாமோ அவ்வளவு குறைத்து மிருக்கிறது.

### பதினுறில் எத்தனை நான்குகள் என்று கற்பிக்க

**தயார் செய்தல்.**—முன் நடந்த விஷயங்களைப்பற்றி வினவுதல்

(உ-ம்.) $8+8=16$; இரண்டு தடவை $8=16$;
$16-8=8$; 16 இல் இரண்டு 8 கள்;









**விஷயம் சொல்லல்.**—1. எண்ணை முழுசாகக் காண்பிக்கவும், எண்ணை பொருள்களால் காண்பித்தல்.

2. 16 இன் கால் பாகங்கள்.

$4+4+4+4=16$

4 பதினுறின் கால் பங்கு

4 தடவை $4=16$

என்பதை பிள்ளைகள் எளிதில் கண்டு பிடிக்கிருர்கள்.

ஆகையால் 16 இல் நாலு நான்குகள் இருக்கின்றன. வில்லைகளைக்கொண்டு விளக்குதல்.

பிரயோஜனப்படுத்தல்.—குழந்தைகளுக்கு மனக்கணக்காக கேள்விகள் கேட்டு அதன்பிறகு கரும்பலகையில் கணக்கை போடவும்.

4. மற்ற எண்களோடு 16 ஐ ஒற்றுப்பார்த்தல்.—16 என்னும் படத்தைப்பார்த்து

16 என்பது 10–க்குமேல் 6 அதிகம்

8 ஆனது 16–க்கு 8 குறைந்தது என்று

வார்த்தைகளால் சொல்லுகிறார்கள். இந்த மாதிரி ஒற்றுப் பார்த்து அறிவதற்கு சில கணக்குகள் கொடுக்கலாம்.




பண்ட மாற்றுதல்.

குழந்தைகள் இதெப்படி அதெப்படி என்று விசாரிக்கும் இயற்கை யுள்ளவர்களானதால், நாணயங்கள் ஏற்படும்முன் எப்படி ஜனங்கள் சாமான்களை வாங்கினார்கள், விற்றார்கள் என்பதைச் சொன்னால் அது மனதுக்கு இனிப்பாயிருப்ப தோடு போதகமாயு மிருக்கும். பிள்ளைகளே ஒருவர்க்கொருவர் பண்டம் மாற்றிக்கொள்வது வழக்கம். அது அவர்களுக்குத் தெரியும். பணத்திற்கு பதிலாக இந்த இந்த தேசங்களில் இன்ன இன்ன உபயோகித்தார்கள் என்று சொல்லலாம். மாற்றிக்கொள்வதற்கு சரியான பண்டங்கள் எப்போதும் அகப்படுவது சிரமமாயிருத்தலால் கையாளுவதற்கும் கொண்டுபோவதற்கும் எளிதாய் தேசம் முழுவதும் ஒரே பொறுமான

முள்ளதாயிருக்கும்படியான உலோகத்துண்டுகளை வைத்துக் கொள்ளுவது நலமென்று ஜனங்கள் ஏற்படுத்திக்கொண்டார் கள். இத்துண்டுகளை ஒரு தனிமாதிரியாய் முத்திரையிட் டிருக்கிறது. வேண்டிய சாமான்களை வாங்கிக்கொண்டு இவற் றைக் கொடுக்கலாம்.

### நாணயங்கள்.

அட்டை நாணயங்களைக் கொடுத்து, கடைவிளையாட்டு சில்லறைமாற்றுதல் முதலியவைகளைச்செய்து நாணயங்களில் பழக்கத்தை உண்டுபண்ணவேண்டும். கொஞ்சம் பழக்கம் வந்தபிறகு பிள்ளைகள் இனங்களையெல்லாம் ஒரு கடிதத்தில் எழுதச்செய்து தொகைகளைக் கூட்டலாம். வார்த்தைகளுக்கு முன்னால் பாவமும்; அடையாளத்திற்குமுன் வார்த்தைகளும்; தெரியவேண்டும். அதாவது ஒரு எண்ணிக்கை விஷயத்தை எழுதச்சொல்லுவதற்குமுன் அந்த விஷயம் தெளிவாய் மன தில் ஏற்பட்டு அதை வாயாற்சொல்ல பிள்ளைகள் வல்லவரா யிருக்கவேண்டும்.

### நிறுத்தலளவு.

நிறைகற்களைத் தூக்கிப்பார்த்து தாங்களே வஸ்துக்களை நிறுக்கும்படி செய்யவேண்டும். கடைக்காரர்கள் எங்தெந்த சாமான்களை நிறுத்துக்கொடுக்கிறார்கள்; என் அவர்கள் அவை களை நிறுத்துக்கொடுக்கிறார்கள்; என்பதையும் குழந்தைகளை கேட்கவேண்டும். இந்தப்பாடத்திலும் கடைவிற்கும் ஆட் டம் ஆடச்செய்யலாம்.

### நீட்டலளவுகள்.

அடி, கெஜம் முதலிய நீட்டலளவுகள் மனுஷ்ய சம் பந்தமாய்த்தான் ஏற்பட்டன என்பதைச்சொல்லி அத்தியந்த உற்சாகத்தை உண்டுபண்ணலாம். ஜனங்களின் கை, கால் களின் அளவு வித்தியாசமா யிருப்பதால், ஓரளவு பிரமாணம் ஏற்படுத்துவது அவசியமென்பது பிள்ளைகளுக்கு சுலபத்தில் விளங்கும். பள்ளிக்கூடத்திலுள்ள வெவ்வேறு விதமான வஸ் துக்களை தாங்களே அளந்துபார்க்கும்படி குழந்தைகளை பழக்கவேண்டும். பள்ளிக்கூட அறை, விளையாட்டுஸ்தலம் இவைகளை உபாத்தியாயர் காலால் எத்தனை தப்படி இருக் கிறது, பிள்ளைகள் காலால் எத்தனை தப்படி இருக்கிறது

என்று பலவித அளவுகளால் அளக்கச்செய்து பிறகு கஜக் கோலால் அளக்கச்செய்யவும். அளப்பதன்முன் உத்தேசமாய் அளவுகளைச் சொல்லும்படி பிள்ளைகளைக் கேட்கவேண்டும்.

### கால அளவு.

பஞ்சாங்கத்தை செய்து வைப்பதாலும் பள்ளிக்கூட கடிகாரத்தாலும் வருஷத்திற்கு பன்னிரண்டு மாதமென்றும், ஒரு மாதத்திற்கு எத்தனை நாள் எத்தனை வாரம் என்று ஒரு நாளுக்கு எத்தனை மணியென்றும் பிள்ளைகள் நீளத்தி லேயே தெரிந்துகொள்ளுவார்கள்.



## அத்தியாயம் IX.

### சிக்ஷணனுகூலமான கைத்தொழில்.

இயக்கம், அதிலும் முக்கியமாய் கையின் இயக்கம், மனுஷ்யன் மூளையை விருத்தி செய்வதில் வெகு பிரதான மான வேலை செய்கிறதென்று சரீர தத்துவஜ்ஞர்களும், மனஸ் தத்துவஜ்ஞர்களும் ஒரே முகமாய் உறுத்திச் சொல்லுகிறார் கள். மந்தபுத்தியுள்ள பிள்ளைகளுக்கும், புலனூனமுள்ள பிள்ளைகளுக்கும், உறங்கிக் கிடக்கும் புத்தியைக் கிளப்புவ தற்கு இயக்கமானது ஸாதனமாய்ப் பிரயோஜனப்படும் என் கிற விஷயத்தில் சாஸ்திரஜ்ஞர்களுடைய அபிப்பிராயத்திற் கிணங்கத்தான் உபாத்தியாயர்களும் தங்கள் அநுபவமும் இருப்பதாகச் சொல்லுகிறார்கள்.

"தசைகளுக்குக் கொடுக்கும் பயிற்சியால் மூளை வீரிய ஸ்தானங்கள் ஏற்பட்டு விருத்தியாவதுபோல் வேறொன்று லும் ஆவதாகச் சொல்ல முடியாது. தசைகள்தான், வழக் கப்படுதல், அநுகாரம் செய்தல், கீழ்படிதல், சீலம் இவற் றிற்கும், மரியாதை ஸம்பிரதாயங்களுக்கும்கூட வாஹனஸ் தானமாயிருக்கின்றன. சிறுவர்களுக்கு இயக்க சிக்ஷணம்பண் ணுவது வெகு ஆவசிகம்" (Stanley Hall).

சிக்ஷணமுறை வல்லார் மனதில் ஒரு பாவம் பட்டதும் உடனே அதற்கு தக்கின பாவபிரகாச காரியம் நடக்கவேண்டு

மென்கிற நியாயத்தை அடிக்கடி வற்புறுத்திச் சொல்லுகிருர்கள். பிள்ளைகளையே இவ்விஷயத்தில் அவர்களுடைய ஸம்மதியைக் கேட்டால் அவர்கள் ஆவலாயும் ஒருமித்தும், சித்திரம் வரைதல், வர்ணவஸ்துவால் சித்திரம் எழுதுதல், உருவமைத்தல், கட்டுதல், தற்காலம் பள்ளிக்கூடங்களில் பாடங்களாக வந்திருக்கும் இதரவேலைகளும் வேண்டுமென்று சம்மதி கொடுப்பார்கள். ஆகையால் நாம் செய்வது வேறென்றில்லை. பிள்ளைகள் தங்கள் தசைகள் மூலமாய் நினைப்பதற்கு அடிக்கடி அவகாசங்கள் கொடுக்கவேண்டும். பருத்தும் மூலாதாரமா யிருக்கும் தசைகளுக்கு கூடியவரையில் வேலை கொடுக்கவேண்டும். நாஸூக்கான வேலை வேண்டுமென்று பிரயத்தனப் படக்கூடாது.

"நாலு முதல் எட்டு வயதுவரையில் உபதசைகளுக்கு அதிக வேலைகொடுப்பதால் ஓர்வித வலிப்புக்கு விதைப் போட்ட மாதிரியாகும் அல்லது அவ்வலிப்பு வருவதற்கு உள்ள ஏதுக்களை தூக்கி விடுவதாகும்" (Stanley Hall).

**கைநீட்டி சித்திரம் வரைதலானது** சற்று வயதானபிள்ளைகளுக்கு வெகு திறமான பயிற்சிவகை. ஏனெனில் பிள்ளைகள் நின்றுகொண்டு தோளிலிருந்து கையைநீட்டி வேலை செய்தால் கைத் தசைகளுக்கும், உடம்புத் தசைகளுக்கும் நல்லவேலை கொடுத்ததாகும். குழந்தைகள் செய்யும் வேலைகள் பெரும்படியாகத்தானிருக்கும். அவர்கள் செய்யும்வேலை அடிநாளிலேயே திறமாயிருக்கும்படி பிரயத்தனப்படக்கூடாது.

வெகு நயப்பாடாய் ஆன வேலைகளைப் பார்க்க, பிரீதிப் பரவசர்களான தாயார்களுக்கும், பள்ளிக்கூடத்தைப் பார்க்க வரும் சிலருக்கும் திருப்தியாயிருக்கலாம். ஆனால் அவைகள் பிள்ளையின் சிக்ஷணத்திற்கு அநுகூலமான வற்றுள் இருப்பவையன்று. தன்னைச் சுற்றியுள்ள பிரபஞ்சத்தோடு ஸம்பந்தங்களை ஏற்படுத்திக்கொள்ளவும், குவியல் குவியலாக அவனண்டை வந்துவிழும் புது பாவங்களை உணர்ந்து தன்னுடையதா யாக்கிக்கொள்ள அவன் முயன்றுகொண்டிருக்கிறான். அவன் மூளை வேலைசெய்தா லொழிய நம்மனதிலிருந்து அவன் மனதிற்கு பாவங்களை பெயர்த்து வைக்கமுடியாது. அந்த

பாவங்கள் அவனுடையதாவதற்கு அவற்றை அவனே "மறு படி நிர்மாணித்துக் கொள்ள" வேண்டும். ஆகையால் அவன் இந்தமாதிரி செய்துகொள்வதற்குத் தகுந்த பதார்த்தங்களை கொடுக்கவேண்டும். கூச்சமச்சமில்லாமல் தன் மனதிலுற்ற பாவத்தை கார்ய ரூபமாய் வெளிப்படுத்த அவனை விட வேண்டும். இவ்வழியாய் "காரியம்செய்வதால் கற்றுக்கொள் ள"ச் செய்யவேண்டும்.

"மனதுக்குப் பற்றுள்ள யதார்த்த வஸ்துக்களை பிரதிமை ரூபமாய்க் காட்டச் செய்யும் பிரயத்தனங்களை உற்சாசப் படுத்தவேண்டும். ஏனெனில் அநுபவம் அதிகமாக ஆக ஸாமான்யமாயும் செய்வதற்கு இயன்றதாயும் இருக்கும் வஸ் துக்களிடத்தில் மனதுக்கு பற்று உண்டாகி அவற்றையும் செய்ய முயற்சி ஏற்படும். இவ்விதமாய்ச் செய்யும் பிரதிமை களுக்கும், யதார்த்த வஸ்துக்களுக்கும் போகப்போக ஸாதி ருஸ்யம் ஏற்படும். ஆரம்ப பிரயத்தனங்கள் மிகவும் வியக்த மில்லாதிருப்பது பரிணம வாதத்திற்கு ஒத்ததே. இப்படி வியக்த மில்லாதிருப்பது அப்பிரதிமைகளை அசட்டை பண் ணுவதற்குக் காரண மாகாது. இந்தப் பிரதிமைகள் எவ் வளவு விகாரமாயிருந்தாலும் குற்றமில்லை. பிள்ளைகள் நல்ல சித்திரங்கள் வரைகிறார்களா வென்பது விஷயமன்று. அவர்கள் சக்திகள் விருத்தியாய்க்கொண்டிருக்கிறதா என் பதுதான் கவனிக்கவேண்டிய விஷயம். குழந்தைக்கு முதல் முதல் தன் விரல்கள் ஒருவாறு ஸ்வாதீனமாகவேண்டும். ஸாதிருஸ்யம் என்பது அவன் மனதில் பெரும்படியாய் பட வேண்டும். இந்த நோக்கங்கள் கூடிவருவதற்கு மேற் சொன்ன அப்பியாஸம் மற்றெதையும்விட சிறந்தது. ஏனெ னில் அது தன்னிச்சையாயும் விருப்பத்தோடும் செய்யும் அப்பியாசம்" (Herbert Spencer).

**தொழிலைத் தெரிந்தெடுத்தல்.**—பாலர் வகுப்பில் கிரமநிர்ப் பந்த மில்லாமல் நடந்த பயிற்சி வகைகள், பெரிய பிள்ளைகள் வகுப்பில் மேற்சொன்ன பயிற்சி வகைகளைக் காட்டிலும் சற்று கடினமான கைத்தொழிலோடு கலந்து விடுவதால். நம் பிள்ளைகளுக்கு நாம் தெரிந்தெடுக்கும் எந்தத் தொழிலும் நிச் சயமான சிக்ஷணப் பிரயோஜனமுள்ளதாக விருக்கவேண்டு வது மிக ஆவசிகம். ஒரு தொழிலை, இது அழகாயிருக்

கிறது, இது நூதனமாயிருக்கிறது, இது செய்தால் நம் பள்ளிக்கூடத்துக் காட்சிப் பொருள்களுக்கு கௌரவம் ஜாஸ்தியாகும், இது பிள்ளைகளுக்கு வேலையிட ஒரு ஸாதனம், என்கிற காரணங்களுக்காகத் தெரிந்தெடுக்கக் கூடாது. இந்தத் தொழில் பிள்ளைகளின் வயதுக்கும் திறமைகளுக்கும் தகுந்தது; அவர்களுடைய சற்பனைசக்திக்கு அவகாசம் கொடுக்கும்; தங்கள் மனதிலுள்ள பாவங்களை வெளியிட ஒரு மார்க்கம் தரும்; சிறுகச் சிறுகப் படிப்படியாய் விருத்தி செய்வதற்குத் தகுதியானது என்று நமக்குத் திடமாய்ப் படல் வேண்டும்.

சித்திரம் வரைதலும், உருவமமைத்தலும், எவ்விதத்திலும் மெச்சத் தக்கபடி மேற்சொன்ன நிபந்தனைகளெல்லாவற்றிற்குமேற்ப இருப்பதோடு ரூபம், வர்ணம் இவற்றினுடைய அழகின் ஸ்வாரஸ்யத்தை அறியவும், அதனிடத்தில் ஒரு பிரீதிவைக்கவும் பிள்ளைகளைத் தூண்டும். உருவமமைத்தல் சித்திரம் வரைதல் இரண்டையும் பக்கத்துக்கு பக்கமாய் சேர்ந்தாப்போலேயே நடத்தலாம். ஏனெனில் இவை ஒன்றையொன்று விளக்குவதோடு ஒன்றுக்கொன்று உதவியாகவிருக்கும். உருவமமைக்கும் பாடத்தில், ரூபங்களை மூன்றளவும் (நீளம், அகலம், உயரம்) உள்ளதாகச் செய்யலாம்.

உருவமமைத்து அப்புறம் மொத்தமாய் சித்திரம் வரைந்து கடைசியாக கோட்டாலமைத்தால் ஒரு ரூபத்தை மனதில் கிரஹித்து தரிப்பதற்கு வெகு உதவியாகும். சித்திரம் வரைதல், பேசுவது, எழுதுவதுபோல் பிள்ளைகளுக்கு ஸகஜம். அதை ஜாக்கிரதையாய் நடத்தவேண்டும். சித்திரம் வரையத் தெரிவதாலும், தோற்றங்களின் அர்த்தங்களை உணர்ந்து வெளியிடச் சக்தியிருப்பதாலும், நம்மைச் சுற்றிலுமுள்ள பற்பல ரூபங்களையும் வர்ணங்களையும் பூர்ணமாய் அறிய உதவியாகும். உள்ளபடி பார்த்தால், சித்திரம் வரைதலாவது ரூபத்தையும் வர்ணத்தையும் வாசிப்பதும் எழுதுவதும் ஆகும். ஏனெனில் அவற்றின் பலவிதப்பட்ட தோற்றங்களை திருத்தமாய்ப் பார்த்தலும் உள்ளபடி வெளியிடுதலும் சித்திரம் வரைதலில் சேர்ந்திருக்கிறது. பாலர் பள்ளிக்கூடத்தில் அநேகமாக எல்லாப்பாடத்திலும் சித்திரம் வரைதல் ஒரு பாகமாகும்.



6 வயதுமுதல் 9 வயதுள்ள குழந்தைகள் வரைந்த சித்திரங்கள்.

(1) எழுதக் கற்பிப்பதன்முன் சித்திரம் வரைய பழக்க வேண்டும். அப்புறம் எழுதக் கற்பிப்பது எளிதாகும்.

(2) எழுத்துக்களைக்கொண்டு வார்த்தை கட்டும் ஆரம்பப் பாடங்களில், அவசியம் சித்திரம் வரைதல் வேண்டும். ஏனெனில், ஏற்பட்ட வார்த்தை இன்னபொருளைக் காட்டுவதென்று அப்பொருளின் படமும் பக்கத்தில் வேண்டும்.

(3) எண்களின் பரிமாணத்தை பொருள்களின் மூலமாய் அறிய பிள்ளைகளுக்கு உதவும். ஏனெனில் பொருட் குவியல்களை வரைந்து அந்த சித்திரத்தையும் பொருள்களின் எண்ணிக்கையைக் குறிக்கும் அடையாளத்தையும் ஒருமிக்க பார்த்து அவற்றின் ஸம்பந்தத்தை அறிகிறார்கள்.

(4) வாய்ப்பாடங்களுக் கெல்லாம் சித்திரம் வரைதல் ஸஹஜமான உபகரணமாகும்.

சித்திரம் வரைய கற்பிக்கும்போதெல்லாம் "சித்திரம் கண்ணிற்குப் புலப்படும் பாஷை" என்று ஞாபக மிருக்க வேண்டும். மேலும் "சித்திர முறைப்படியே அதிகமாய்ச் சித்திரம் வரைதலால் பிள்ளைகளின் கற்பனா சக்தி விருத்தியடைவதற்கு கெடுதல்" செய்யாமல் ஜாக்கிரதையாக யிருக்க வேண்டும். (Memorandum on Teaching of Drawing issued by the Scottish Board of Education) ஆனால் இந்த (கண்ணிற்கு புலப்படும்) பாஷையின் எழுத்துக்களை பிள்ளைகள் கற்றுக்கொள்ளவேண்டும். வஸ்துக்களையும் உபயோகிக்க கற்றுக்கொள்ளவேண்டும்.

சிறு பிள்ளைகளுக்குச் சித்திரம் வரைய கற்றுக்கொடுக்கும் திட்டத்தில் பின்வரும் பயிற்சிவகைக ளிருக்கவேண்டும்.

1. உபாத்தியாயர் உதவியில்லாமல் பொருள்களைப் பார்த்து வரைதல்.

2. உபாத்தியாயர் காண்பித்துக் கொடுத்து வரைதல்.

3. ஞாபகத்தாலாவது, கற்பனை பண்ணியாவது வரைதல்.

4. சித்திரம் வரைதலின் முறைகள் தெரியும்படியான சில பாடங்கள்.

பிள்ளைகள் பலவிதமான வஸ்துக்களைக் கொண்டு வரையலாம். சாமான்ய சீமைச் சுண்ணாம்புக் கட்டி, பென்ஸில்;

நயப்பான சீமைச்சுண்ணும்புக் குச்சு, கட்டைக்கரி, நீர்வர்ணங்கள் முதலியன. ஸாமான்ய சீமைச் சுண்ணும்புக் கட்டியை, கைநீட்டியபடி சித்திரம் வரைவதற்கு உபயோகிக்கலாம். நயப்பான சீமைச் சுண்ணும்புக் குச்சுகளையும் சுலபமாய் கொடுத்து வாங்கிவைக்கலாம். அது பாட விளக்கத்திற்கும் பாவப் பிரகாசமாய் வரைவதற்கும் உபயோகமாகும். சற்று பெரிய பிள்ளைகள் உபயோகிப்பதற்கு நீர்வர்ணங்கள் வெகு திறமானது.

கோடுகள், வட்டங்கள், அண்டாகிருதிகள் முதலியவற்றை வரையப் பழகும் பாடங்களிலெல்லாம் பிள்ளைகளுக்கு மனப்பற்று இருக்கக்கூடிய வஸ்துக்கள் வகுப்பிலிருந்தால், பிள்ளைகளுக்கு களிப்போடு வேலைசெய்யத் தோன்றும். ஏதோ ஒரு வஸ்துவை தாங்கள் வரைவதாக நினைக்க பிள்ளைகளுக்குப் பிரியம். நேர்கோட்டால் அமையப் பெற்ற பொருள்களைப் பார்த்தபிறகு நேர்கோடு இழுக்கச் செய்யலாம். வளைவு கோட்டால் அமைக்கப்பட்ட பொருள்களைப் பார்த்தபிறகு, வளைவுகோடுகளை இழுக்கச்செய்யலாம். ஆரம்பத்திலிருந்தே பிள்ளைகள் தாங்களே ஒரு பொருளை செவ்வையாய்ப் பார்க்கவும், பார்த்தவற்றை இயன்றமட்டும் பிழையில்லாமல் வரையவும் தெரியவேண்டும்.

நிஜமான வஸ்து ஒன்றைப்பற்றி தங்கள் மனதில் பட்டவற்றை தாங்கள் பதிவதாக பிள்ளைகள் உணரவேண்டும். மற்றவர்கள் எவ்வளவு தெரிந்தோராயினும் அவர்களுடைய மனதிற் பட்டதைத் தாங்கள் பதிவதாக ஒருபோதும் எண்ணக்கூடாது. அவர்களுடைய சித்திரம் முதலியவை எவ்வளவு பெரும்படியாயிருந்தாலும் பிழையற்றதாய் இல்லாதிருந்தாலும் அது அவர்கள் நேரில் பார்த்ததை சித்திரமாக அமைக்க மனதாரச் செய்தப் பிரயத்தனமாகும். மேல்மேல் சுத்தமான சித்திரங்களை வரைவதற்கு இது ஒரு உறுதியான அஸ்திவாரமாகும்.

இளம்பிராயமுள்ள உபாத்தியாயருக்கு எப்போதும் ஞாபக மிருக்கவேண்டிய தொன்றுண்டு. அதாவது பிள்ளைகளுக்கெதிரில் பொருளைவைத்து அதை "எப்படி வரைகிறது" என்று காண்பிப்பது பார்த்து வரையச்செய்யும் சரியான முறையன்று என்பதுதான். பிள்ளைகள் தாங்களே பிரயத்த

னம் பண்ணவேண்டும். அப்புறம் சிற்சில விசேஷ அம்சங் களில் எப்படி செய்யவேண்டு மென்பதை உபாத்தியாயர் காண்பிக்கலாம்.

நாம் கவனிக்கவேண்டிய விஷயம் என்னவெனில் பிள்ளை கள் தங்கள் கண்களை உபயோகிக்கும்படி எப்படி செய்வது; அவர்கள் உபயோகிக்கும் வஸ்துவைப்பற்றி அவர்கள் மன தில் விழுந்திருக்கும் பாவரூபமான பிம்பமானது மேலும் மேலும் பூர்ணமாயும் பிழையற்றதாயும் இருக்கும்படி எப்படிச் செய்வது என்பவைதான். உபாத்தியாயர் அநுபவமில்லாதவ ராகவாவது ஜாக்கிரதைக் குறைவாகவாவ திருந்தால் வழக் கம்போல சில கெடுதல்கள் நேரும். உதாரணமாக ஒரு வகுப் பில் ஒவ்வொரு பிள்ளைக்கும் ஒரு பூவோ, இலையையோ கொ டுத்து அவர்களிச்சைப்பிரகாரம் வரையும்படி சொன்னதாக வைத்துக்கொள்வோம். உருவத்தை செவ்வையாய் பார்க்கி ருர்கள். அப்புறம் உபாத்தியாயர் ஒரு பூவையோ, இலையை யோ வரையப்புகுகிருர். தான் வரைவதைப் பார்க்காமல் எதிரிலிருக்கும் பொருளையே பிள்ளைகள் பார்க்கும்படி செய் யவும், தான் வரைந்தது பிள்ளைகள் மனதில் உறுதியாய் பதி யுமுன் அதை அழித்துவிடவும், ஒவ்வொருவரும் பொருளை ஓரோர் விதமாகவைத்துக் கொள்ளவும், எவ்வளவு ஜாக்கிர தை எடுத்துக்கொண்ட போதிலும், வரைந்து காட்டுவது, பிள்ளைகள் ஊன்றிப்பார்க்கும் சக்தியை தூண்டுவதைவிட்டு, அதை மழுங்கத்தான் செய்யும். இப்படி ஆவதால் பிள்ளை கள் செய்யும் வேலைகளில் தாங்கள் சொந்தமாய்ப் பார்த்து செய்திருக்கிருர்களா என்று தேடுவது வீண்தான்.

மற்றப்பாடங்களில் உபாத்தியாயர் அடிக்கடி சொல்லி அதன் படி பிள்ளைகள் செய்வதால் அது பின்பாட்டாகிற தல்லவா?

அவ்விதக் கெடுதல்கள்தான், பிள்ளைகள் ஒரு பொருளை நேரில் பார்த்து சுயமாய் அதைப்பற்றி பாவம் ஏற்படுத்திக் கொள்ள இடமிராமல் இனப்பிசகாய் உபாத்தியாயர் சித்திரம் வரைவதால் வந்துவிடும். சில சமயம் பொருளிருப்பது நம்பி மோசம் போவதற்கு ஏதுவாகிறது. பிள்ளைகள் பொருளை நேரில்பார்த்து மனதிற்படவேண்டிய பாவத்தைத் தடுத்து உபாத்தியாயர் வரைந்த சித்திரத்தின் பிம்பமே மனதில் மே

லாக நிற்கவிட்டால் சித்திரத்தைப் பார்த்து சித்திரம் எழுதுவது போல் அது பயனற்ற காரியமாகும் என்பதை நாம் மறத்தல் கூடாது. சித்திரங்களைப் பார்த்து சித்திரம் பிள்ளைகள் எழுதி விடுவதா லுண்டாகும் பாதகமென்னவெனில் "இதுமுதல் பிள்ளைகள் பொருளை தங்கள் கண்ணாலேயே பாராமல், மட்டுக் கட்டினதானவும் பெரும்பாலும் குறைவுள்ளதுமான வேறொருவர் பார்வை வழியாய் பார்ப்பார்கள்" என்பதுதான். (Mr. Rooper in School Home Life.)

இந்த காலத்தில் சிறு பிள்ளைகளுக்குக் கற்பிக்கும் நல்ல உபாத்தியாயர் எவரும் சித்திரத்தை பார்த்துச் சித்திரம் எழுதுவதை ஆமோதியார். ஆனால் பிள்ளைகளுக்குத் தனித்தனியாகவோ, வகுப்புக்கோ பார்த்தெழுத பொருள்களை சேகரித்து வைத்தால் மாத்திரம் போதாது. அப்பொருள்களை பிள்ளைகள் செவ்வையாய்ப் பார்க்கும்படி உற்சாகப் படுத்திக்கொண்டே வர்வேண்டுமென்பதை ஞாபகம் வைக்கவேண்டும். பிள்ளைகள் மனிதிலுள்ள பாவங்கள் பெரும்படியானவை. ஆகையால் ஆரம்பத்தில் வரையும் சித்திரங்கள் குணப்பழுதும் குறையுமாக விருப்பது ஸஹஜமே. பிள்ளைகள் வெகு தாமஸமாயிருப்பதால் அவர்கள் தாங்களே பொருளைப்பார்த்து வரைய முயன்று பார்ப்பதன் முன் உபாத்தியாயருக்கு தானே பலகையில் வரைந்து காட்டிவிடலாமா என்று ஆத்திரம் வரலாம். தங்கள் பிசகுகளை தாங்களே பார்த்தறியும்படி பிள்ளைகளைத் தூண்டாமல் உபாத்தியாயருக்கு தானே அப் பிசகுகளைக் காட்டத் தோன்றலாம். நம்முடைய லக்ஷியம் என்னவென்று நமக்கு ஞாபக மிருக்கவேண்டும். பிள்ளைகள் வரையும் சித்திரங்கள் அழகாயும், பூர்ணமாய்ச் செய்யப்பட்டதாயும் இருக்க வேண்டுமென்பது நமது கருத்தன்று. பிள்ளைகள் தங்கள் கண்களை நன்றாய்ப் பயன்படும்படி செய்வதற்கு சித்திரம் வரையும் பாடத்தை ஒருதவியாக்க வேண்டுமென்பதே கருத்து. பிள்ளைகள் வரையும் சித்திரங்களிலிருந்து "ஒரு பொருளைப்பற்றிய அறிவு பிள்ளைகள் மனதில் எப்படி வளர்ந்து வருகிறது" என்பதை நாம் கற்றறிய வேண்டும்.

"பிள்ளைகளின் சித்திரங்களைப் பார்த்துக்கொண்டு வந்தோமானால் அவர்கள் மனதிற்குள் நடக்கிறவை நமக்கும் புலப்

படும். . கண்ணிற் கெதிரிலுள்ள பொருள்களை மனது கிரஹித்ததை பிரத்தியக்ஷம்போல் பார்க்க ஒருவாறு நமக்கு இயலும்" (Rooper in School and Home Life).

இப்படிப் பாராமர்சித்துப் பார்ப்பதோடு ஸாமான்ய புத்தியும் உடன்உணர்வும் இருந்தால் பார்க்கும் கூர்மையையும், புதுமையையும் சித்திரத்தைக் காட்டுவதால் குன்றச் செய்யாமல் மனது ஒரு சார்பாயின்றி பிள்ளைகள் பொருள்களைப் பார்ப்பது அவசியமென்பது நமக்கு விளங்கும். தவிர எப்போது உபாத்தியாயர் சித்திரமெழுதிக் காட்டினால் வெகு நலமாயிருக்குமென்பதும் நமக்குத்தெரிய ஏது வுண்டாகும்.

சித்திரம் வரைவதற்குத் தெரிந்தெடுக்கும் பொருள்கள் பிள்ளைகளுக்கு நல்ல பற்றுள்ளவையா யிருக்கவேண்டியது வெகு அவசியம். இவ்விதப்பற்று பாஷை கற்கும் பாடத்தில் உண்டாகும். பெரும்பாலும் சித்திரம்வரையும் பாடத்திற்கு முன் பாஷைப்பாடம் நடக்கும்.

சித்திரப்பாடத்தின் ஆரம்பத்தில் பொருளின் ரூபத்தை நன்கு கவனிக்கச் செய்யவேண்டும். முக்கியமான அம்சங்களை பிள்ளைகள் நன்றாய் கவனித்த பிறகு வரையச்சொல்ல வேண்டும். பிள்ளைகள் வேகமாய் வரைவதால், உதவியின்றி அவர்கள் வரைவதற்கு சில நிமிஷங்களே போதும். அப்புறம் அவர்கள் வரைந்தவற்றின் குண்தோஷங்களை எடுத்துக் காட்டவேண்டும். முடியுமானால் பிள்ளைகளே பெரும் தப்புகளை திருத்திக் கொள்ளவேண்டும். அல்லது பிள்ளைகளுக்கு நன்றாய்ச் செய்யத்தெரியாத அம்சங்களை பிள்ளைகள் அறியுமாறு உபாத்தியாயர் வரைந்து காண்பிக்கலாம். வரைந்தவற்றை பிறகு அழித்துவிட்டு பிள்ளைகளை இன்னுமொருதரம் வரையும்படி செய்யலாம்.

பிள்ளைகள் வரையும்போது அவர்களுக்கு செய்யமுடியாத இடங்களில் ஒரோர் சமயத்தில் சமயோசிதமாய் உபாத்தியாயர் உதவிசெய்ய வேண்டிவரும். ஸாமான்யப் பொருள்களையோ இயற்கை பொருள்களையோ பார்த்து வரையும் வகையை பிள்ளைகளை அறியும்படிசெய்ய உபாத்தியாயர் அனுசரிக்கும் முறை பலப்பட்டிருக்கும். உபாத்தியாயர் பிள்ளைகளுடைய பிரயத்தனங்களை பொறுமையாய்ப் பார்த்துவந்து, பொரு

ளுள்ள பிரகாரம் வரைய மனதாரச் செய்யும் ஒவ்வொரு பிர யத்தனத்தையும் உற்சாகப்படுத்தி, அப்போதப்போது ஓரோர் குறிப்புக் காட்டுவதாலும், கதையை விளக்குவதற்கு தாமத மின்றி சுண்ணும்புக்கட்டியால் வரைவதாலும் வழிகாட்டித் தூண்டல்வேண்டும். ஆனல் சித்திரம் வரையும் பாடம் துவக் கும்போது பலகையில் வரைவதில் உபாத்தியாயர்களுக்கு முன் யோசனேயும் ஜாக்கிரதையும் வேண்டும். இல்லாவிட் டால் அப்படி வரைந்து காட்டுவதன் பலனென்ன வாகலா மெனில்; தானுக ஒன்றைச் செய்யும் சக்தி நசிக்கும் உற்றுப்பார் க்கும் சக்தி மழுங்கும், இயற்கைப் பொருளோ ஸாமான்யப் பொருளோ அவற்றை கேவலம் ஒரு ரூடிக் கிரமமாய் வரை யும் பழக்கம் வரும்.

பிள்ளைகளுக்கு பரிசயமுள்ள பொருள்களுள் எதை யேனும் கொடுத்து தங்களிஷ்டம்போல் அவற்றின் பாவங் களை சித்திர ரூபமாக வெளிப்படுத்த அவர்களுக்கு அடிக் கடி அவகாசங்கள் கொடுக்கவேண்டும். இப்பயிற்சி வகை கள் பிள்ளைகளின் சுயப் பிரயத்தனங்களா யிருக்கவேண் டும். மற்ற சித்திரங்களைப் பார்த்து வரைந்தவையா யிருக்கக் கூடாது அல்லது உபாத்தியாயர் சொன்னவற்றை சித்திர ரூப மாய் காட்டினவையாகவும் இருக்கக்கூடாது. கதை விளக் கங்கள் ஞாபகத்திலிருந்தும் கற்பனையாலும் வரைதலும் இப் பயிற்சி வகைகளில் சேரவேண்டும்.

"இவ்வாரம்பப் பிரயத்தனங்களில் கிரமமாய் நடத்தும் சித்திரப்பயிற்சி வகைகளில்போ லல்லாமல் வேறு தாத்பரியங் கொண்டே குணதோஷம் கிரஹிக்கவேண்டுமென்பது ஸகஜமே" (Memorandum on the Teaching of Drawing of the Scottish Board of Education).

## கை நீட்டியபடி வரைதல்.

செங்குத்தான பரப்புகளில் பெரியதாய் வரைவது சிறு குழந்தைகளுக்கு வெகு பிரயோஜன முடைத்தானதென்று பலகாலும் வற்புறுத்தி சொல்லி யிருக்கிறார்கள். ஆகையால் நம் சிறுபிள்ளைகளின் பள்ளிக்கூடத்தின் காரியங்களுள் இன் றியமையாத அம்சமாக அதை நாம் ஏற்றுக்கொள்ளலாம்.

கை நீட்டியபடி வரைந்த படங்கள்.





வேண்டிய சாமான்களாவன:

(1) தகுந்த தளம் அல்லது பரப்பு, (2) வெளுப்பு அல்லது வர்ண சுண்ணும்புக்கட்டி, (3) துடைப்பதற்கான உபகரணங்கள்.



தகுதியான ஒரு பரப்பை எந்த நிலையில் வைத்துக்கொள்வதென்பதில் கஷ்டங்கள் தோன்றும். ஏனெனில் குழந்தைகள் நின்றுகொண்டு கையை முழுதும் நீட்டி வரையவேண்டும். இதற்கு தாராளமாய் இடம் வேண்டும். அது எப்போதும் கிடைப்பதில்லை. ஏதாவதொரு கருப்பு வஸ்துவை சுவரில் கெட்டியாய் அடித்துவைத்தால் அதுபோதும்.

பிள்ளைகளுக்கு வர்ணத்தின் உபயோகம் தெரியவும், செய்யும் வேலையில் ஊற்றம் வரவும் ஒரொரு சமயம் வர்ணச் சுண்ணும்புகட்டியை உபயோகிக்கவேண்டும். ஆனால் பயிற்சிக்கு வெளுப்புத்தான் திறம். பிள்ளைகள் வரையும் தளத்தில் வர்ணச்சுண்ணும்பு பளிச்சென்று தெரியவேண்டும். இல்லாமல்போனால் கண்ணுக்குக் கெடுதி.

முதல் முதல் வரைய எடுக்கும் பொருள்கள் வடிவில் ஸாமான்யமா யிருக்கவேண்டும். அவற்றில் இரண்டு அளவுகள் தான் தெரியவேண்டும். நீளம் அகலம் மாத்திரம் தெரிகிற பொருள்களை வரைவதில் நல்ல பழக்கம் ஆகிறவரையில் கனதியைக் காட்டும்படி வரையப் பிரயத்தனம் செய்யக்கூடாது.

அழகு விஷயத்தையும் மறக்கக்கூடாது. நாம் எடுக்கும் பொருள்கள் ஸாமான்ய வடிவாயிருப்பதோடு ரூபத்தில் அழகாயு மிருக்கவேண்டும் பிள்ளைகள் சக்திக்கு எட்டாத ஒன்றையும் தெரிந்தெடுக்கக் கூடாது. எல்லா வேலையையும் வஸ்துவை நேரில் வைத்துக்கொண்டாவது அல்லது ஞாபகத்தாலாவது செய்யவேண்டும். பிள்ளைகளோடு உபாத்தியாயரும் வரையும்போது, இப்படிச் செய்யலாம் அப்படிச் செய்யலாம் என்றும் பிள்ளைகளை வழிசொல்லும்படி உற்சாகப்படுத்த வேண்டும்.

சுவரில் கௌரமாய் தொங்கவிடுவதற்கு சித்திரங்களைப் பொறுக்கி எடுப்பதிலும் அல்லது சித்திரத்தில் குணதோஷம் சொல்வதிலும் பிள்ளைகளின் அபிப்பிராயத்தை வெளியிடச் செய்யவேண்டும்.

சம்பாஷணையிலும், மாதிரிகாட்டும் பாடத்திலும், பிள்ளைகள் நீளங்களைத் தவறின்றி மதிக்கவும், அளவுக்குள் ஒன்றுக்கொன்றுள்ள சம்பந்தத்தை நன்குணரவும், அவர்கள் புத்தியைச் செலுத்த முயிற்சி யிருக்கவேண்டும். ஏனெனில் அவ்வித சக்தி யில்லாவிட்டால் பொருளுள்ளபடி சித்திரங்கள் வரைவதியலாது. ஆகையால் ஒரு பொருளை வரைவதன் முன் பிள்ளைகள் அதன் வடிவத்தை மொத்தமாய்ப் பார்க்க வேண்டும். உறுப்புகளுக்குள் ஒன்றுக்கொன்றுள்ள சம்பந்தத்தை அறிந்து கொள்ளவேண்டும். அச் சம்பந்தங்களை தெரிவிக்கும்படி அந்தப்பொருளை எப்படி எப்படி வரையப் போகிறார்களென்பதை ஏதேனும் ஒரு வழியாய் அவர்கள் காண்பிக்கவேண்டும்.

## மொத்தமாய் வரைதல்.

ஒரு பொருளை மொத்தமாய் வரைந்தால் பொருள்முற்றிலும் ஒருவாறு தெரியும். வடிவுமாத்திரம் காட்டி வரைந்தால் ஸம்ஜ்ஞையாக இருப்ப தொழிய அதிகமாய் ஸ்வரூபத்தைக் காட்டாது. ஆகையால் பின்சொன்னதைவிட முன்சொன்னதில்தான் பிள்ளைகளுக்கு அதிகப்பிரியம். ஆகையால் அந்த மாதிரியே தங்கள் சித்திரங்களை வரையும்படி அவர்களை உற்சாகப்படுத்த வேண்டும்.

6 வயதுமுதல் 8 வயதுள்ள குழந்தைகள் மோத்தமாய் வரைந்த சித்திரங்கள்.





## பிரஷ்ஷால் வரைதல். (Brush Drawing.)

அதாவது வடிவு கோடில்லாமல் நீர்வர்ணத்தில் சித்திரம் எழுதுவது பிள்ளைகளுக்கு வெகுப்பிரியம். அதைமட்டும் சரியான வழியில் சொல்லிக்கொடுத்தால் அதாலுண்டாகும் சிக்ஷண பிரயோஜனம் அதிகமென்று ஒப்புக்கொள்ளுகிறார்கள். இயற்கைப் பாடங்களில் வரும் பொருள்களின் பிரதான லக்ஷணங்களைக் காட்டுவதற்கு லகுவான மார்க்கமாகும். தவிர பிள்ளைகளுக்கு வர்ணத்தில் உள்ள ஆசையை திருப்திசெய்து வளர்க்கிறது. இந்த வேலை இருவகைப்படும். (1) பிரஷ்ஷைப் பிடிப்பதற்கும் வர்ணங்கள் சலப்பதற்குமான பயிற்சிகள் (2) ஸாமான்யவடிவுள்ள இயற்கைபொருள்களை தன்னிச்சையாய் எழுதுதல்.

6 வயதுமுதல் 8 வயதுள்ள சமூர்தைகள்
பிரஷ்ஷால் வரைந்த சித்திரங்கள்





சாமான்கள்.

ஸுமாரான தளமும் கனதியும் உள்ள காகிதம். அதிக சொரசொரப்பாயிருந்தால் வர்ணக்கலவை ஒட்டாது.

வர்ணக்கலவை.—பிள்ளைகளுக்கு மாதிரிகாண்பிக்க அவசியமான நீர்வர்ணங்கள். இவை பலவித வர்ணமுள்ள குழல்களில் விற்கப்படுகின்றன. பிள்ளைகளின் உபயோகத்துக்காக பிரதான மூன்று வர்ணமுள்ள பெட்டிகள்.

கற்றைக் குச்சுகள்.—(Brush) விலை சரசமான குச்சுகளை வாங்குவது மோசம்போகும் சிக்கணமாகும். ஏனெனில் ரோமங்கள் ஒன்றொன்றாய்ப்போய் குச்சுகள் பிரயோஜனமற்று விடுகின்றன. எப்போதும் அவற்றைக் கழுவினபிறகு எடுத்து வைக்க வேண்டும்.

கந்தைகள்.—குச்சுகளைத் துடைப்பதற்கு,

ஜலம்.—சட்டிகளில் அல்லது ஜாடிகளில்;

கையாளுவதற்கு லகுவான இந்த உபகரணத்தை எப்படி பிடித்து உபயோகிக்கிற தென்பதை பிள்ளைகளுக்கு கற்றுக் கொடுக்கவேண்டும். ஆனால் ஒருருவத்தை எழுதும் விஷயத்திலோ வென்றால், பிள்ளைகளை நன்றாய்ப் பார்க்கத்தூண்டி சுய பிரயத்தனத்தால் எழுதுவதற்கு தங்கள் சாமர்த்தியத்தை

யெல்லாம் காட்டின பிறகே உசிதம்போல் ஓத்தாசை செய்ய வேண்டும்.

**வர்ணங்களைக் கலப்பது.**—தங்களுக்கு வேண்டிய கலவை யைத் தாங்களே செய்துகொள்ளும்படி பிள்ளைகளுக்கு அவகா சம் கொடுக்கவேண்டும். இல்லாவிடில், வர்ணங்களைக் கலப் பதில் பலவித விநோதப் பரீக்ஷைகளைப் பண்ணி ஆனந்தமடை வதையும் அப்படிக்கலப்பதால் உண்டாகும் அற்புத மாறுதல் களைப் பார்க்கும் ஆநந்தத்தையும் அவர்கள் இழப்பதோடு, இப்படி யெல்லாம் செய்வதால் வரும் வெகுப் பிரயோஜன மான பயிற்சித்திறம் வெகுவாய் நஷ்டமாகும்.

**இயற்கையைப் பார்த்து சித்திர மெழுதுதல்.**—இது பிள் ளைகள் இயற்கைப் பொருள்களை நன்றாய் பார்ப்பதற்கும், அநேக ஸமயங்களில் அவற்றை அறிந்து அன்பு பாராட்டச் செய்யவும் மிகத்திறமான உபாயமாகும். இயற்கைப் பொரு ளைப் பார்த்து எழுதுவதில் இந்த இந்த மாதிரிசெய்ய வேண்டுமெ ன்று திட்டமிட்டு அப்படியே செய்யும்படி பிள்ளைகளை நிர்பந் திக்கக்கூடாது. அப்படிச் செய்வதால் ஒரு ரூடி கிரமத்தை நாம் ஏற்படுத்துவதாகும். ஆனால் வடிவக்கோடுகளை வரைந்து அதற்குள் எழுதி பூர்த்திசெய்வதைத் தகாதென்று தடுக்க வேண்டும்.

## நீர் வர்ணவேலை. (Wet-water Colour Work.)

இலையுதிர் காலத்தில் விழும் இலைகள், பழங்கள், ஜப்பான் விசிறிகள் குடைகள் இவைகளில் காணப்படும் வர்ணங்களைப் பார்க்க குழந்தைகளுக்கு ஆனந்தம். இதற்கு வேண்டிய உப கரணங்கள், ஒரு ஜாடிஜலம், கந்தைத்துணி அல்லது மை யொற்றும் காகிதம் (பிரஷ்ஷை துடைப்பதற்காக), மூன்று முக்கிய வர்ணங்களுள்ள வர்ணப்பெட்டி இவைகள்தான்.

### முறை.

1. சாதாரண உருவத்தை முதலில் நீரால் வரைதல்.

2. பிரஷ் ஈரமாய் இருக்கவேண்டும். ஜலம் சொட்டக் கூடாது. இந்த ஈரமான பிரஷ்ஷை ஒரு வர்ணத்தில் (உ-ம். சிவப்பு) தோய்த்து காகிதத்தில் நீரால் வரையப்பட்ட உரு

வத்தில் இந்த வர்ணத்தை பரவச்செய்கிறது. மற்றொரு வர்ணத்தை (நீலம்) முன்மாதிரியே தோய்த்து முதலில் பரவச்செய்த வர்ணத்தின்மேல் பரவச்செய்கிறது. இரண்டு வர்ணங்களும் கலந்து புதுவர்ணமாகத் தெரியும். (சிவப்பு, நீலம் கலந்தால் ஊதா. இவ்விதமே)

## கதை விளக்க சித்திரங்கள்.

குழந்தை பார்த்தாவது, மனோபாவனையாலாவது பொருள்களின் படங்களைச்செய்ய ஆசைப்படுகிறானென்றும், அப்படிப்பட்ட அப்பியாசங்கள் அவன் மனதில் உண்டான பாவனையை உறுதிப்படுத்தவும், ஆகையால் மனோவளர்ச்சிக்கு ஆதாரமென்றும் எல்லாருக்கும் தெரிந்த விஷயம்.

வெல்ஸ் என்பவர் "Mankind in making" "மான்கயிண்டு இன் மேகிங்" என்னும் கிரந்தத்தில் கீழே சொல்லப்புகும் விஷயத்திற்கு அனுகுணமாக எவ்விதமான சித்திரங்கள் வரைவது என்பதைப்பற்றி சில குறிப்புகள் சொல்லுகிறார். அதாவது குழந்தையை அவன் மனதிற்குப்பட்டதை திரும்பச் செய்வதில் அவனே அனுபவித்து ஆனந்திக்கும்படி விடவேண்டும். "காகிதத்தில் வரைந்துள்ள மதிப்பீனமான சித்திரங்களை காட்டுவதால் அவன் மனதை மலினப்படுத்தாமலிருக்கவேண்டும். ஏனென்றால் அப்படி வரைந்த சித்திரங்களைக் காட்டுவதால் சில உபாத்தியாயர்கள் சிறு குழந்தைகளிடத்திலுள்ள படம்வரையும் ஆசையையும் இயல்பையும் நாசஞ்செய்து விடுகிறார்கள். புத்திகூர்மையுள்ள உபாத்தியாயர் குழந்தை அப்படி சித்திரம் வரைவதை வெகுவாய் பிரயோஜனம் படுத்திக்கொண்டு, குழந்தைசெய்யும் பிரயத்தனங்களை கவனித்து அவனெழுதுவதற்கு சற்று மேலாக அவனுடன் சித்திரம் வரைவார்." அவர் இன்னும் சொல்லுகிறார். என்னவென்றால் உபாத்தியாயர் குழந்தையை அவன் பாவத்திற்கு இசைந்த மாதிரியான படத்தைச்செய்ய எப்படி தூண்டி உற்சாகப்படுத்தலாமென்றும், அதன் பிறகு அதே விஷயத்தைப்பற்றி அவர் வரையும் சித்திரத்தை சேர்க்கலாம் என்பதுதான். ஆனால் அவர் வரையும் சித்திரம் குழந்தை வரையும் சித்திரத்திற்கு ஒவ்வொரு அம்சங்களிலும் சற்று

மேலானதாக இருக்கவேண்டும். ஆனால் நாம் இதை பூரா வாக அனுசரித்து நடக்கமுடியாது. ஏனென்றால் நாம் அனேக பிள்ளைகளை வைத்துக்கொண்டு நடத்தவேண்டி யிருக்கிறது. தனித்தனியாக நடத்தவில்லை. எப்படியாயினும் மேற்சொன்ன வற்றிலுள்ள அபிப்பிராயத்தை அனுசரித்து அதன்படி நடத் தலாம். இவ்விதமாக ஸ்வேச்சையாகவும் ஸ்வபாவமாயும் மனோபாவங்களை சித்திரரூபமாகச் செய்ய அவகாசம் கொடுக் கும்படியான அனேக அப்பியாசங்களைத் தரவேண்டும்.

வெளியில் சென்று விஷயங்களை கவனிப்பதாலும், படங் களை உற்றுநோக்குவதாலும், சமயத்தில் ஆதாரவான சில குறிப்புகள் சொல்லுவதாலும், அல்லது சற்று குறைகளை எடுத்துச் சொல்லுவதாலும் குழந்தைகள் நாளாவட்டத்தில், அவர்கள் வரையும் பொருள்களின் பரிமாணத்தையும், தூரத் தையும், திசையையும் அறியவல்லவராகிறார்கள். அவர்கள் மனோபாவமானது வரவர தெளிவாயும் தீக்ஷணமாயும் ஆவதா லும், உண்மையாய் அந்த பாவத்தை விளக்கும் சக்தி விருத்தி யாவதாலும் அவர்கள் பாவரூபமான சக்திகள் விகசிக்கும் ஸ்டீவன்ஸன் "நாம் பார்க்கும் விஷயத்தை அதிகப் படுத்து கையில் நம் மனோபாவனையின் சிறப்பு விருத்தியாகும்" என் கிறார்.

## உருவமமைத்தல்.

**களிமண்ணால் உருவமமைத்தல்.** — அனேகவிதமாய் ஆலோசிக்கும் பட்சத்தில் உருவமமைத்தலானது சிறு குழங் தைகளுக்கு ரொம்பவும் பிரயோஜனமான கைத்தொழில். களி மண்ணைப்போன்ற நயப்பான வஸ்துக்களைக் கையாளுவது குழந்தைக்கு ஆனந்தத்தைத் தருகிறது. எப்படியெனில் உருவ மில்லாத அந்த களிமண்ணை அவன் இஷ்டப்பிரகாரம் வளைத்து மனோபாவனை சூசிப்பிக்கும் பிரகாரம் உருவத்தை செய்வதில் உண்டாகும் உற்சாகத்தால் தெரியவரும். பார் வைக்கு மிகவும் அற்பமான இந்த விளையாட்டினால் அவனைச் சுற்றியிருப்பவைகளை பார்த்து மனதில் கிரஹிக்கும் சக்தியை விருத்திசெய்து கொள்ளுகிறான். அப்படிச் செய்வதால் உள்

ளே அமுங்கிக் கிடக்கும் சக்திகள் வெளிவந்து ஜீஜமாவதற்கு உபயோகமாகிறது.

பொருளைப் பார்த்து உருவமமைத்தலானது குழந்தையை உருவத்தைப்பற்றிய சரியான அறிவை அடையச் செய்வதற்கு தகுந்தசாதனம். ஸ்பரிச உணர்ச்சியும் தசைகளும் விருத்தியாகின்றன. கண் உருவத்தை சரியாய் பார்த்தறிய தயாரிக்கப்படுகிறது.

**சாமான்கள்.**—களிமண் அல்லது மெதுவான வஸ்து 10 அங்குல நீளம் 8 அங்குல அகலமுள்ள ஒரு பலகை, மரத்தால் செய்யப்பட்ட உருவமமைப்பதற்கான கத்தி.

**களிமண்ணை பாதுகாத்தல்.**—களிமண்ணை வைப்பதற்கு உள்ளே துத்தநாகத் தகடுபோட்ட ஒரு மரப்பெட்டியும், அதை உபயோகிக்காதபோது மூடிவைப்பதற்காக கெட்டியான கம்பளித் துணியும் தேவை. களிமண்ணை உபயோகித்த பிறகு அந்த கட்டிகளை ஒன்றாய் சேர்த்துப் பிசைந்து கொஞ்சம் தண்ணீர் தெளித்து ஈரத்துணியால் மூடிவைக்கவும். களிமண் ஒருபோதும் ரொம்பவும் ஈரமாயிருக்கக்கூடாது. உலர்ந்த களிமண்ணை, உபயோகிக்கும் பக்குவமாயிருக்கும் மண்ணோடு சேர்க்கக்கூடாது. அது ரொம்பவும் உலர்ந்துவிட்டால் அதை நன்றாய் உடைத்து, தண்ணீர் தெளித்து அது மிருதுவாகும் வரையில் ஈரத்துணியால் மூடிவைக்கவும். கூடியமட்டிலும் சாமான்களை சுத்தமாய் வைத்துக்கொள்ள வேண்டும்.

**ஆரம்ப பயிற்சிகள்.** — ஒவ்வொரு களிமண்ணால் உருவமமைக்கும் பாடத்திலும் குழந்தைகளுக்கு இஷ்டமானதைச் செய்ய விடவேண்டும். அவர்கள் ஸ்வேச்சையாய் செய்ய விடும் அவகாசங்களை எப்போதும் விரும்புகிறார்கள். அவர்கள் அந்த சாமானைக்கொண்டு எவ்வெவ்விதம் செய்யலாம் என்பதை அறிகிறார்கள். முதல் பாடங்கள் ரொம்பவும் சாமான்யமா யிருக்கவேண்டும். அவைகள் பாஷா பாடங்களுடன் கலந்திருக்கவேண்டும். சிறு குழந்தைகளுக்கு உபயோகிக்கும் சிலமுறைகள் உருவமமைப்பதற்கு சரியான முறைகளா

யிரா. ஆனால் இயற்கை பொருள்களைப் பார்த்து அம்மாதிரியே செய்வதால், இரு கைகளுக்கு பயிற்சியும், சக்திவிருத்தியும், உண்டாகும். உருவத்தைப் பார்த்தறிவதாலுண்டான ஆழ்ந்த உணர்வும், ஆனந்தமும், குழந்தைகளுக்கு களிமண் போன்ற மெதுவான சாமான்களைக் கொடுத்து உபயோகிக்கும்படி செய்வது நியாயமென்று ரூபிக்கிறது. பொருள்களை மொத்தமாய் கவனித்தறியவும், முக்கியமான சில அம்சங்களை சொல்லவும் குழந்தைகளை தூண்டவேண்டும். அனுவசியமான விஷயங்களைப்பற்றி குழந்தைகள் கேள்வி கேட்பதை உபேக்ஷை செய்யவும்.

எல்லா சாமான்களையும் உபயோகிக்கும் அப்பியாசங்கள் இடையிடையே தேவை. குழந்தைகளை, தங்கள் நுனி விரல்களால் களிமண்ணைக்கொண்டு உருவமமைக்கும்படி கற்பிப்பதால் ஆரம்பமுதல் மேலான உருவமமைத்தலுக்கு தயார் செய்வதாகும். குழந்தைகளை பலகைகளின்மேல் களிமண்ணை அறையவிடக்கூடாது. உருண்டைவடிவம் உருளைவடிவம், முட்டைவடிவம் இம்மாதிரிகளில் குழந்தைகளுக்குப் பயிற்சி தரவேண்டும்.

1. **உருண்டைவடிவம்.**—பந்து, கோலி, மணி, அட்டிகை, பழங்கள் (உ-ம்.) செர்ரீ, திராக்ஷை, ஆபிள், நார்த்தை, எலுமிச்சை, காய்கறிகள் (உ—ம்) வெங்காயம், முள்ளங்கி, உருளைக்கிழங்கு.
2. **உருளை வடிவம்.** — மத்தளம், நூல்கட்டை, பம்பரம், வெள்ளரிக்காய், வாழைக்காய், பாம்பு.
3. **முட்டை வடிவம்.** — முட்டை, சுண்டெலி, குள்ளவாத்து, மீன் முதலியன.

ஒவ்வொரு குழந்தைக்கும், கையாளுவதற்கும், உற்று கவனிப்பதற்கும் ஒருமாதிரி இருந்தாலொழிய உருவமமைத்தாலானது பிரயோஜனத்தை தரா.

இலைகளை உருவமமைக்கும்போது இலையை தட்டையான களிமண்மேல் வைத்து இலையைப்போல் களிமண்ணை வெட்டி

எடுக்கும்படி கற்பிக்கக்கூடாது. விரல்களால் சின்ன இலைக ளின் உருவங்களை களிமண்ணில் செய்யலாம். முதலில் நுனி யில் ஆரம்பித்து பிறகு களிமண்ணை அமுக்கி பக்கவாட்டி லும் கீழும் தள்ளி சரியான உருவத்தை அடையும் வரையி லும் இம்மாதிரியே செய்யவேண்டும். இம்மாதிரியான ஆரம் பப் பயிற்சிகளுக்கு பிறகு களிமண் தட்டுபண்ண கற்பிக்க வேண்டும் இந்தத் தட்டில் குழந்தைகள் செய்த உருவமாதிரி களை வைக்கவேண்டும்.

## காகிதம் வெட்டுதல்.

காகிதத்திலிருந்து உருவங்களை அல்லது பொருள்களை கத் தரித்து எடுப்பது குழந்தையின் சிறு விரல்களுக்கு ஏற்ற வேலையாகும். பிரோபெல் சிறுவர்களுக்கு கத்தரியை உபயோ கிக்கும்படி சொல்லுகையில் அவர் குழந்தை சுபாவத்தை எப் படி உபயோகிக்கிறது என்று உண்மையாய் கண்டார். "காகி தத்தில் கத்தரித்தல், செய்தல், கட்டுதல் இவைகளிலிருக் கும் உறுதியான அபிலாஷையை குழந்தைகள் காண்பிக்கி றார்கள்". அந்த அபிலாஷையை விருத்திசெய்து தகுந்தவழி யில் விருத்திசெய்தால் சாஸ்திரீகமான மனோபாவனைக்கு வழி தேடினதாகும். அனேகரிடத்தில் குறைவாயிருக்கும் கை சாமர்த்தியத்தையும் விருத்தியாக்கும்.

காகிதம் கத்தரித்தலை, சித்திரம் வரைதல் களிமண்ணால் உருவமமைத்தல் இவைகளோடு பக்கத்துக்கு பக்கமாய் செய் யலாம். ஏனென்றால் குழந்தை உருவத்தை வெட்டிய பிறகு அந்த உருவத்தை நன்றாய் உற்றுகவனித்து ஒவ்வொரு பா கங்களின் பிரமாணங்களின் தராதரத்தை அறிந்து பிறகு சித் திரமோ, உருவமமைத்தலோ சற்று மேலாகச்செய்ய உதவு கிறது. இது மனதில் தெளிவான பாவனையை உண்டுபண்ணவும், தசைகளில் சுவாதீனமடையவும் ஸ்வேச்சையாய் இயங்கவும் மிகவும் பிரயோஜனமான பயிற்சிவகை.

**சாமான்கள்.** — காகிதம், கத்தரி, பசை, வெட்டின உரு வங்களை ஒட்டி வைப்பதற்கான ஒரு புஸ்தகம். காகிதத்தை மடித்து வெட்டுவதாலும், பிரோபெல் சொல்லுகிறபடி வஸ்து

வை காகிதத்தில் வைத்து வெட்டுவதாலும் மிகுந்த பிரயோஜனம் இருந்தபோதிலும், குழந்தைகளை நிஜமாய் தானுகவே மனோபாவனைப் பிரகாரம் செய்வதற்கு மேலான மார்க்கம் தனிக்காகிதத்தைக் கொடுத்து ஸ்வேச்சையாய் வெட்டச் செய்வது அல்லது அதிலுள்ள சித்திரத்தை வெட்டச் செய்வதுதான். ஏனென்றுல் மடித்த காகிதத்தில் வெட்டுவதைக் காட்டிலும் தனிக்காகிதத்தில் உருவத்தை கத்தரிப்பது உபாத்தியாயருடைய உதவி. அதிகமின்றி எப்படி கத்தரிப்பது என்று அவர்கள் முதலில் தெரிந்துகொள்ளுகிறுர்கள்.

குழந்தைகளுக்கு பற்றுள்ள சாமான்ய பொருள்களை முதல்பாடங்களுக்கு தேர்ந்தெடுக்க வேண்டும். உருவமானது அவர்கள் மனதில் நன்ருய் பதிந்தாலல்லது உருவத்தை சரியாய் வெட்டமுடியாது. ஆகையால் வெட்டச் சொல்வதற்கு முன் குழந்தைகளை வெட்டவேண்டிய உருவத்தை நன்ருய் கவனித்துப் பார்க்கும்படிக்கும் அதன் முக்கிய அம்சங்களை கவனிக்கும்படிக்கும் செய்யவேண்டும். காகிதம் கத்தரித்தலானது குழந்தைகளை சுற்றியிருப்பதைப் பொறுத்தும் அவர்கள் இதுவரையிலும் செய்துகொண்டு வந்ததைப் பொறுத்தும் இருக்கவேண்டும். குழந்தைகள் பொருளையாவது, அல்லது அதன் படத்தையாவது அல்லது இரண்டையுமாவது உற்றுப்பார்த்து பொருளைப்பற்றிய மனோபாவனையை விருத்தி செய்து கொள்ளுவது உருவத்தை காகிதத்தில் கத்தரிக்கும் அப்பியாசங்களுக்கு உதவியாகும். உருண்டை வடிவத்தையும், வெங்காயம், முள்ளங்கி, ஆபிள் இவைகளை பக்கத்துக்குப்பக்கம் வைத்து ஒற்றுமைகளையும் வேற்றுமைகளையும் எழுத குழந்தைகளுக்கு அவகாசம் கொடுக்கவேண்டும். ஒவ்வொன்றின் உருவத்தை கத்தரிக்கச் செய்யவும், வட்டத்தி லிருந்து பொருள்களை ஏற்படுத்தவும் அவகாசம் கொடுக்க வேண்டும். பழங்களின் உருவத்தைக்காகிதத்தில் கத்தரிப்பது குழந்தைகளுக்கு உற்சாகத்தை தரத்தக்கது. ஆனுல் குழந்தைகள் விளையாட்டுச் சாமான்களை காகிதத்தில் கத்தரிக்கப் பிரியப் படுகிறுர்கள்.

6 வயதுமுதல் 8 வயதுள்ள பிள்ளைகள் காகிதத்தில் கத்தரித்தது.



## காகிதத்தாலும் அட்டையாலும் உருவமமைத்தல்.

காகிதத்தால் உருவமமைப்பது பிள்ளைகளுக்கு வெகு பிரயோஜனகரமானவேலை. ஸாமான்ய வஸ்துக்களைப்போல் உருவமமைக்கப் பிரயத்தனப் படுவதால் உற்றுப்பார்க்கும் சக்தி தீவிரப்படுகிறது. சுற்றிலுமுள்ள வஸ்துக்களில் முன்னைவிட அதிக மனப்பற்று ஏற்படுகிறது. இதனிடையில் இப்படி நிர்மாணிக்கும் வேலையானது எண்ணிக்கை, அளவு, உருவம் இவற்றைப்பற்றிய பாவங்களை அநுபவத்தில் தெரிந்துகொள்ள சிறந்த மார்க்கமாகிறது. சொல்ப பிரயாசையால் பிள்ளைகளுக்கு வெகுப் பிரியமான "நிஜமான" வஸ்துக்களை எத்தனையோ

விதமாய்ப் பண்ண உதவுகிறது. வேண்டிய சாமான்களோ வெகுமலிவானவை. நூதனமாய்ச் செய்வதற்கு தங்கள் தங்கள் புத்திக்கு தோன்றிய பிரகாரம் செய்வதற்கும் இதில் வெகு அவகாசமுண்டு.

## வேண்டிய சாமான்கள்.

1. காகிதம்—வளையாத காகிதம். எம்மாதிரியானாலும் சரி, இந்த வேலைக்குத் தகுந்தது.

2. கத்தரிக்கோல்.—காகிதம் கத்தரிப்பதற்கு.

3. ரூல்தடி, பென்சில், அளக்கும்போது வேண்டியவை.

4. பசை.

பிள்ளைகள் சுயேச்சையாய் மனதிலுள்ளதை காரியமூலமாகக் காட்டி ஒன்றைச் செய்ய ஆரம்பித்தால் அந்த முதல் ஆரம்பத்தை உற்சாகப்படுத்த வேண்டும். உபாத்தியாயர் அதைச் செய்ய வழிகாட்டவேண்டும், தூண்டவேண்டும், உற்சாகப் படுத்தவேண்டும். ஆனால் அதிகமாய் குறிப்புக் காட்டக் கூடாது.

பிள்ளைகள் தங்களுக்குள்ள சக்தியை உணரவேண்டும் பெரியோர்மேல் சார்ந்திருக்கக்கூடாது. இந்தச் சிறு பிராயத்தில் பராதீனமாகவே யிருக்கிற வழக்கம் ஒன்று வந்துவிட்டால், இவ்வழக்கமானது தானாய் ஒருவேலை செய்வதற்கு வெகுவாய் பிரதிகூலமாக நிற்கும். ஆனால் தங்களால் இயன்றதை உணர்ந்து செய்ய அவர்களுக்குத்தக்க ஸமயங்கள் வாய்த்தால், பிறரை எதிர்ப் பார்க்காமல் ஸ்வதந்திரமாய் வேலை செய்யத் திறம் வாய்ந்தவர்களாவார்கள்.

உபாத்தியாயர் சொல்வதைக் கேட்டுக்கொண்டு பிள்ளைகள் ஒரு உருவத்தை அமைக்கும்போது, பாடத்தின் லக்ஷியத்தையும் அதில் செய்யக்கூடியதாய் எண்ணுவதையும், கூடியவரையில் தெளிவாய் குறிப்பிடவேண்டும். பலகையில் சித்திரம் வரைந்தாவது, விவரணம் பண்ணியாவது, மாதிரி வஸ்துவை எதிரில் வைத்தாவது குறிப்பிடலாம்.

**அட்டையால் உருவமமைத்தல்.**—அட்டை கெட்டியாய் இருப்பதாலும், கவனிக்க வேண்டும் படியான கனதியிருப்பதாலும் மரவேலைக்கு இதை ஒரு பூர்வங்கமாக எடுத்துக் கொள்ளலாம்.

ஒன்பது வயதுக்குக் குறைந்த பிள்ளைகளை இதைச்செய்யச் சொல்லக் கூடாது. ஏனெனில் ஏற்றக் குறைச்சலில்லாமல் சரியா யிருக்க வேண்டியதால் பிள்ளைகளுக்கு அதிக சிரமமா யிருக்கும்.

**வேண்டியவை.**—ஸுமாரான கனதியுள்ள அட்டை; ரூல் தடிகள், கத்திகள், அட்டையை வைத்து வெட்ட மரத்துண்டு அல்லது தகரத்துண்டு.

அட்டையில் உருவமமைப்பது கணக்கு க்ஷேத்திரகணிதம் இவற்றிற்கு இயல்பாக சம்பந்த மிருக்கிறது. சரித்திரம்போ லொத்த இதரபாடங்களுக்கும் இதை விளக்கமாகக் கொள்ளலாம்.

### நெய்தல், முடைதல்.

சிறு பிள்ளைகளுக்கு முடைவதில் வெகுப்பிரியம். வர்ணத்தோடுகளைக் கொண்டு முடைவதென்றால் அவர்களுக்கு பிடித்தம் அதிகம். எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் அதே வேலையாயிருப்பார்கள். முடைச்சல் மாதிரிகளைப் பார்ப்பதில் உள்ள ஆசையானது நம்மியல்பென்று ரஸ்கின் என்னும் நூலாசிரியன் அபிப்பிராயமாகத் தோன்றுகிறது. ஏனெனில் "மரங்களின் கிளைகளையும், புற்கள் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டிருப்பதையும், மேலே மேகங்கள் அழகாய் இசைந்திருப்பதையும், பார்த்துக்கொண் டிருப்பதில் நமக்குண்டாகும் பேரானந்தம்" என்று சொல்லுகிறார்.

கொஞ்சம் நெய்யக் கற்றுக் கொள்வதானது சித்திர தினுசு செய்யக் கற்றுக்கொள்வதற்கு தகுந்த வழியாகும் ஏனெனில் நெய்யும் காரியத்தாலேயே இப்படி இப்படி தினுசு போடலாமென்று மனதுக்கு ஸ்புரிக்கும். நெய்யப் பழகும்போது எண்ணிக்கையைப் பற்றிய விஷயங்கள் அநுபவரூபமாய் தானகத் தெரியவரும். ஒவ்வொரு பொருளையும் ஏதோ குறித்த காரியத்துக்காக ஏற்படுத்துவதால், முன்னடியாகவே, அளவு, உருவம் இவற்றிற்கு அளவெடுத்துக் கணக்கிட வேண்டும். அதற்கு சாமான் எவ்வளவு வேண்டுமென்று கணக்கிட வேண்டும். இன்னும் பலவிதமாகக் கணக்கு வரும்.

பிள்ளைகளுக்கு ஏதாவது ஒரு வஸ்துவை பண்ணுவதி லாசை. இந்தப் பயிற்சியால் இந்த ஆசை தீரும். தவிர இலவச

மாய்க் கிடைக்கக் கூடியதும், வீணாய்ப்போகக்கூடியதுமான சாமான்களைக்கொண்டு உபயோகமுள்ள பொருள்களாகச் செய்வதற்கு பிள்ளைகளுக்கு ஒரு மார்க்கம் தெரிகிறது.

சாமான்கள்.—சிறுபிள்ளைகள் முதலில் உபயோகிக்கும் சாமான்கள் நயப்பில்லாததாக இருக்கவேண்டும். நாணல், புல்போன்ற வெளியில் கிடைக்கும் வஸ்துக்கள்; காகிதம், ரோமம், நூல் முதலியவை போன்றதுகள் வீட்டில் கிடைக்கும் வஸ்துக்கள்.

தறிகள்.—செய்யப்போகும் பண்டத்துக்குத் தக்கதாய் அட்டையில் வெட்டிய தறிகளை சிறுபிள்ளைகளுக்குக் கொடுக்கலாம். நாகரீகமில்லாத காலத்து கதைகள் சொல்லும்போது நெசவு சமாசாரம் தானேவரும்.

நெசவைப்பற்றி சம்பாஷணை ஆனதும், துணி, வீட்டிலுள்ள சில வஸ்துக்கள், வயல்கள் தோட்டங்கள் இவைகளை சுற்றிலுமுள்ள முடைச்சல் வேலிகள் இவைகளில் நெசவு இருப்பது தெரியவரும்.

நெசவுக்காரர்களைப்பற்றி முற்காலத்ததும் தற்காலத்ததுமான கதைகளைப் பிள்ளைகளுக்குச் சொன்னால் நெசவில் அவர்களுக்கு பிடிப்புண்டாகலாம்.

நெசவைப்பற்றிய கவனிப்புப் பாடங்களில், பக்ஷிகளும், சில மீன்களும், சிலந்திப் பூச்சியைப்போன்ற பூச்சிகளும் செய்யும் அற்புதமான நெசவு வேலையைப்பற்றி பிரஸ்தாபம் வர வேண்டும். இதெல்லாவற்றையும் பிள்ளைகள் பார்ப்பதும் கேட்பதுமாயிருந்தால் அவர்கள் மனதில்படும் பாவங்கள் உறுதியாய்விடும். எல்லாமாக்கிய ஈசன் செயல்களில் பக்தியும் ஆச்சரியமும் பிள்ளைகள் மனதி லுண்டாகும்.

## தையல் வேலை.

பல பொருள்களைக்கொண்டு கொஞ்சம் நெசவு (முடைச்சல்) கற்றுக்கொண்ட பிறகு, மோட்டா கித்தானில் ரோமத்தால் கொஞ்சம் தைக்கக் கற்றுக்கொண்டால் சாதாரணத் தையல்வேலைக்கு எளிதாயிருக்கும். எட்டுப் பிராயத்திற்கு முன்னால் இவ்வேலையைச் செய்யச் சொல்லக்கூடாது. நூலின் நுனியை பிசினால் நெருடிவிட்டு பெருமணிகளைக்

கோர்க்கப் பழக்கினுல் ஊசியால் நூலைக் கோர்க்கத்தெரிய உதவும். ஸாமான்களின் இரண்டு ஓரங்களை ஒன்ருய் வைத்து தனித்தனி முடிச்சுகளாய்ப் போட்டு பெரும்படியாய் கட்டுவதிலிருந்து ஒரேநூலாய் உபயோகித்து தைக்கிறதென் பது எப்படி வந்தது என்பதை பிள்ளைகள் இரண்டுவழியாக வும் செய்துபார்த்து நன்குணரலாம்.

தைக்கச் சொல்லிக்கொடுக்க ஆரம்பிக்கும்போது பிள்ளை களை தன்னிச்சையாய் விடுவது நல்லது. இரண்டு மூன்று பா டம் வரையில் வீட்டி லகப்படும் ஸாமான்களைக் கொண்டுவரச் சொல்லி இப்படிச்செய் அப்படிச்செய் என்று சொல்லாமல் அவர்களுக் கிஷ்டமானதைச் செய்யும்படி விடவேண்டும். இப் டி அவர்சள் வேலை செய்யும்போது பிள்ளைகளுக்கு எம் மாதிரி வேலையில் திருஷ்டிபோகிறதென்று உபாத்தியாயர் கவ னித்து வருவதோடு, இந்தப்பாடம் கற்பிக்க வேண்டியதற்கு உதவக்கூடிய அநேக விஷயங்களை கவனித்துக் கொள்ளலாம்.

பிள்ளைகளுக்கு மனப்பற்றுள்ள வஸ்துக்களைத்தான் தைக்கவேண்டும். பொம்மைக்குத்துணி, வகுப்பில் துடைக்கும் துணி, கொஞ்சம் பொறுத்து கைக்குட்டைகள், அவர்கள் போட்டுக்கொள்ளும் அங்கிகள் போன்றவை.

## பலவித வேலை.

பெரிய பிள்ளைகள், தங்களுக்காவது, பள்ளிக்கூடத்தி லுள்ள பிள்ளைகளுக்காவது உபயோகமான பலவேலைகளைச் செய்யலாம்.

1. காகித அட்டைசெய்து அதில் படங்களை வைத்து ஓரங் களின்மேல் காகிதம் ஒட்டி சட்டம் போட்டாப்போல் செய் வது.

2. தங்களுக்காவது, சிறு பிள்ளைகளுக்காவது புஸ்தகம் தைத்து ஒட்டிக்கட்டுதல் (உ-ம்.) பாலர்களுக்கு வாசக புஸ்த கங்கள் செய்வது முதலியன.

3. படம் முதலிய வைப்பதற்கான புஸ்தகம் பண்ணுதல் (வைத்தியசாலை முதலான இடங்களுக்கு கொடுப்பதற்கு).

4. ஸாமான்களைக் கட்டியனுப்பும் சிறு பெட்டிகளைக்கொ ண்டு பொம்மைகளுக்கு வீடு கட்டுதல்.

5. துணி முதலியவற்றை வெளுத்து இஸ்திரீ போடுதல்.

6. பெரிய பிள்ளைகளுக்கு லகுவான மரவேலை. அப்போது சிறு பிள்ளைகளுக்கு விளையாட்டுக் கருவிகள் முதலியவற்றைச் செய்யலாம்.



## அத்தியாயம் X.

### பூகோளம்.

சாதாரண மனுஷ்யன் பூகோளம் என்று நினைக்கும்படியான பூகோளத்தை சிறு பிள்ளைகளுக்கு சொல்லிக் கொடுக்கக் கூடாது. இந்த முக்கியமான பாடத்தில் மனப்பற்று உண்டாக்குவதற்கென்றே அதற்கு தகுந்த பாடக்கொத்து தயார் செய்யவேண்டும். அப்பாடக்கொத்து மேல்வாசிப்புக்கு அஸ்திவாரமாக இருக்கவேண்டும். பூகோளத்தின் ஆரம்பப் பாடங்கள் இயற்கைப் பாடங்களிலிருந்து தொடரவேண்டும். அவர்கள் மழை பெய்வதைக் கவனித்து அதற்கென்று வகுப்பில் வைத்திருக்கும் குறிப்புப் படத்தில் குறித்து வைக்கிறார்கள். மேகங்களையும், காற்று எந்தத் திக்கைநோக்கி வீசுகிறது என்றும் கவனிக்கிறார்கள். சூரியன் எங்கே உதிக்கிறது எங்கே அஸ்தமிக்கிறது என்று கவனிக்கிறார்கள். ஆற்றின் வழியே செல்லுகிறார்கள். ரயில் ஸ்டேஷனை போய்ப் பார்க்கிறார்கள். வண்டித்தொடர் போவதையும் கவனிக்கிறார்கள் கிராமத்தைச் சுற்றி நடந்துபோகிறார்கள். மணல் விளையாட்டில் கிராமத்தைப்போல் மணலில் செய்து, அதில் முக்கியமான ஸ்தலங்களையும் குறிக்கிறார்கள். ஒரு கம்பை பூமியில்நட்டு நிழலின் நீளத்தைக் குறிக்கிறார்கள். பகலில் வெவ்வேறு காலங்களில் நிழல் எந்தப்பக்கத்தில் விழுகிறது என்று கவனிக்கிறார்கள்.

அடுத்தபடி கதை சொல்லுவது.—உபாத்தியாயர் படங்களைக் கொண்டும். பலவித விளக்கப் படங்களைக்கொண்டும் மற்றதேசத்து பிள்ளைகளைப்பற்றி கதை சொல்லவேண்டும். அவ்வூர் குழந்தைகளையும் தன் குழந்தைகளையும் ஒப்பிட்டு ஏன் இக்குழந்தைகள் வித்தியாசமாயிருக்கிறார்கள்; அவர்கள் வீடுகள், ஆடைகள், ஆகாரம் ஏன் வித்தியாசமாய் இருக்கின்ற

தென்றும் சொல்லவேண்டும். கதையைச் சொல்லிக்கொண்டிருக்கும்போது எந்த ஜனங்களைப்பற்றி பேசுகிறோமோ அவர்கள் படங்களை சுவரில் மாட்டவேண்டும். கைத்தொழில் நேரங்களில் கதையில்கேட்ட ஜனங்களைப்போல் பொம்மைகளுக்கு ஆடையுடுத்தி, அந்த ஜனங்கள் உபயோகிக்கும் வீடுகள், மற்றுமுள்ள ஸாமான்கள் இவற்றைப்போல் உருவமமைக்கலாம்.

இதன்பிறகு பிள்ளைகள் மானஸீகமாக சக்கிரவர்த்தியின் இருப்பிடமாகிய இங்கிலாந்தைப் பார்க்கப்போகிறார்கள். இந்தமாதிரி சைதாபேட்டை பிள்ளைகளுக்கு சொல்லிக்கொடுக்கும்போது சைதாபேட்டையிலிருந்து ஆரம்பித்து லண்டனிலுள்ள பக்கிங்ஹாம் அரண்மனைக்குப் போய்ச்சேர ஒரு வருஷம் (3–Term) ஆயிற்று.

முதலில் உபாத்தியாயர் இரண்டு பெரிய காகிதங்களெடுத்து சுவரில்அடித்து அதில் ஸ்தூலமாய் போகவேண்டிய வழியை வரைந்தார். விசேஷ ஸ்தலங்களை போய்ச் சேரச் சேர குழந்தைகள் கொண்டுவந்த படங்களை அந்தந்த இடத்தில் ஒட்டினார்.

முதல்படம் ரயில் வண்டித்தொடரோடு கூடிய சைதாபேட்டை ரயில் ஸ்டேஷன் காட்சி. எங்கள் வழியை காண்பிப்பதற்காக படங்களை ஒட்டிக்கொண்டு தெற்கே சென்றோம். செங்கல்பட்டில் ரெவர்மேடரி ஸ்கூல் இருந்தது–(எங்கள் பள்ளிக்கூடத்து பெரிய பிள்ளைகளுடன் அந்த பையன்கள் பந்து விளையாட்டுக்கு வந்தார்கள். ஆகையால் அதில் கவனமிருக்க இடம்)—எங்கள் காலேஜுக்கு கும்பகோணத்திலிருந்து, உபாத்தியாயர், பிள்ளைகள் வருவதால் கும்பகோணம் காலேஜ். திருச்சினப்பள்ளி மலை, மதுரைக்கோவில். ஒரு இடத்திற்கு வந்ததும் அந்த ஊரின்பெயர் பெரிய எழுத்தால் எழுதப்பட்டது. தகுந்த படங்கள் ஒட்டப்பட்டது. காவிரி ஆற்றை குழந்தைகள் நீலவர்ணத்தால் வரைந்தார்கள். அதன் கரையோரங்களில் தென்னை பனைமரங்களின் சித்திரங்களை வரைந்தார்கள். ஒவ்வொரு ஜில்லாவுக்கு வந்ததும் உள்நாட்டில் சென்று ஏதாவது கைத்தொழிலுண்டா என்று பார்த்து வந்தோம். சிலோனுக்கு படகிலேறிச் சென்றோம். சிலோனில் இரண்டு

மூன்று நாள்தங்கி அவ்விடத்தில் காப்பிக்கொட்டை, தேயிலே, ரப்பர், சரிகை, விலையுயர்ந்த கற்கள் இவைகள் வியாபாரத்தைப்பற்றி கேட்டறிந்தோம். அவ்விடத்து ஜனங்கள் பலவிதமாய் உடுப்பதையும், துறைமுகத்தில் வேடிக்கையான சிறு படகுகளேயும், பெரும் சமுத்திரத்தையும், கட்டிடங்களேயும், பாரி கப்பல்களேயும் கவனித்தோம்.

பிறகு நாங்களெல்லாரும் P & O கப்பலில் ஏறிப் பிரயாணமானேம். (இந்தப் படம் போடோ எடுக்கப்பட்டது. நான் இதில் பிரயாணம் செய்து வந்ததால் இதில் உற்சாகம்) இந்து சமுத்திரத்தைக் கடந்து ஏடனே அடைந்து அங்கே சில நிமிஷமிருந்தோம். அங்கே பார்ப்பதற்கு விநோதம் ஒன்றுமில்லாததால் கப்பலில் மறுபடி ஏறிப் பிரயாணமானேம். செங்கடலேத்தாண்டி சூயஸ்கால்வாய்வழியாய் சூயஸ்பட்டணத்தை அடைந்தோம். சமுத்திரத்தில் பிரயாணம் செய்யும்போது பொதுவாய் கப்பல்களேப் பற்றியும், சண்டை கப்பல்களேப்பற்றியும், வியாபாரக் கப்பல்களேப்பற்றியும், சமுத்திரத்திற்குள் செல்லும் கப்பல்களேப்பற்றியும், கப்பலிலுள்ள பல மனிதர்களேப்பற்றியும், அதில் ஏற்றி இருக்கும் சாமான்களேப்பற்றியும் பேசினேம். இவ்விடத்தில் அனேக விதமான படங்களே ஒட்டினேம். இதற்குக்காரணம் நாங்கள் சென்னே ஹார்பரை பார்க்கப் போனேம். அவ்விடத்தில் அனேக வியாபாரக் கப்பலே பார்த்தோம் அதனல் அவர்கள் விருப்பம். கடல் மார்க்கமாய் தந்திக்கம்பிகள் ஏற்படுத்திய விஷயத்தையும், வெகு சீக்கிரத்தில் உலகமுழுமையும் சமாசாரத்தைப் பரவச்செய்யக்கூடும் என்பதையும், எப்படி சண்டைக் கப்பல்கள் கடல்மார்க்கத்தை பாதுகாத்துக் கொண்டிருக்கின்றன என்பதையும் பற்றி பேசினேம். பிள்ளேகள் சொன்னதின்பேரில் ஓர் யூனியன்ஜாக் கொடியை கப்பலின்மேல் நாட்டினேம். யூனியன்ஜாக் என்பதை பற்றிய ஒரு பாடம் நடத்தப்பட்டது. எல்லா பிள்ளேகளும் ஒருகொடி தயாரித்து அந்தக்கொடியை பெருமையாய் சட்டையில் குத்திக்கொண்டார்கள்.

போர்ட்செயிட் ஆப்பிரிக்காவுக்கு சமீபமானதால் அங்கே போய் ஆப்பிரிக்காவைச் சுற்றிப்பார்க்கலாம் என்று யோசித்தோம். மற்ற நாட்டாருடைய கதைகளில் ஈஜிப்ட் தேசத்தவர்களேப்பற்றி கேள்விப்பட்டிருந்தபடியால் லிவிங்கஸ்டனே

வழிகாட்டியாகக்கொண்டு எங்களுக்கு தெரியாத இடங்களை காண ஆசைகொண்டு போனோம். அவ்விடத்திலுள்ள ஜனங்களையும் அனேக விதமான மிருகங்களையும் கண்டோம். திரும்பவும் போர்ட்செயிடுக்கு வந்து கப்பலேறினோம் கப்பல் எங்களுக்காக காத்திருந்தது. மத்தியதரைக் கடல்வழியாகச் சென்று மால்டாவில் தங்கினோம். அவ்விடத்திலுள்ள ஜனங்களின் விநோதமான ஆடைகளையும் துறைமுகத்தில் ஆங்கில சண்டை கப்பல்களையும் கண்டோம். ஜனங்களைப்பார்த்ததும் இடலிதேசத்து ஜனங்களின் ஞாபகம் வந்தது. ஆனால் அவர்கள் அநேகமாய் இடலியரை முற்றிலும் ஒத்திருக்கவில்லை. அவ்விடத்திலுள்ள அழகான மாதாகோவில்களைக் கண்டோம் அவைகள் நம் கோயில்களைப்போலில்லாதபோனாலும் அவை ஒரு மாதிரியாய் அழகாயிருந்தன. பிறகு மார்செயில்ஸ் துறைமுகத்தையடைந்தோம். பிராஞ்சுக்காரர்களைப்பற்றி முற்றிலும் நன்றாய் எங்கள் கதைப்பாடங்களில் அறிந்திருக்கிறோம். ஆகையால் பிரான்சுக்குள் நுழையாமல் நேராய் கற்கோட்டையுள்ள ஜிப்ரால்டரை அடைந்தோம். அந்த ஊரில் இறங்கிப் பார்த்தோம். அனேக சோல்ஜர்களைக் கண்டோம். ஒரு தடவை போர்ட் செயின்ட ஜார்ஜ் கோட்டைக்குப் போனோம். ஏனென்றால் பிரிடிஷ் சோல்ஜர்கள் எங்கும் ஒரேமாதிரிதான். அவர்கள் நீதிவாக்கியம் என்னவென்றால் "ரக்ஷி, கொல்லாதே". சோல்ஜர்களுடைய வீரச்செயல்களைப்பற்றி அனேகம் கதைகளை கேட்டிருக்கிறோம். இக்காலத்து செய்கைகள் மாத்திரம் அல்ல பழையகாலத்தில் நடந்ததைக்கூட கேட்டிருக்கிறோம். இந்த சமயத்தில் எங்கள் பள்ளிக்கூடத்தில் டோரா அடித்துக் கொண்டு அனேக சோல்ஜர்கள் வந்திருந்தபடியால் ஜிப்ரால்டரை விட்டுப்போக மனமில்லை. பிறகு பிஸ்கேவிரிகுடாவை தாண்டி இங்கிலீஷ் கால்வாய்வழியாய் தேம்ஸ் நதிக்குள் சென்றோம். போகும்போது அனேக தொழிற்சாலைகளைக் கண்டு, அவ்விடத்தில் எவ்விதமான சாமான்கள் செய்கிறார்களென்று விசாரித்துக்கொண்டு நெருப்புப்பெட்டி பண்ணுமிடம், தோல் தொழிற்சாலை, துப்பாக்கி, வெடிமருந்து செய்யும்சாலை முதலியவற்றைப் பற்றிப் பேசிக்கொண்டு போனோம். கடைசியில் லண்டனை அடைந்தோம். இரண்டு பார்லிமெண்டு கட்டிடங்களைப் பார்த்துக்கொண்டு வொயிட் ஹாலுக்கு வந்தோம். பெரி

யோர்கள் பேசிக்கொள்ளும் எல்லா ஆபிஸ்களும் இங்கு இருக்கின்றன. யுத்த ஆபீஸ், இந்தியா ஆபீஸ் முதலியன. கடைசியாய் பக்கிங்ஹாம் அரண்மனையை அடைந்தோம். இங்கே சக்கரவர்த்தியின் படத்தைவாங்கி எங்கள் சொந்த உபயோகத்திற்கு சட்டம் போட்டுக்கொண்டோம். உபாத்தியாயர் பள்ளிக்கூடத்திற்காக ஒரு பெரிய படத்தைவாங்கிச் சட்டம் போட்டார்.

இந்தப் பாடமானது ஒரு வருஷத்திற்குமேல் வரும். ரொம்ப புத்திசாலித்தனமாயும், ஆவலாயும் கவனித்து வந்திருப்பார்களானதால் அவர்கள் மானஸீகமாகப் பண்ணின பிரயாணம் குழந்தைகளுக்கு அந்தந்த இடங்களிலுள்ள அதிசயங்களை மேல்மேல் கேட்க மிகவும் உற்சாக முள்ளவர்களாக இருப்பார்கள். ஆகையால் மேல்வகுப்பு உபாத்தியாயர் பிள்ளைகள் பூகோளத்தில் மேல்விஷயம் கேட்கத்தக்கவர்களாயில்லை, மனஸில் பாவங்களே யில்லைஎன்று குறைகூற இடமிராது.



## அத்தியாயம் XI.

### சரித்திரம்.

**ச**ரித்திரமானது முக்கியமாய் மனுஷ்யனையே விஷயமாய் வைத்துக்கொண்டு படிக்கத்தக்க விஷயமாகும். மனிதர்களையும், மனிதர்கள் செய்கைகளையும், அவர்கள் செய்கையின் நோக்கங்களைப் பற்றியும், சரித்திரம் சொல்லுகிறது. "ஹீரோ, ஹீரோ வொர்ஷிப்" என்னும் கிரந்தத்தில் கார்லையில் சொல்லுகிறார் "லோகத்தில் மனுஷ்யன் செய்திருக்குமவற்றின் விருத்தாந்தத்தை விசாரிக்கப் புகுந்தால், அது இங்கே உழைத்த மஹான்களின் சரித்திரமாகவே ஆகும்". இதையே மூலாதாரமாகக் கொண்டு கிண்டர்கார்டனில் கற்பிக்கும் சரித்திர மெல்லாம் இவ்வுலகில் சிரமப்பட்டு பெரிய பெரிய காரியங்களை பரோபகாரமாகச் செய்து பல கஷ்டங்களையெல்லாம் தாண்டின மஹான்களுடைய கதைகள்தான்.

முற்காலத்தைப்பற்றி குழந்தைகள் அதிகமாய் யோசிக்க முடியாது. நேற்று, போனவாரம், போனவருஷம் என்பதெல்

லாம் குழந்தைகளுக்கு ஏறக்குறைய ஒன்றே. ஆனால் உபாத்தியாயர் கதையைச் சொல்லும்போது காலவரிசையாய் இருக்கிறதா கதை என்று கவனிக்கவேண்டும். பெரியோர்கள் கதைகள் ஒரு தேசத்திற்கு மாத்திரம் சம்பந்தப் பட்டவைகளாக இல்லாமல் பலதேசத்தவர்களைப் பற்றியும் சொல்லவேண்டும். தற்காலத்தில் வீரச்செயல்களை செய்தவர்களாகவுமிருக்கலாம். முன் காலத்தில் செய்தவர்களாகவு மிருக்கலாம். இவைகளுள் முக்கியமானது. சண்டையில் வீரச்செயல்கள் செய்தவர்கள் மாத்திரமல்ல. சமாதான காலங்களில் பெரிய காரியங்களை செய்தவர்களுடைய சரித்திரமும் சொல்லவேண்டும். சண்டையில் வீரச்செயல்களைச் செய்தவன்தான் வீரன் என்று சாதாரணமாய் எண்ணுவது வழக்கமாயிருக்கிறது. ஆடம்பரங்க ளில்லாமல் அரிய பெரிய காரியங்களைச் செய்கிறவன்தான் மேலான வீரன். இவர்களைப்பற்றி பத்திரிகைகளில் ப்ரசுரம் கிடையாது. இறந்த பிறகு புகழ்ச்சியுமில்லை. புதிய நோய்களுக்கு பரிஹாரத்தைத் தேடி அப்படி தேடுங்கால் தங்கள் உயிரையும் விடுகிற வைத்தியன், தங்களை அடைந்த குழந்தைகளை மேலாகச் செய்ய உழைக்கும் உபாத்தியாயர், கிராமங்களை சுத்தமாக்கி ஜனவசதிக்கு ஏற்றதாகச் செய்யும் ஜனங்கள் இவர்களே உண்மையான வீரர்கள். இதைப் பிள்ளைகளுக்கு எடுத்துக்காட்டி மனதில் பதியும்படி செய்யவேண்டும்.

கூடுமானல் வெகுகாலத்திற்கு முன் நடந்த கதைகளைச் சொல்லி குழந்தைகளை அந்த ஜனங்களாக பாவிக்கும்படி செய்யவேண்டும். இவ்விடத்தில் கதையை நடித்தல் மிகவும் உபயோகமானது. கதை நடித்தலைப்பற்றி பின்னடி இந்தப் புஸ்தகத்தில் விரிவாய்ச் சொல்லப்படும். படங்களும், சித்திர வர்ணனைகளும் இந்த சந்தர்பத்தில் குழந்தைகளுக்கு மிகவும் உற்சாகத்தை உண்டுபண்ணும். அதுவு மல்லாமல் விஷயங்களை நன்ருய் ஞாபகத்தில் வைக்கும்படியும் செய்கின்றன. சரித்திரத்தை சொல்வதின் நோக்கம் என்னவென்ருல் குழந்தைகளை நல்ல நகரவாசிகளாகவும், தேசாபிமான முள்ளவர்களாகவும், தேசவிஷயத்தில் உண்மையுடையவர்களாகவும், மற்ற தேசத்தினிடத்தில் உசிதமான கௌரவமுடையவர்களாகவும் செய்வதே. பின்னல் சொல்லுகிற பாட

அட்டவணை உபாத்தியாயருக்கு உபயோகமாக விருக்க லாம்.

**1.** ராஜதானிக்கு பிரதானத் தலைவர், கவர்னர்: எங்கே வசிக்கிறார்? என்ன செய்கிறார்? அவருக்கு யார் காவல்? அவருக்கு மேற்பட்டவர் யாவர்?; வைசிராய் ராஜப்பிரதிநிதி: அவர் எங்கே வசிக்கிறார்? டெல்ஹி இந்தியாவின் தலைநகரம். ஏன்?; வைசிராய்க்கு மேல்பட்டவர் யார்? சக்கரவர்த்தி. அவர் எங்கே வசிக்கிறார்? அவர் என்ன செய்கிறார்?

வைசிராய்முதல் கிராம அதிகாரிகள் வரையிலும் அவரவர் செய்யும் ஆட்சிமுறை.

2. தங்கள் தேசத்திற்காக பெருங்காரியங்களைச் செய்த ஸ்திரீகள் புருஷர்கள் கதை.

1. இராமனவதாரம்.
2. கிருஷ்ணவதாரம்.
3. புத்தன்.
4. மகம்மது.
5. கிச்சினர்.
6. ராபர்ட்ஸ்.
7. ஃபுளாரென்ஸ் நைடிங் கேல் அம்மையார்.
8. கொலம்பஸ்.
9. லிவிங்கஸ்டன்.
10. காப்டன் ஸ்காட்
11. லார்ட் க்ளைவ்.
12. சிவாஜி.
13. பெருமையுள்ள ஆல்ப்ரெட்.
14. விக்டோரியா மஹாராணி.
15. எலிசபெத் மஹாராணி.
16. காரன்வால். V. C.
17. ஆல்பர்ட், பெல்ஜியம் ராஜா.
18. அக்பர்.
19. கோகலே.
20. நெல்சன்.
21. கிரேஸ் டார்லிங்.

இதைப்பார்த்ததும் காலவரிசையை அனுசரித்து எழுதவில்லை என்று சுலபமாய் அறிந்துகொள்ளலாம். சில கதைகளை பூகோள சம்மந்தமாகச் சொல்லலாம். சில கதைகளை தள்ளிவிட்டு வேறுசிலவைகளைச் சேர்த்துக்கொள்ளலாம். மேலே சொல்லப்பட்டது,மாதிரி அட்டவணையே யொழிய வேறில்லை

3. **தற்கால சரித்திரம்.**—இது சம்மந்தமாக அன்றன்று நடக்கும் விஷயங்களைப்பற்றிச் சொல்லலாம். இவ்விதமாக குழந்தைகளுக்கு பொதுவிஷயங்களில் ஞானம் விருத்தியாகிறது. உலகத்தில் என்ன விசேஷங்கள் நடந்துகொண்டிருக்

கின்றன என்று சொல்ல தினந்தோறும் சில நிமிஷங்களை செலவழிக்கலாம். இப்போது பெரிய யுத்தம் நடப்பதால் உற்சாகத்தை தரத்தக்க விஷயங்கள் எப்போதும் அகப்படும். யுத்தபடம் ஒன்று வகுப்பில் தொங்கவிடலாம். ஒவ்வொரு இடம் சொல்லும்போது அவ்விடத்தில் சிறு கொடிகளை ஒட்ட வைக்கலாம்.

4. முற்காலத்தும், இக்காலத்தும் பிரயாண சாதனம். கட்டைவண்டியிலிருந்து, மோடார்வண்டி, ஆகாயக்கப்பல் வரையிலும்.

5. முற்காலத்திலும், இக்காலத்திலும் ஒருவருக்கொருவர் சமாசாரத்தை அறிவித்தல், தபால், தந்தி, டெலிபோன்.

6. நூதனமாய் கண்டு பிடிக்கப்பட்டவைகளும், யுக்திகளும் அச்சிடுதல், நீராவி, ஆகாயக்கப்பல்கள், மோடார் வண்டிகள்,—பற்பல விதமான இயந்திரங்கள்.

மேல் குறித்த பாடதிட்டத்தைகொண்டு அனேக விஷயங்களை கற்பிக்கலாம். வரிசைக் கிரமமாக எடுத்துச் சொல்லவும் வேண்டியதுமில்லை சந்தர்ப்பம் நேரும் மாதிரி சொல்லவேண்டும். முன் சொன்னபடி இந்த திட்டமானது குறிப்புக்காட்ட உத்தேசிக்கப்பட்டது. இது சம்பந்தமாய் அனேக கைத்தொழில்கள் செய்யலாம். அனேக விஷயத்தை பூகோள சம்பந்தமாய் எடுத்துச் சொல்லலாம். உபாத்தியாயரும், பிள்ளைகளும் படங்களை சேகரித்து வகுப்பில் சுவரில் போட வேண்டும்.

## மாதிரி சரித்திரக் கதைகள்.

சரித்திரக் கதைகளை சொல்லும்போது ஒருவனுடைய வாழ்நாளை மாத்திரம் சொன்னால் போதாது. உதாரணமாக: ராபர்ட்ஸ் என்பவரைப்பற்றி — அவர் இந்த வருஷத்தில் பிறந்தார் இந்த வருஷத்தில் இந்தியாவிற்கு வந்தார், இந்த வருஷத்தில் சண்டைபோட்டார், இந்த வருஷத்தில் இறந்தார். இப்படிப்பட்ட ரசமில்லாத சமாசாரத்தை சொல்லுவதானது சிறுகுழந்தைகளுக்கு உற்சாகத்தை 'ராது.

அவர் வாழ்நாளில் குழந்தைகளுக்கு ஆவல் வரும்படியானதாய் நடந்த ஒன்றிரண்டு சம்பவங்களைச் சொல்லவேண்டும். உதாரணமாக—ராபர்ட்ஸ் என்பவருடைய சரித்திரத்

தில் பின்சொல்லும் சமாசாரத்தை சொன்னால் அவருடைய வாழ்நாளைப்பற்றி மாத்திரம்சொல்வதைக் காட்டிலும் குழந்தைகளுக்கு அதிக நலமாயிருக்கும்.

**லாட் ராபர்ட்ஸ் எப்படி விக்டோரியா கிராஸை அடைந்தார்.**

ஒரே நாளில் செய்த இரண்டு வீரச்செயல்களால் பாப் என்று வழங்கும் ராபர்ட்ஸ் விக்டோரியா கிராஸை 1858௵ ஜனவரிமீ 2௳ அடைந்தார். தேதியை கரும்பலகையில் எழுதுவது உபாத்தியாயர் சௌகரியத்திற்கு—பிள்ளைகளுக்காக அல்ல. ஒரு காலத்தில் என்பது பிள்ளைகளுக்குப் போதும்.

ஒரு காலத்தில் காடகங்கு (Khadagung) என்னும் கிராமத்தில் அவர் ஒரு கூட்டம் சிபாய்களை சந்தித்தார். அவ்விடத்தில் ஒரு மும்முரமான சண்டை நடந்தது. அதில் சத்துருக்கள் முழுமையும் தோற்றுவிட்டார்கள். சண்டை முடிந்தபிறகு ஆங்கிலேய குதிரைவீரர்கள் ஓடிப்போகிறவர்களை துரத்திச் சென்றார்கள். அப்போது ராபர்ட்ஸ் சிறு பிள்ளை. லெப்டினென்டு (Lieutenant) உத்தியோகத்திலிருந்தவர் அவர்கள் துரத்திச் செல்லுகையில் ஒரு விரோதியானவன் ஆங்கிலேய சிபாய்களில் ஒருவனைகுத்த எத்தனித்ததை ராபர்ட்ஸ் கண்டார். இதைப்பார்த்ததும் அவர் தன் குதிரையை துரிதமாய் திருப்பிக்கொண்டு அவர்களிருக்கு மிடம்போய் விரோதியை தன் கத்திக்கு இறையாக்கி கீழே தள்ளினார்.

அதே சமயத்தில் இரண்டு கலகக்காரர்கள் ஆங்கிலக் கொடியொன்றை தூக்கி யோடுவதைக் கண்டார். உடனே அவர்களைக் கடுவேகமாய் துரத்திச்சென்றார் அவர்கள் பக்கத்திலிருந்த ஒரு கிராமத்தில் ஒளிந்துகொள்ளும் சமயத்தில் அவர்களைக் கண்டு ஒண்டியாய் அவர்களிருவருடன் சண்டை செய்தார். கொடியைத் தூக்கிக்கொண்டிருப்பவனை கத்தியால் வெட்டித் தள்ளினார். அவன் கீழே விழும் சமயத்தில் கையிலிருந்த கொடியை மற்றவன் பிடுங்கிக்கொண்டு துப்பாக்கி முனையை ராபர்ட்ஸினுடைய விலாப்பக்கமாக வைத்து விசையை பிடித்திழுத்தான். மயிரிழை தப்பியிருந்தால் லெப்டினன்ட் உயிர்போயிருக்கும். இந்தக்காலமா யிருந்தால் துப்

பாக்கி தவருமல் சுட்டுவிடும். அந்தக்காலத்து துப்பாக்கிகள் அவ்வளவு திறமில்லை. ஆகையால் அதிர்ஷ்ட வசத்தால் கலகக்காரன் துப்பாக்கி வெடிக்கவில்லை. அவன் தன் கையிலிருந்த கொடியைப் போட்டுவிட்டு உயிர்தப்பி யோடினன். ராபர்ட்ஸ் ஜெயக்கொடியைத் தூக்கிக்கொண்டு திரும்பிவந்தார்.

மேலேசொன்ன மாதிரியான கதைகளை பிள்ளைகளுக்குச் சொல்லவேண்டும். வீரர்களிடத்தில் அவர்களுக்கு ஸ்நேக பாவம் உண்டாகிறது. தாங்கள் சிறுவயதில் கேட்ட வீரர்களைப் பற்றி மேல் வகுப்புக்கு சென்றபிறகு விவரமாய் கேட்க விரும்புகிறார்கள்.

### லார்ட் நேல்ஸன்.

லோகத்தில் தோன்றிய சிரேஷ்டமான கடற் போர்வீரர்களுள் லார்ட் நெல்ஸன் ஒருவர். டிராபல்கர் யுத்தத்தில் இவர் ஆங்கிலேய கப்பற்படையை நடத்தினர். பிரான்சு ஸ்பெயின் கப்பற்படைகள் தோல்வியடைந்தன. இங்கிலாந்து பெரிய ஆபத்தினின்றும் தப்பிற்று. அன்றைபதினம் விக்டோரியா என்னும் கப்பலின் மேல்தளத்தில் அவரைப் பார்க்கும்போது அவர் ஒருபெரியகப்பல் படைத்தலைவராகக்காணப்படவில்லை. அவர் குள்ளம். ஆடையோ விகாரம். யுத்தத்தில் ஒரு கையும் கண்ணும் போனவர். அவர் ஒரு கண்ணைக்கொண்டு மற்றவர்கள் இரண்டு கண்களைக்கொண்டு பார்ப்பதைக் காட்டிலும் அதிகம் பார்க்கத் திறமுள்ளவர். யுத்தம் ஆரம்பிக்கும் முன்னேயே என்னென்ன செய்கிறதென்று அவர் மனது தீவிரமாய் வேலைசெய்து கொண்டிருந்தது. சண்டை ஆரம்பிக்க சற்று முன்னல் கப்பலில் சென்று கப்பலாட்களுக்கு உத்திரவு கொடுத்துக்கொண்டு அவர்களை பட்சமான வார்த்தைகளால் உற்சாகப் படுத்திக்கொண்டு போனர். கப்பலிலுள்ளவர்களுக்கெல்லாம் நெல்ஸனிடத்தில் வெகு பிரியம். அவர் இம்மாதிரியான இனிய வார்த்தைகளைச் சொல்லக்கேட்டு ஸாதாரணமாய் கடின ஸ்வபாவமானவர்களுக்கும் மனம் கரைந்தது. இப்படிப்பட்ட தலைவர் இருக்கிறார் என்று அவர்களுக்கு வெகு பெருமை "இங்கிலாந்து ஒவ்வொருவரையும் தன் தன் கடமையை செய்யும்படி எதிர்பார்க்கிறது" என்பது அவர்களுக்கு அவர் கடைசியாய் அனுப்பிய செய்தி. ஒவ்வொருவ

னும் சண்டை அதிக உக்கிரமாயும் அதிகநேரம் நடந்தபோ தும் தன் கடமைகளை நன்ருய் செய்தான்.

இதுதான் அவர் கடைசிச்சண்டை கப்பல். மேல்தளத்தில் தன் சினேகிதரான ஹார்டியுடன் நடந்துகொண்டிருக்கும் போது அவர் முதுகில் ஒரு குண்டு பாய்ந்தது. அவரை கீழே தூக்கிக்கொண்டு சென்ருர்கள். வெகுநேரம் மரணுவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தார். ஆனல் அவர் எண்ணமெல்லாம் சண்டையிலேயே இருந்தது. ஹார்டியைக் கூப்பிட்டு 'சண் டை எப்படி இருக்கிறது' என்று கேட்டார். அதற்கு ஹார்டி சத்துருக்களுடைய கப்பல்களில் அநேகத்தை பிடித்து விட் டோம் என்று சொன்னபோது "ரொம்பவும் சந்தோஷம் ஹார்டி முன் அவர்கள் அடிபட்டமாதிரி இன்னும் அடி", என்று ஆவலாய்ச் சொன்னர். கடைசியாய் அவர் சினேகிதர் சண்டையில் ஜெயித்தோம் என்று சொன்னபோது நெல்ஸன் ஹார்டியின் கையை நன்ருய் அமுக்கிப் பிடித்து "ஹார்டி, போய் வருகிறேன். நான் என் கடமையை செய்துவிட்டேன். இத ற்கு என் நன்றியை ஈசுவரனுக்குத் தெரிவிக்கிறேன்" என்று சொன்னர். இங்கிலாந்தின் தைரியம் வாய்ந்த புத்திரர்களுள் ஒருவராகிய இவருடைய கடைசி வார்த்தை இதுதான்.

## கிரேஸ் டார்லிங்.

இங்கிலாந்தின் வடக்கு கடற்கரைக்கு அப்பால் கற்பாறை யான ஒரு சிறு தீவில் ஒரு தீபஸ்தம்ப மிருக்கிறது. வில்லியம் டார்லிங் என்பவன் ஒரு காலத்தில் அந்த ஸ்தம்பத்துக்கு காவ லாயிருந்து வந்தான். அவனுடைய மகளாகிய கிரேஸ் அவ னுடனிருந்தாள். ஒவ்வொரு நாளும் இவள் தகப்பனுருக்கு உதவியாய் விளக்குவர்த்தியை கத்தரித்து சீர்படுத்திக் கொடுப் பாள். இராக்காலத்தில் நன்ருய் விளக்கை பிரகாசிக்கச்செய்து அதைப்பார்த்து மாலுமிகள் கற்பாறையில் மோதி அபாயமடை யாமல் ஜாக்கிரதையாய் இருப்பார்கள்.

புயலடித்த ஒருநாள் இரவில் கிரெஸ் அழுகைக் குரலை கேட்டு எழுந்தால். அழுகைக் குரல் கடலிலிருந்து வந்தது. அவளுக்கு ஏதோ ஒரு கப்பல் அபாயத்திலிருக்கிறது என்று தெரிந்தது. அவள் தகப்பனுரை எழுப்பினுள். இருட்டில் ஒன்றும் தெரியவில்லை. பொழுது விடிந்ததும் கொஞ்சதூரத்தில்

ஒரு கப்பல் பாறையில் மோதி உடைந்து போனதையும், சில ஜனங்கள் பாய்மரங்களில் தொத்திக்கொண்டிருப்பதையும் கண்டாள். கிரேஸ் உடனே அவர்களைக் காப்பாற்றவேண்டும் என்றாள். தகப்பனார் சற்று தயங்கினார். ஏனென்றால் காற்று மூர்க்கமாய் அடித்தது. தன் படகு போகும்போது அலைகள் மோதுவதால் கவுந்துவிடுமோ என்று பயந்தார். அவர்களைக் காப்பாற்றாமல் இருக்க மனம் வரவில்லை. கிரேஸ் உடனே ஒரு படகிலேறி துடுப்பை எடுத்து பிரயாணத்திற்கு தயாரானாள். தகப்பனார் தைரியமுள்ள தன் பெண்ணை தனியே அனுப்பாமல் தானும் பின் சென்றார். படகை செலுத்திக் கொண்டு போனார்கள்.

கடல் கொந்தளிப்பாய் இருக்கும் காலத்தில் படகை செலுத்துவது சிரமஸாத்தியம். சில சமயங்களில் முழுகிப் போனது போலாகிவிட்டது. கடைசியாய் அந்த இடத்தை அடைந்தார்கள். வில்லியம் டார்லிங் பாறையில் இறங்கி அதி ஜாக்கிரதையாய் ஏறக்குறைய பாதி உயிர்போன அந்த ஜனங்களை தன் படகில் ஏற்றிக்கொண்டான். திரும்பவும் தன் இருப்பிடத்திற்கு அவர்களைக் கொண்டுவந்து சேர்த்தான். கிரேஸ் அவர்களுக்கு வேண்டிய சிகிச்சைகள் செய்து, புயலடங்கி ஊர் போம்வரையில் அவர்களை அவ்விடத்திலேயே போஷித்தாள்.

## ஆங்கிலக் கொடியைப்பற்றிய பாடம்.

**ஆரம்பம்.**—ஆங்கிலக்கொடியை வகுப்பில் தொங்கவிடுகிறது. உபாத்தியாயர் இது யாருடைய கொடி என்று பிள்ளைகளைக் கேட்கிறது. இது தங்கள் கொடி என்பதை அவர்கள் மனதில் பதியச்செய்கிறது. இந்த சந்தர்ப்பத்தில் ஆங்கில ராஜ்ய மிருக்குமிடங்களி லெல்லாம் இந்தக்கொடி பறக்கிறது என்பதைச் சொல்லவும். அப்படிப்பட்ட தேசங்களுள் சில அதிக உஷ்ணமுள்ளவை, சில அதிக குளிர்ச்சியுள்ளவை, சில சிறியவை, சில பெரியவை. ஆனால் எங்கெந்த ராஜ்யத்திற்கு ஐந்தாம் ஜார்ஜ் ராஜாவோ அங்கே எல்லாம் இந்தக்கொடி பறக்கிறது.

**யூனியன்ஜாக் விவரணம்.**—ஜாக் என்பது ஜேம்ஸ் என்னும் பதத்திலிருந்து வந்தது. இங்கிலாந்துக்கு இராஜாவா

யிருந்த ஜேம்ஸ் தான் ஸ்காட்லாந்து, இங்கிலாந்து இரண்டுக்கும் இராஜாவானபோது இரண்டு கொடியையும் ஒன்று சேர்த்தார். கொடியின் வர்ணம் சிவப்பு, வெண்மை, நீலம்.



யூனியன் ஜாக்.

**யூனியன் ஜாக் பரிசோதித்தல்.**—கொடியை நன்றாய் பிரித்துப் பார். வெண்மைமேல் ஒரு சிவப்பு கிருஸும், நீலத்தின் மேல் குறுக்கான ஒரு வெண்மை கிருஸும், வெண்மையின் மேல் ஒரு சிவப்பு குறுக்கு கிருஸும் காணலாம்.

இங்கிலாந்துக்கு ஸெயின்ட்ஜார்ஜ் ரக்ஷகன், ஸ்காட்லாண்டுக்கு ஸெயின்ட் ஆன்ட்ரு, அயர்லாண்டுக்கு ஸெயின்ட் பாட்ரிக் ரக்ஷகர்கள்.



ஸெயின்ட் ஆண்டிரூ.



ஸெயின்ட் பாடிரிக்.



ஸெயின்ட் ஜார்ஜ்.



இங்கிலாந்து, ஸ்காட்லாண்டு சேர்ந்த கொடி.

ஸெயின்ட் ஜார்ஜுக்கு கொடி வெண்மைமேல் சிவப்பு கிருஸ் உள்ளது. ஸெயின்ட் ஆன்ட்ருக்கொடி நீலத்தின்மேல் குறுக்கான வெண்மை கிருஸ். ஸெயின்ட் பாட்ரிக்கொடி வெண்மையின்மீது சிவப்பு குறுக்கு கிருஸ். இந்த மூன்று தேசங்களும் ஒன்று சேர்ந்தபோது தங்கள் கொடிகளையும் ஒன்று சேர்த்தார்கள். அதுதான் "யூனியன் ஜாக்." ஆங்கில ராஜ்யத்தின் துவஜமும் நாம் பெருமை பாராட்டும் கொடியும் அதுதான். இந்தக் கொடியை அனேக சண்டைகளில் எப்படி காப்பாற்றினர்கள் என்பதைப்பற்றி அனேக கதைகளை குழந்தைகளுக்குச் சொல்லலாம்.



## அத்தியாயம் XII.

## இங்கிலீஷ் கற்பித்தல்.

குழந்தைகள் சுயபாஷையை தாட்டியாய் பேசவும் வாசிக்கவும் திறமுள்ளவர்களாகும் வரையில் சுமாராய் திருத்தமாய் எழுதத்தெரிகிற வரையிலும்கூட அன்ய பாஷை ஒன்றையும் அவர்கட்கு கற்பிக்கக்கூடாது. எட்டு வயதானதும் அதாவது 3 வருஷம் கிண்டர்கார்டனில் படித்து கடைசி வருஷம் அங்கிருக்கும்போது இங்கிலீஷ் கற்பிக்க ஆரம்பிக்கலாம். அவன் மேல்வகுப்புக்கு போகும்போது உபாத்தியாயர் இந்த அஸ்திபாரத்தைக் கொண்டு அதிகம் கற்பிக்கமுடியும்.

எழுத்துகளை முதலில் கற்பிக்கக்கூடாது என்பதை சொல்வது அனுவசிகம். அங்குமிங்கும் குழந்தைகளுக்கு எவ்விதத்திலும் பிரயோஜனமில்லாத சிற்சில வார்த்தைகளை சொல்லிக் கொடுப்பதும் கூடாது. இப்படிச் செய்வது கூடாது என்பது தெரியாதாரில்லை. சுயபாஷையில் முழு வாக்கியத்தில் குழந்தைகள் பேச வழக்கப்பட்டிருக்கிறார்கள். வாக்கியங்களில் பேசி இங்கிலீஷை ஆரம்பிக்கவேண்டும். உபாத்தியாயர் அந்த வாக்கியத்தின் ஒவ்வொரு வார்த்தையையும் அவஸரப் படாமலும், உரத்தும், தெளிவாகவும் உச்சரிக்கவேண்டும். ஒரு பொருளை காண்பித்து ஒரே கேள்வியை திரும்பத் திரும்ப கேட்கவேண்டும். உபாத்தியாயருக்கு இருக்கும் கஷ்ட

மென்னவென்ருல் புது ஒலிகளை பிள்ளைகளுக்கு பரிச்சயம் செய்விக்க வேண்டியிருக்கிறது. இந்த மாதிரியான ஒலிகள் அவர்களுக்குப் பழக்கமில்லை. ஏனென்ருல் சுய பாஷையில் அவ்விதமான ஒலிகளில்லை. சில வாக்கியங்கள் சொல்லிக் கொண்டிருக்கும்போது மேற்கூறிய அநேக ஒலிகளை அறிந்து கொள்ளலாம். ஆனல் உபாத்தியாயர் ஒவ்வொரு ஒலியையும் வெகு தெளிவாய் உச்சரிக்க வேண்டும். அப்போது தான் பிள்ளைகள் வெவ்வேறு ஒலிகளை கவனிக்க முடியும். குழந்தைகள் உபாத்தியாயர் முகத்தை கவனித்து, அவர் எப்படி எந்த ஒலிகளை செய்கிருர் என்றும் அவர் வாயை எப்படி மூடிக்கொள்கிருரென்றும் நன்ருய் கவனித்துப் பார்க்க வேண்டும். வார்த்தைகள் அல்லாமல் ஒலியில்கூட பிள்ளைகளுக்கு அப்பியாசம் கொடுக்கவேண்டும். மெய்யெழுத்து ஒலிகளையோ வென்ருல் வார்த்தையின் கடைசியில் அவ்வக்ஷர ஒலிகளை நன்ருய் அழுத்திச் சொல்லவேண்டும். இந்துப் பிள்ளைகளுள் வார்த்தையை தெளிவாய் உச்சரிக்க ஆரம்பித்து கடைசியில் அக்ஷரத்தை விழுங்கிவிடுகிற வழக்கம் இருக்கிறது. இதை நிவர்த்திக்க கடைசி எழுத்தை வற்புறுத்தலாம். (உ-ம்.) Cu*p*, boar*d*, wen*t*, ma*t*, etc.

## பாடம் நடத்தும் முறை.

1. உற்று நோக்குவதனல் அதாவது ஒரு பொருளை சுட்டிக் காட்டி அல்லது ஒரு தொழிலைச் செய்துகொண்டு அவர்கள் என்னசெய்துகொண் டிருக்கிருர்கள் என்று சொல்லும்படி செய்தல் உதாரணமாக உபாத்தியாயர் மேஜையைத் தொட்டுச் சொல்லுகிருர். "This is a table". பிறகு What is this? என்று பிள்ளைகளைக் கேட்கிருர். உத்தரம். "That is a table" பிறகு பிள்ளைகளை இந்தக் கேள்வியைப் பலவிதமாய்க் கேட்கிருர் (உ-ம்.) Point to the table. What are you doing? What am I pointing to? What are you pointing to?

பிறகு கேள்வி "Where is the table?" உத்தரம் The table is on the floor. What is on the floor? Point to the floor. What am I doing? etc.

இம்மாதிரியே அறையிலுள்ள ஸாமான்களின் பெயர்களைச் சொல்லி, பிள்ளைகள் அவற்றைப் பற்றி பேசும்படி செய்ய லாம். வாக்கியங்களை மொழி பெயர்ப்பதை, அடியோடு ஆரம்பத்தில், தள்ளிவிட வேண்டுவது அனுவசிகம். சிற்சில உத்தரவுகள் முதலியவற்றை தமிழில் சொல்லி அவற்றை இங்கிலீஷில் மொழிபெயர்த்துக் காட்டலாம். வேறு விதமாய் முடியாமற்போனால் இப்படி செய்யவேண்டியது. ஆனால் இப்படி செய்வது ரொம்ப மட்டாயிருக்கவேண்டும்.

2. படங்கள் அல்லது படங்களைக்காட்டி பாஷையில் பயிற்றல். படத்தை சுவரில் தொங்கவிடவும். தகுந்த படமில்லாமற்போனால் உபாத்தியாயரே எளிதில் ஒன்றை பலகையில் வரையலாம் அல்லது சுண்ணும்புக் கட்டியால் பழுப்புக் காகிதத்தில் எழுதலாம். படத்திலிருப்பது என்ன? படத்திலிருக்கும் வஸ்துக்களின் உபயோகம் என்ன? என்று பிள்ளைகளை சொல்லச் செய்யலாம்

உதாரணமாக ஸிண்டரெல்லா படத்தில் பின்வரும் கேள்விகளை கேட்கலாம்

(1) *Question.*—What is the use of the broom ?
*Answer.*—The broom is used to sweep the floor.

(2) *Q.*—What is the use of the pail ?
*A*—The pail is used to cook the food.

(3) *Q.*—What work does the coachman do ?
*A.*—The coachman drives the horses.

கேள்விகளைபிள்ளைகளைக் கேட்பது போலவும் கேட்க வேண்டும்.

உதாரணம்.

Can you sweep the floor ?
What kind of broom do you use ?
What kind of pail do you use ?
What is the girl wearing ?
What are you wearing ?
What am I wearing ?

பலவாக்கியங்களைச் சொல்வதால் அர்த்தம் பிள்ளைகளுக்கு அநேகமாய் நன்றாய் விளங்கிவிடும். தவிர முன்னேயே

பழக்கமுள்ள பல வார்த்தைகளை அடிக்கடி சொல்லக் கேட்ப தால் பிரயோஜனமுண்டு. காட்டும் படமானது கதை விளக் கப் பாடமானால் பிள்ளைகள் படத்தைப்பார்த்து பழக்கமான பிறகு கதையை இங்கிலீஷில் எளிய நடையில் சொல்லி பிறகு பிள்ளைகளைக் கேள்வி கேட்கலாம். (உ-ம்.) ஸிண்டரெல்லா கதையை எடுத்துக் கொள்வோம். பிள்ளைகளுக்கு அது பழக்கமானது. கதை தமிழில் தெரியும். படத்தில் இங்கி லீஷில் சொல்லி யிருப்பதெல்லாம் அவர்களுக்குத் தெரியு மாதலால் பின்வருமாறு அவர்கட்குச் சொல்லலாம்:—

Cinderella was a poor little girl, who had no mother; but she had two sisters. These sisters made her cook the food and sweep the floor. One day the Prince gave a tea-party and asked every one to attend to it. But Cinderella could not go to it. She began to cry. While she was crying in the kitchen, an old woman opened the door and came into the room. She then asked Cinderella why she was crying. Cinderella said she was crying because she could not go to the tea-party. So the old woman took a pumpkin and touched it with her magic-stick, and it turned into a carriage. She then took two small rats, and touched them with her magic-stick, and they turned into two horses. Then she touched Cinderella's clothes and they turned into beautiful clothes. She told Cinderella that she must come home again at twelve o'clock. Then Cinderella went to the tea-party and was very happy.

அப்புறம் குழந்தைகளை கதை விஷயமாய் பின்வருமாறு கேள்வி கேட்கலாம். Where did Cinderella go to ? How did she go ? Who gave Cinderella the carriage? Where did the old woman get the Carriage from? etc. பாடத்தை மாற்றுவதற்குள் பிள்ளைகள் அந்தக் கதையை எளிதாய் திருத்தமான இங்கிலீஷில் சொல்ல திறமுள்ளவர்களாவார்கள். ஒரு கதையை ஒரு மாஸத்துக்குள் நடத்தக்கூடாது.

குறைந்தது முதல் மூன்றுமாஸம் வரையில் எழுதுவதே கூடாது. வேண்டியவரையில் பேச மாத்திரம் பிள்ளைக ளுக்கு அவகாசம் கொடுக்கவேண்டும். எழுத ஆரம்பிக்கும்

போது உபாத்தியாயர் வார்த்தைகளை வெகு ஜாக்கிரதையாய் பலகையில் எழுதவேண்டும். பிள்ளைகள் தங்கள் கைப்புத்தகத்தில் இரண்டு கோட்டுக்கு நடுவில், பலகையிலுள்ள வார்த்தைகளை பார்த்தெழுதிக் கொள்ளவேண்டும்.

இப்படி இங்கிலீஷ் கற்பித்தால் இலக்கணம் கவனிக்கப்படவில்லை என்று சிலர் நினைக்கிறார்கள். இது அறியாமையால்தான். உள்ளபடி பிள்ளைகள் பேசும்போதெல்லாம் இலக்கணம் கற்றுக்கொள்கிறார்கள். உதாரணமாக, இது ஒருமை, இது பன்மை என்று வார்த்தைகள் கற்கவில்லை. ஆனால் "One man *and* ten men; One boy *and* three boys; One child *and* two children என்று பேசவேண்டுமென்று கற்றுக்கொள்ளுகிறார்கள். கேள்வி 'What are these'? உத்தரம் 'These are , etc. இம்மாதிரியே நிகழ்காலம், இறந்தகாலம், எதிர்காலம் முதலியவற்றை அறிகிறான். (உ-ம்.) To-day is Sunday, Tomorrow will be Tuesday, Yesterday was Sunday etc.

இவ்விதமாய் வாரம், மாதம், தேதி: ஒன்றிலிருந்து நூறு வரையில் எண்ணுதல் இவற்றை கற்பிக்கலாம். மணி என்ன? என்பதை இங்கிலீஷில் சொல்லக் கற்பார்கள். இந்த ஸந்தர்ப்பத்தில் இங்கிலீஷில் பல ரூபமான வந்தன கிரமங்களைச் சொல்லிக்கொடுக்கலாம் ஒருநாளை, "Morning, Afternoon, Evening, Night" என்று பிரித்திருக்கிறது 'Morning என்பது' விடிந்து நடுப்பகல் வரையில், அது முதல் 5 மணிவரையில் 'After noon' என்னப்படும். 5 மணி முதல் 8 அல்லது 9 மணி வரையில் Evening என்னப்படும். அப்புறம் 'Night' ஆகையால்ஒருவரை பிற்பகலில் பார்த்தால் 'Good morning' என்று சொல்லக்கூடாது; ஆனால் 'Good afternoon' என்று சொல்லவும். தவிர எதையாவது பெற்றுக்கொள்ளும்போது 'Thank you' என்று பிள்ளைகளைச் சொல்லச் செய்யவேண்டும். உபாத்தியாயரும் எப்போதும் அனுஷ்டித்துக் காண்பிக்கவேண்டும். இவ்விஷயம் முடிந்ததும் ஒவ்வொருநாளும் சில நிமிஷங்கள் பிள்ளைகளையே ஒருவரை யொருவர் அன்று படித்த பாடத்தில் கேள்விகளை கேட்கும்படி செய்யலாம்.

இங்கிலீஷ்பாடம் சொல்லிக்கொடுக்க பருவங்கள் சம்பந்தமான விஷயங்களை எடுத்துக்கொள்ளலாம். If the day

is very wet; What kind of day is to-day? Did it rain yesterday? Did the sun shine yesterday? Is it a cold day to-day? Is it a hot day to-day? When are the cool months? When are the hot months? etc. என்று பிள்ளைகளைக் கேட்கலாம்.

மேற்சொன்ன பாடங்கள் டீசர்ஸ் காலேஜில் நடத்தினதில் நன்றாய் நடைபெற்றிருக்கின்றன. உபாத்தியாயர் வெகு சிரமப்பட்டு பாடத்தை தயார் பண்ணவேண்டும். வெகு பொறுமைவேண்டும். இந்தசிரமத்திற்கெல்லாம்பிள்ளைகளுக்கு இங்கிலீஷ் பாடமென்றால் கொண்டாட்ட மிருப்பதோடு, இங்கிலீஷ் நன்றாய்ப்பேசத் திறமுள்ளவர்களாவதை பார்த்தால், தகுந்த பிரதிபலன் கிடைத்ததாக எண்ணுவதற்காகும்.

## அத்தியாயம் XIII.

### நாடகரூபமாய் கற்பிக்கும் முறை.

இவ்விடத்தில் எல்லா பாடங்களையும் இந்த முறையால் எப்படி கற்பிக்கலாம் என்பதை விவரித்துச் சொல்ல நான் உத்தேசிக்க வில்லை. ஆனால் அதன் குணாகுணங்களைப் பற்றி சற்று எடுத்துச் சொல்லுகிறேன். நடித்துக் காட்டுவதில் அதிக ஊக்கமுள்ளவர்கள் அதை அதிக மும்முரமாய் நடத்தாம லிருக்கும்படியும், அந்த முறையை நன்றாய் அறிந்தாலல்லது அதை துர்வினியோகப் படுத்துவதற்கு எளிதில் நேர்ந்துவிடும், காலம் வீணில் செலவழியும் என்பதைப்பற்றி நான் இங்கே சொல்லுகிறேன்.

முதலில் அந்த முறை பிள்ளைகளுக்கு முற்றிலும் இயற்கைதான். விளையாடும்போது குழந்தைகளை கவனி. சிப்பாய்கள் விளையாட்டை விளையாட அவர்கள் விரும்புகிறார்கள். அவர்கள் சிறு சண்டைகள் உண்மையானதாகத்தா னிருக்கிறது. போலீஸ்காரனாக நடிக்கிறவன் உண்மையாக அமைதிக்கு பொறுப்புக்காரன். ஒரு பெட்டி நிசமான நீராவி இயந்திரமாகிறது. இவ்விதமே மற்றதும். குழந்தைகள் செய்யும் ஒவ்வொரு காரியமும் இயற்கையாகவும், உண்மையாகவும் இருப்பது என்பதை எடுத்துக்காட்டும் உதாரணங்களுக்கு கணக்

கில்லை. இப்படியே தான் பள்ளிக்கூடத்தில் நடித்துக்காட்டச் சொல்லும்போது அவர்கள் செய்வது அப்படியேதானிருப்பதாக நினைக்கிறார்கள். வாய்ப்பாடம் சொல்லும்போது அவர்களுக்குண்டாகும் மனோபாவனை இப்போது நிசமாய் விடுகிறது. ரொம்ப திறமாய் சொல்லும் வாய்ப்பாடங்களும் கொஞ்சநேரத்திற்கு பிறகு அலுப்பை உண்டுபண்ணுகிறது. ஆனால் நடித்துக்காட்டுதல் பாடம் நடக்கும் காலத்தில் அவர்கள் கவனத்தை அதிகரிக்கச் செய்கிறது. இது உபாத்தியாயருக்கும் பிள்ளைகளுக்கும் அதிக சிரத்தையை உண்டு பண்ணுகிறது. குழந்தைகள் உபாத்தியாயர் சொல்வதை அதிக ஆவலுடன் உற்றுக் கேட்பதை நாம் அடிக்கடி பார்த்திருக்கிறோம். உபாத்தியாயர் தெளிவாய்ச்சொல்லும் விஷயங்களைக் கேட்க குழந்தைகளுக்கு ஆசை. அவர்களை திருப்பிச் சொல்ல கூப்பிட்ட மாத்திரத்தில் அவர்களுக்கு இருந்த உற்சாகம் போய் விடுகிறது. நடித்துக்காட்டினால் சொன்னதை அடிக்கடி திருப்பிச்சொல்வது வேண்டியதில்லை. இது வாய்மொழிப் பாடத்திற்கு மிகவும் சாதகமாயிருக்கும்.

இந்த முறையினால் குழந்தைகள் தாங்கள் செய்வதைக் கொண்டே விஷயங்கள் கற்கிறார்கள். சொல்லப்போனால், எல்லா அப்பியாஸ வேலையும் ஒருவாறு நடித்துகாட்டுதலாக வந்துசேரும். தற்காலத்தில் வழங்கும் அபிப்பிராயப் பிரகாரம் உபாத்தியாயர், பிள்ளைகள் அவரவர்கள் ஸ்தானத்தை அடைகிறார்கள். குழந்தை காரியம் செய்பவனாகவும், உபாத்தியாயர் வழிகாட்டியாகவும் ஆகிறார்கள்

**இந்த முறையின் நன்மைகள்**:—குழந்தை வேறொருவனாக பாவித்துக் கொள்ளுகிறான். இதைக்காட்டிலும் சிரேஷ்டமான சிக்ஷண உபகரணம் இருக்குமென்று தோன்றவில்லை.

குழந்தைக்கு ஒரு நல்ல மஹானுடைய நற்செய்கையை அந்தமஹான் செய்தமாதிரி நேரில்காட்டினால் மனதிற்பட்ட பாவம் வெகு உறுதியாகிறது. ஆனால் பிள்ளைகளே அந்த மஹான் மாதிரி தங்களைபாவித்து அவர் மாதிரியே பேசவும் செய்யவும் ஆரம்பித்தால் மனதிற்பட்ட பாவம் எவ்வளவோ கெட்டியாய் உறுதிப்பட்டுவிடும். புத்திசாலித்தனமாய் ஏற்பாடுகள் செய்தால் வகுப்பிலுள்ள ஒவ்வொருவருக்கும் எதா

வது ஒன்று செய்யும்படி வரும். குழந்தை தானாகவே புதிதாய் ஒன்றைகண்டு செய்யும் சக்தியானது விருத்தியாகிறது. கடைசியாய் நாடகரூபமாய் நடித்துகாட்டல் ஸன்மார்க்கத்தில் பிள்ளைகளை பயிற்றுவதற்கு ஒரு உபாயமாகும். காரியப் பொறுப்பு, தராதரம்அறிதல், உசிதமறிதல், அதிகாரத்திற்கு அடங்கியிருத்தல், இவ்விதமான குணங்கள் குழந்தைகளுக்கு உண்டாகின்றன. மற்றவர்கள் விஷயங்களில் ஒருவிதமான சிரத்தையை உண்டுபண்ணி சுயநயத்தைக் குறைக்கிறது. இவை பாடங்களை நாடகரூபமாக நடித்துக்காட்டுவதன் பிரயோஜனங்களில் சில.

**இதன் கேடுதல்கள்.**—எந்தப் பையன் சுறு சுறுப்பாய் முன் வருகிறானோ அவனைத்தான் உபாத்தியாயர் தேர்ந்தெடுக்கிறார். மற்றப் பிள்ளைகளை அலக்ஷியம் செய்துவிடுவார். அந்தப் பிள்ளைகள் அதைரியமடைந்து சஞ்சலமுடையவர்க ளாகிறார்கள். இது விஷயத்தில் உபாத்தியாயர் மிகவும் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். நாடகரூபமாய் நடித்துப் போதிப்பதை அடிக்கடி செய்கிறார்கள். ஏனென்றால் சொல்ப நேரத்தில் அதிகம் சொல்லிக்கொடுக்கப்படுகிறது. உபாத்தியாயருக்கும் அதிக தொந்திரவுமில்லை. இதையும் ஜாக்கிரதையாய் நிறுத்த வேண்டும். ஒரு மாதத்தில் இரண்டு தடவைக்குமேல் இம்முறையை உபயோகிக்கலாகாது என்று ஒரு திட்டம் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் குழந்தைகளுக்கு அதிலுள்ள உற்சாகம் வரவர குறைந்துவிடும்.



## அத்தியாயம் XIV.

### பிரோபேலின் போதுக் கோட்பாடுகள்.

சிக்ஷணவிஷயமாய் பிரோபெல்கொண்ட கோட்பாடுகளை மூன்று தலையின்கீழ் சுருக்கிச் சொல்லலாம்.

(1) சுயேச்சையாய் வளரவிடுதல்
(2) வளர்வதற்கான வேலை
(3) வளர்வதெல்லாம் ஒன்றுபட்டது.

1. இயற்கையில் ஒவ்வொன்றும் தன் போக்காகவும் நிர்பந்தமில்லாமலும், செயற்கை ஸம்பந்தமில்லாமலும் வேலை

செய்கிறது. ஆகையால் இயற்கையில் தனிப்போக்காய் வளர்வதற்கு அவகாசமுண்டு. இப்படி கிரமமாய் வளர்வதற்கு இடையூறு ஏற்படாமலும், அவைகள் வளர்வதற்குள்ள அவசியமான ஏதுக்களிருந்தாலும் தான் ஸ்தாவரங்கள் தன்போக்காய் வளர்வதற்கு ஸாத்தியம். அவற்றிற்கு பூரணவளர்ச்சி வேண்டுமானல் அவற்றை தகுந்தபடி பார்த்து பாதுகாக்கவேண்டும். ஸ்தாவரஜங்கமுமான ஸகல ஜீவராசிகளுடைய வளர்ச்சிக்கும் அடுத்தவையான மாறுநியாயங்களை, ஜீவராசியில் உந்நதமாயிருக்கும் மனுஷ்யனுடைய இயற்கை விஷயமாயும் உபயோகிதது் பார்த்தால்தான் பிரோபெல் சொல்லும்பிரகாரம் மனுஷ்யஜாதியின் சுயேச்சையான வளர்ச்சிக்கு சூக்ஷமம் ஒன்று அகப்படும்.

ஒழுங்கும் நன்னெறியும், எங்கே ஓங்கி உலாவுகிறதோ, எங்கே அன்பும் கட்டுக்கடங்கி நிற்றலும் பிரதானகாரியமாக நிற்கின்றனவோ அங்கேதான் மனுஷ்யஜீவனுக்கு சுயேச்சையான வளர்ச்சியைப்பற்றிப் பேசவழியுண்டு. மனுஷ்யன் விஷயமான இயற்கையின் சட்டங்களுக்கு எதெது விரோதமா யிருக்கின்றதோ அதெல்லாம் அவன் வளர்ச்சிக்கு இடையூறாகும். நன்னெறி முறையாய் நியாயத்திற்கு அடங்கினவனுவது மனுஷ்யனடையத்தக்க சித்தி அல்லது பேறாகும். இப்பேறு அடைய நன்னெறிமுறையாய் நியாயத்திற்குட்பட்ட சிக்ஷணம் இன்றியமையாதது. வளர்ச்சியாவது மோக்ஷம் அல்லது விடுதலையாகும். காடாய் ஆத்மகுணம் உள்ளிடாத பிரகிருதியின் விலங்கிலிருந்து விடுதலையாகும்; கை கால்கள், ஐம்பொறிகள் இவ்வற்றின் விடுதலையாகும், மனதின்சக்தி, கிரியை முதலியவற்றின் விடுதலையாகும். இதுதான் ஸ்வாதந்தரியத்துக்கு ஏதுவாகும். ஆனல் வளர்ச்சிக்குவேண்டிய பயிற்சிவகைகளில்லாமல் ஸ்வாதந்தரியம் இருந்து போதாது.

2. பிரோபெல் சொல்லுகிறுர்:—“மனுஷ்யன் தன் பிரயத்தனத்தாலேயே தன்னிலிருந்து மேல் கிளம்பி படிப்படியாய் தன்னறிவில் விருத்தியடைவது அவனுடைய நல்விதி அதாவது பேறு ஆகும். இந்தக்காரணம் பற்றி ஒவ்வொரு குழந்தையும் தன் பிரயாசையால், தானேசெய்யும் தன் வேலையால்தான் மனுஷ்ய இயற்கைக்கு இசைந்தவாறு வளர்ந்து தன் நிஜஸ்வரூபத்தை அறிந்தடையக்கூடும். பிரயத்தனம் பண்ணுகையி

லும், சிரமப்படுகையிலும் குழந்தைகளை அவரவர்களுக்கே விட்டுவிட்டால், இயற்கையாய் அவர்கள் வரவேண்டிய பதவிக்கு வெகுதூரம் கீழேதான் அவர்கள் நிற்பார்கள். ஆகையால் அவர்களை உதவிசெய்து நடத்துவதற்கு சிக்ஷணம் வரவேண்டும். கட்டும், கண்காணிப்பும் ஏற்படுத்தவேண்டும். இல்லாவிட்டால் மனப்போன போக்காகி, கட்டுக்கடங்காத விபரீதங்கள் மேலோங்கிவிடும்” பிரோபெல் கிண்டர்கார்டன் முறையில் புதிது என்று சொல்லக்கூடியது என்னவெனில், இயற்கையில் சட்டங்களுக்கு இணங்கியவிதமாய் தேஹம், ஆத்மா, மனது, இச்சை, இன்பதுன்ப உணர்ச்சி, புத்தி, இவற்றை ஒரு கட்டுக்குட்படுத்தி விருத்திக்குகொண்டு வருவதற்கு தக்க உபாயங்களைத் தேடி உபதேசித்தார் என்பதே. பிள்ளைகளுக்கெதிரில் அவர் வைக்கும் வஸ்துக்களனைத்தும், அவர்கள் விளையாட்டு சாமான்கள்யாவும் அவர்களுக்கு பிரயத்தனம் செய்வதில் ஸஹஜமாயுள்ள உற்சாகத்திற்கு இணங்கும்படி ஏற்படுத்தப் பட்டிருக்கிறது.

செயல் என்பது அறிவை உபயோகிப்பதுதான். மனதிலுள்ள பாவங்களை காரிய ரூபமாய் ஆக்கவேண்டுமென்றுதான் தற்காலத்தில் கூக்குரலிட்டுக் கேட்கும் விஷயம். பிள்ளைகளைப் பயிற்றுவிப்பதும் அதற்குத்தான். இதைக் கருத்திற் கொண்டுதான் ஆரம்பதசைகளில் ஆடும் ஆட்டங்களிலும், செய்தல், ஸ்வகற்பனையாய் ஒன்றை ஆக்கல் இவ்விரண்டையும் பிள்ளைகள் கற்கவேண்டுமென்பது பிரோபெல் கோட்பாடு. வஸ்துவின் ஆலம்பமில்லாத படிப்புக்குமுன் தொழில், வேலை இவைகளில் முயற்சிவேண்டும். பிற்காலத்தில் ஞானம் சம்பாதிப்பதற்கு இவற்றை உபாயமாக்கலாம் என்கிறார். சீலம் உறுதியாய் பெருமை யடைவதற்கு இச்சாசக்தியையும் கிரியாசக்தியையும், மனது திடத்தையும், கடமை இது இதைச்செய்யவேண்டும் என்னும் உணர்வையும், உற்சாகத்தினின்று கிளப்புவது ஆவசியமாகும். இப்படி கிளம்புவதானகாரியம் கிண்டர்கார்டனில் களிப்பும் திருப்தியும் சூழ்ந்திருக்க ஒவ்வொருவரும் எடுத்துக்கொள்ளும் பிரயத்தன மூலமாய் செய்யப்படுகிறது.

3. ஜீவராசியின் விருத்தியெல்லாம் தொடர்ச்சியாய் இருக்கும். இடையறுமல் படிப்படியாய் நகர்ந்துகொண்டு ஒன்றாக்

கொன்று இருகப்பிணைந்து ஒரு மொத்தமாகும். இயற்கையில் இத்தொடர்ச்சி, இப்பிணைப்பு தன்னை அறியாமலே இருக்கிறது. மனுஷ்யன் விஷயத்திலோவென்றால், இது வேணுமென்று தன்னறிவோடு செய்யும் காரியத்தின் பலனாக இருக்கும். ஆகையால் மனுஷ்ய ஜாதிக்கு அர்ஹமாயிருக்க வேண்டுமானால் சிக்ஷணமானது தொடர்ந்திருக்க வேண்டும். ஆரம்பத்திலிருக்கிற ஒரு திட்டத்தின்படியே நடைபெறவேண்டும். ஆனால் இயற்கையான விருத்தி கிரமத்துக்கு இணங்கியபடி சிறுகச் சிறுக மேல்மேல் படிப்படியாக போகவேண்டுவது முறை.



# அத்தியாயம் XV.

## வகுப்பில் ஒழுங்குமுறை

தற்காலத்தில் பள்ளிக்கூடத்தில் இரைச்ச லிருப்பதைப் பற்றி எத்தனையோ சொல்லிக்கொள்ளப்படுகிறது. அந்த விஷயத்தைப்பற்றிய அபிப்பிராயங்கள் உபாத்தியாயர்கள் எத்தனை பேரோ அத்தனை விதங்களாயிருப்பதாகத் தோன்றுகிறது. ஒவ்வொரு பக்ஷத்தாரும் அநுகூல பிரதிகூல வாதங்களை வெகு தீவிரத்தோடே எடுத்துச் சொல்லுகிறார்கள்.

ஒரு பக்ஷத்து தீவிரஸ்தர் சொல்லுகிறார். குழந்தைகளை எந்தக் கட்டுப்பாட்டுக்குள் வைப்பதும் தவறு. சும்மா இருப்பது குழந்தைகள் சுபாவமல்ல. அப்படி அவர்களை சும்மாயிருக்கச் செய்வதானால் தீராக்கெடுதலை உண்டுபண்ணுகிறோம். பள்ளிக்கூடம் ஒரு வேலை செய்யுமிடம். அது சமாதி பூமியல்ல. தொழிற்சாலைகளைப் பாருங்கள். இயந்திரங்கள் வேலைசெய்கின்றன. லோகத்துக்கு வேண்டிய வேலையெல்லாம் அங்கே நடக்கிறது. அங்கே சப்தமில்லாமையைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை. நாம் குழந்தைகளை சும்மா இருக்கச் செய்வதானது அவர்கள் ஸஹஜகுணங்களை அமுக்கி அவர்களை வேலைசெய்யாத யந்திரமாக செய்துவிடுவதாகும். சுபாவமாய் அமைதியாயிருக்கும் குழந்தை, ஆரோக்கியமற்ற குழந்தையாயாவது, அல்லது மரித்த குழந்தையாயாவது இருத்தல் வேண்டும். குழந்தையின் ஆரோக்கியம், ஆனந்தம், ஏராள

மான ஸத்து அல்லது வீர்யமுடைமை, இவற்றிற்குப் போக்கு சப்தமேயாகும்.

எதிர்கக்ஷியில் தீவரஸ்தர்கள் சொல்லுகிறார்கள்:—இரைச்சலுள்ள அறையில் நாம் ஒருவேலையும் செய்யமுடியாது. அனுவசியமான இரைச்சல் நமது வேலைகளுக்குத் தடை. குழந்தைகள், உபாத்தியாயர் இவர்களுடைய நரம்புகளை அது அரம்போட்டு அறுப்பதுபோலிருக்கிறது. இரைச்சலில்லாத இடத்தைவிட இரைச்சலுள்ள இடத்தில் நரம்புகள் பலஹீனமடைந்து களைப்படைவது அதிகம். வரம்புகடந்த இக்காலங்களில் பிள்ளைகள் ஒரு கட்டுக் கடங்குவ தில்லை. இவ்விஷயத்தில்எவ்வளவுகண்டிப்பான ஒழுங்குமுறையும் குழந்தைகளுக்குக் கெடுதல் செய்யாது. சுருக்கிச் சொல்லின் இக்காலத்தில் உபாத்தியாயர் வெகு சிரமப்பட்டு வேலைசெய்ய வேண்டியிருக்கிறது. ஆகையால் குழந்தைகளுக்கு அவ்வளவு நலமில்லாமற் போனாலும், கண்டிப்பு முறையால் தங்கள் நாடிக்கு வரும் பலக்குறைவுக்கு பரிகாரம் தேடிக்கொள்ள வேண்டியது.

யோசிக்குங்கால் இருபக்ஷத்திலும் வெகு உண்மை யிருப்பதாகத் தோன்றுகிறது. இருக்கிற உபத்திரவமெல்லாம் கூடி இருபக்ஷத்தாரும், நிதானமில்லாமல் ஆத்திர படுகிறார்கள். ஒழுங்குமுறையின் ரஹஸ்யம் வேலை. அவ்வேலையை விளையாட்டில் செய்தாலும் சரிதான். வேலையாயிருக்கும் பிள்ளை நல்ல பிள்ளை. முற்காலத்து கண்டிப்பான ஒழுங்குமுறைக்கும் தற்காலத்தில் பாலர் பள்ளிக்கூடத்தில் வழங்கும் ஒழுங்குமுறைக்கும் எத்தனையோ வித்தியாஸம். சிறுபிள்ளைகளை நடத்துவதைப்பற்றிய ஒவ்வொன்றும் வெகு மாறுதலடைந்து நன்மை பெற்றிருக்கிறது. இதெல்லாம் சேர்ந்து, பழைய ஒழுங்குமுறையைவிட புது ஒழுங்குமுறை தோஷமில்லாமலிருக்கிறது. பழைய வழியில் பயமும் திகிலும் இருந்தன. புதியதோ அன்பாலும், சிரத்தையாலும் ஏற்பட்டமுறை. பிள்ளைகள் நல்லவர்களாயிருப்பதற்கு வேலையிடுவது உபாயமானால், உபாத்தியாயர், சக்தி, யுக்தி, உற்சாகப்படுத்தும் ஸாமர்த்தியம் உள்ளவராயும் பிள்ளைகளை எப்போதும் சந்தோஷமாய் வேலைசெய்து உற்சாகத்துட னிருக்கும்படி செய்யக்கூடியவராயு மிருக்க வேண்டும். சோம்பலுள்ள உபாத்தியாயரிடம் பிள்ளைகள் துஷ்டர்களாயும் சஞ்சலமுள்ளவர்களாயும் வளர்வார்கள்.

ஒழுங்குமுறையென்றால் கொஞ்சமேனும் சப்தம் இராமையன்று. ஒழுங்கீனத்தின் நடுவில் ஒழுங்கு என்பது ஒன்றுண்டு. சுருக்கிச்சொல்லின் அது புத்திசாலித்தனமாய் அடக்கியாளுவதுதான். இந்த உண்மையை அறிந்த உபாத்தியாயர் தன்னால் இயன்றவரையில், சுற்றியிருப்பவை, தன்முறைகள் தன் வேலைமாதிரி, எல்லாவற்றையும், அவசியமான குணங்களான முகமலர்ச்சி, களிப்பு, திருப்தி இவற்றை உண்டாக்குவதற்குச் சாதனங்களாகச் செய்வர். முக்கியமான அம்சமாகிய சுற்றியிருப்பைக்கொண்டு ஆரப்பிப்பார்; மனது ஸந்துஷ்டி, வெளிச்சம், வர்ணம், அவை அவர் லக்ஷியங்கள்.

சுவரில் அழுக்கடைந்த வர்ணம் ஒன்றும் இருக்கவொட்டார். (2-ம்) கரும்பு, பார்ப்பதற்கு விகாரமான பூனை, ஸோப் செய்யுமிடம், அழுது வழியும் சிங்கம், கடுகு, கஞ்சிப்பசை இவைபோன்ற ஸ்வாரஸ்யமில்லாத பழங்காலத்து படங்கள் இவற்றிற்கு பதிலாய், வேடிக்கையான பூதக்கதைகள், குழைந்தைகளுக்கான கதைகளின் விளக்க படங்கள், சிரித்து விளையாடும் பிள்ளைகள், பழகின பிராணிகள் இவற்றின் படங்கள், தொங்கும். எல்லாம் வழக்கம்போல் பருமனும் உருவமுமாயிருக்கவேண்டியதில்லை. பிள்ளைகளுக்கு பிடித்தமானவையாய் இருக்கக் கூடியதெல்லாம் இருக்கலாம். பத்திரிகைகள், புஸ்தகங்கள், பிரசுரங்கள் எங்கிருந்தாலும் அங்கிருந்து கத்தரித்து சேகரிக்கப்பட்ட படங்களாயிருக்கலாம். நம்மை சுற்றியிருக்கும் இருப்பின் இயல்பானது நமக்குத் தெரிந்தாலும் தெரியாவிட்டாலும் அதிக வித்தியாஸத்தை நமக்கு விளைவிக்கிறது. அப்படித்தான் குழந்தைகள் விஷயத்திலும். மந்தமாய் தலைக்கிளப்பவொட்டாமல் இருக்குமிடத்தில் பிள்ளைகள் களித்தும், சந்துஷ்டியாயு மிருக்க முடியாது. இதுதான் ஒழுங்குமுறைக்கு முதல் ஒத்தாசை. அடுத்தது பாடநேரங்களைக் குறைவாய் வைத்துக்கொள்ளல். பிள்ளைகள் மனம் வேறுவிஷயத்தில் சென்றுவிட்டால் ஒழுங்குமுறை மிகவும் கெட்டுப்போய்விடும். ஒவ்வொருபாடமும் சிறியதாயிருப்பதோடு கூடியவரையில் பலமாதிரியாயிருக்க வேண்டும். ஸௌகரியமான போதெல்லாம் பிள்ளைகள் கண்கள் வேலைசெய்வதொடு விரல்களும் வேலைசெய்யும்படி தூண்ட வேண்டும். சிறு குழந்தைகளுக்கு கற்பிக்கும்போது அவர்கள்

கைகளுக்கு ஏதாவது வேலையிடவேண்டும். அப்போது அவர்களுக்கு கவனிப்பதில் அலுப்புவராது. அது ஆட்டம் ஆடுவது போலிருக்கும். பிள்ளைகள் வீணாக ஒருவரோடொருவர் சண்டையிட்டுக் கொள்வதையும் வேண்டார். ஸாதாரணமாய் ஆரோக்கிய ஸ்திதியிலிருக்கும் பிள்ளைக்கும் ஸதா இயக்கமிருக்கவேண்டியது அவசியம்.

பிள்ளைகளின் மனது அவர்கள் புத்திக்குயெட்டாதவற்றில் செல்லாதானதால், உபாத்தியாயர் அவர்கள் வயதுக்கும் புத்திக்கும் தக்கதான வேலையை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொடுக்கவேண்டும். முக்கியமாய் தன் ஸம்பாஷணை குழந்தையின் வயதுக்கும் புத்திக்கும் தக்கதாயிருக்கிறதா என்று கவனிக்கவேண்டும். இன்பமாய் பேசவும் சுறுசுறுப்பாய் இருக்கவும் பழகவேண்டும். உபாத்தியாயர்களுக்கு இக்குணங்கள் முன்னேயே இருப்பதாகவே நாம் எண்ணுகிறோம். வெகு சிறு பிள்ளைகள் கூட அடக்கியாளும் சக்தி இன்னாருக்கு இவ்வளவு இருக்கிறதென்று அறிந்துகொள்ளும் சக்தியுள்ளவர்களாகக் காண்கிறார்கள். கவனிக்கவேண்டுமா, சேஷ்டை பண்ணலாமா என்று அவர்களுக்கு எப்படியோ தெரிந்து விடுகிறாப்போலிருக்கிறது.

## அநுகாரசக்தியை உபயோகித்தல்.

உபாத்தியாயர்களாகிய நாம், அநுகாரமாகிற ஸஹஜ சக்தியை, ஒழுங்குமுறை, வினயம் இவற்றிற்கு ஒத்தாசையாகவும், அதிக அக்கரையாகவும் புத்திசாலித்தனமாகவும் வேலை செய்வதற்கு ஒரு தூண்டுதலாகவும், தற்போது ஸாதாரணமாய் உபயோகிப்பதைவிட அதிகமாய் உபயோகிக்கலாம்.

சிறுவயதுள்ள உபாத்தியாயர் ஸாதாரணமாய் செய்யும் தப்பிதங்களில் ஒன்று அடிக்கடி பிசகுகளைப்பற்றிச் சொல்லுதலாம். இந்தத் தொந்தரவில் வெகு பாகத்தை அநுகார சக்தியை புத்திசாலித் தனமாய் உபயோகித்தால் சாந்தப்படுத்திவிடலாம். வாயாலே ஒன்றும் சொல்லாமலே இந்த பரிஹாரத்தை பிரயோகிக்கமுடியும். பலகையில் செய்யும் வேலையெல்லாம் சுத்தமாயிருக்கவேண்டும். ஏனெனில் இது புஸ்தகத்தில் செய்யும் வேலையில் பிரதிபலிக்கும். சீமைச் சுண்ணாம்புகொண்டு செய்யப்படும் வேலை எப்போதும் சுத்

தமாயிருப்பது அவசியம். எப்போதும் முன்னுலேயே யோசித்து தயார் செய்யப்பட்டதா யிருக்கவேண்டும். அப்படியிருந்தால் பிள்ளைகள் தங்கள் உபாத்தியாயர் வேலை எப்போதும் சுத்தமாய்தானிருப்பது வழக்கம். அன்று நடக்கிற பாடத்திற்கென்று தயார்பண்ணி வந்ததன்று என்று பிள்ளைகள் நிசமாய் நம்புகிருர்கள். சுருக்கங்கள், பாடக்குறிப்புகள், தலைக்குறிப்புகள் எல்லாம் இந்தத் தலையின்கீழ் வருகின்றன. சுத்தமாயும், அக்கரையோடும் முன் யோசனையாய் வேலைசெய்வதே சரியானது என்று பிள்ளைகளுக்கு சீக்கிரமாய் மனதிற் பட்டுவிடும். இந்த முறை யனுஷ்டானத்திற்கு வந்தால், பிள்ளைகளுக்கு அப்பியாஸ வேலைக்கென்று இருக்கும் புஸ்தகங்களில் தற்போது காணப்படும் ஆயாஸம் சீக்கிரத்தில் போய்விடும்.

உபதேசம் ஒன்றும் வேண்டுவதில்லை. தானுகவும் தன்னிச்சையாகவும் நினைத்துப் பார்ப்பதற்கு யாதொரு தடையுமில்லை. ஏதோ சில விசேஷமான இனங்களில் தவிர ரொம்ப சுத்தமா யிருக்கவேண்டுமென்று சொல்லவில்லை. ஆனுல் பிள்ளைகளுக்கு தாங்கள் செய்யும் வேலையில் ஸாதாரண அக்கரையும் ஒரு பெருமையும் இருக்கும்படி பார்க்கவேண்டும்.

மேலும் பிள்ளைகளுடைய பேச்சு எப்போதும் ஒப்பத்தக்கதாயிருப்பதில்லை. ஆகையால் உபாத்தியாயர் ஜாக்கிரதை எடுத்துக்கொண்டு, நாட்டு புறமானமும், வேறுவித வழுவுகளு மில்லாமலும் பேசினுல் வெகு நலம் உண்டாகும். பிள்ளைகளுக்கு பெரும்பாலும் விநயம் இருப்பதில்லை. உபாத்தியாயர் மரியாதையாய் நடந்து கொள்வதில் கவனமாயிருக்கவேண்டும். அற்பகாரியம் ஒருவர் செய்தாலும் அதற்கு ஞாபகமாய் நன்றி பாராட்டவேண்டும். எப்பொழுதும் மரியாதையுள்ளவனுயும், உபகாரியாயும் இருத்தல்வேண்டும்.

தப்புகளை கதை முதலிய வற்றின் ரூபமாய் விவரித்துக் காண்பிப்பது எப்போதும் அபாயகரம் என்பது ஒப்புக்கொண்ட விஷயம். எப்போதும் குழந்தைகளுக்கு சரியான விஷயத்தையே காண்பிக்கவேண்டும். அப்போதுதான் அவர்கள் ஞானம் விபரீதமாகாதிருக்கும். அநுகாரம் இது விஷயத்தில் வெகுவேலைசெய்கிறது. ஏனெனில் சரியான விஷயத்தை அடிக்கடி காட்டினுல் அது தப்பின் வலுவை போக்கு

வதற்காகும். முடிவில் நல்லதாயிருப்பதை ஸஹஜமாய் அநு காரம்பண்ண நேரிடும். பிள்ளைகளுக்கு அநுகாரசக்தி வெகு பலமாயுண்டு என்பதை சிறுவயதுள்ள உபாத்தியாயர், முக்கியமாய் சிக்ஷணமுறை கற்பிக்கும் கலாசாலையை விட்டுப் போகும் உபாத்தியாயர், நன்குணர்ந்தால் வகுப்பை அடக்கி யாளுவதற்கு அவர் வசம் வலுவான கருவி ஒன்று கிடைப்ப தாகும். அந்தக் கருவி, நல்லவார்த்தை அல்லது செயலை தடையின்றி வெகுவாய்க் கொள்ளும் இயல்புடையார்களோடு நெருங்கிய சேர்க்கையை ஸம்பாதித்துக் கொடுக்கும். குழந்தை ஸ்பாவ விசாரத்தின் ஒரு அம்சத்தை சோதித்தாராயும் வழியில் புகுந்தவருமாவர். இந்த விசாராம்சமானது உபாத் தியாயருடைய சுகத்தை வெகு அதிகமாக்குவதோடு பிற் காலத்தில் குழந்தைகளுக்கு வெகு அதிகமான நலத்தைச் செய்யும்.

பிள்ளைகளுக் கெதிரில் உபாத்தியாயர் நிற்பது, இருப்பது கூட கவனிக்கத்தக்கது. உட்காரும் பலகை, கரும்பலகைச் சட்டத்தின் குறுக்குக்கம்பு இவற்றின்மேல் காலைத்தூக்கி வைத்துக்கொண்டு நிற்பதுபோன்ற விகாரமான வழக்கங்களை பிள்ளைகள் பார்த்தால் அப்படியே அவர்களும் செய்வார்கள். உபாத்தியாயரை மாதிரியாக பாவிக்கிறார்கள்.

சிறு பிள்ளைகள் மனதில் உபாத்தியாயர் வெகு உன்னிப் பாய் எதையும் பார்த்து விடுவர் என்ற ஒரு பெரிய கௌர வத்தையும், அவர்க்கெதிரில் ஒழுங்காயிருக்க வேண்டுமென் கிற ஆசையையும் ஊன்றச் செய்வது ஸாத்தியமே. இது ஸஹஜமாய் தன்னறியாமலே ஏற்படும் ஒழுங்கு முறையாகும்.

வேனிற்காலத்தில் பிள்ளைகள் இருந்தவாறு இருக்கட் டும் என்று விடவேண்டியது எப்போதும் அவசியம். சிறு குழந்தைகள்தான் வேனிற்காலத்தில் அதிக கஷ்டப்படும். கஷ்டமாயிருக்கிறது, களைப்பாயிருக்கிறது என்று மாத்திரம் தெரிகிறதேயொழிய அதற்கு பரிகாரம் என்ன பண்ணிக் கொள்ளுகிறதென்று அவர்களுக்குத் தெரிவதில்லை. விளை யாடப் போகவேண்டுமென்று மாத்திரம் தெரியும். காற்று உலாவுவதற்கு தகுந்த ஏற்பாடுகள் செய்தபிறகு, அடிக்கடி இன்னும் அதிகமாய், பாடங்கள் முதலியவற்றை புதிது புதி

தாய் மாற்றிப் பார்ப்பதுதான் நல்லகாரியம். எல்லாருமாய் சற்று ஓடியாட ஸமயோசிதமாய் சில நிமிஷங்கள் விட்ட போதிலும் கண்டிப்பாய் கவனம் வைக்கும்படி எதிர்பார்க்கக் கூடாது. எந்த பிள்ளையையும் வெகுநேரம் அமைதியாய் உட்கார்ந்திருக்க எதிர் பார்ப்பது ஒருபோதும் கூடாது. ஆகையால் ஒரு பாடம் ஆனதும், சில நிமிஷங்கள் பிள்ளை கள் நடை பழகவும், தன்னிச்சையாய் இயங்கவும், செய்யுள் முதலியவை ஒப்பிக்கவும், பாடவும், ஒரே மாதிரியாயிருப் பதை பரிஹரிக்க வேறு ஏதாவது செய்யவும் சில நிமிஷங்கள் செலவழிக்கவேண்டும்.

கவனித்துப் பார்க்கும் பாடம் நடக்கும்போது உபாத்தி யாயருக்கு ஒழுங்குமுறையிலுள்ள ஸாமர்த்தியம் தெரியும். பிள்ளைகள் எல்லாரும் சேர்ந்தாப்போல் உபாத்தியாயரிடம் போக ஆவலாய் வருவார்கள். ஆவலாயிருப்பதால் கைகளைத் தூக்கி அவை மறைவில் ஒருவரோடொருவர் பேசுவார்கள். இப்படி எல்லாம் குழப்பம் உண்டாகாதபடி பார்க்க உபாத்தி யாயருக்கு அதிக ஸாமர்த்தியம் வேண்டும்.

பாடத்தில் பிடிப்பில்லாததினாலோ, அதிக புத்தியாலோ, சுறுசுறுப்பாலோ, தொந்தரவு கொடுக்கும் பிள்ளை ஒன்றுவ திருக்கும். அப்பேர்ப்பட்ட பிள்ளைகளை உபாத்தியாயருக்கு ஒத்தாசையாக, பாடங்களுக்கு வேண்டிய சாமான்களை கொடுக்கவும் வாங்கிவைக்கவும், சின்னப் பிள்ளைகள் உபத் திரவம் பண்ணுமவையாயிருந்தால் ஒன்றிரண்டுபேரை பார்த் துக்கொள்ளவும், பரபரப்புக்குத் தக்க வேலைகொடுத்து விஷ மம்பண்ண இடமிராமல் கூடுமான வரையில் ஏவிக்கொண்டே யிருக்கவேண்டும். தண்டித்து நிறுத்தும் ஒழுங்குமுறை நல்ல ஒழுங்குமுறையன்று. ஆனால் ஒரோர் சமயம் தண் டனையும் கொஞ்சம் வேண்டியதுதான்.

ஒரு தப்பு செய்தால் அதற்கு அந்தத் தப்பிலிருந்தே (நெருப்பைத் தொட்டால் கை சுடுவதுபோல்) இயற்கையாய் தண்டனை வரும்படியாய் இருக்க வேண்டுமென்று சொல்லும் "பவாநுபவ ஒழுங்குமுறை" தான் கார்யகாரியா யிருக்கக் கூடியமுறை. தப்பு எப்படிப்பட்டதானாலும் ஒரேவிதமாய் உபாத்தியாயர் தண்டிப்பதால் "இது அநியாயம், இது நியா

யம்'' என்று பிள்ளைகள் மனதில் படுவதற்கு இடமிராது. உதாரணமாய் சோம்பேறியாய் கவனிக்காமல் விஷமம்பண்ணும் பிள்ளையை வகுப்பிற்கு வெளியே அனுப்பி, தனியாக ஒரு வேலையில்லாமல் வைப்பது முற்றிலும் பிரயோஜனமுமில்லை. அதற்கு இன்னும் கெட்ட வழியிலேயேதான் புத்தி போகும்.

பொதுவாய் ஒழுங்குமுறை சரியாயிருந்தால் தண்டிக்க வேண்டியது வெகு அபூர்வமாயிருக்கும் அன்பு மூலமான ஒழுங்குமுறை ஏற்படுவதற்கு உடனுணர்வு, நியாயம், பூர்ணமான அறிவு, இவை கலந்திருக்கவேண்டும் என்று நன்குணராத உபாத்தியாயருக்கு ஒழுங்குமுறை ஸாமர்த்தியம் குறைவே.

ஒழுங்குமுறை என்பது கற்பிப்பதில் தனியாக ஒரு பாகமன்று. ஒவ்வொரு பாடத்திலும் ஒவ்வொரு அம்சத்திலும் அது இருக்கிறது. ஏனெனில் சரியானபடி நடத்தும் ஒவ்வொரு பாடமும் ஒழுங்குமுறை காட்டும் பாடமாகும். அது ஏதோ தூரத்தில் தெரியும் ஒரு லக்ஷ்ய விஷயமன்று. வேலையிலும் விளையாட்டிலும் குறுக்கும், நெடுக்கும் ஸமமாய் ஊடுருவிச் செல்லும் நூலாகும்.



## அத்தியாயம் XVI.

### கிண்டர் கார்டனுக்கான ஆட்டங்கள், வெளியாட்டங்கள்.

1. பூனையும் எலியும்.—சிறு குழந்தைகளுக்கு இது பழக்கத்திலிருக்கும் விளையாட்டு. இந்த ஆட்டத்தில் குழந்தைகள் கைகளை கோர்த்துக்கொண்டு வட்டமாய் நிற்கிறார்கள். ஆரம்பத்தில் எலி உள்ளேயும் பூனை வெளியிலும் இருக்கின்றன. பூனை வட்டத்தைச் சுற்றியோடி எலியைப் பிடிப்பதற்கு முயலுகிறது. வட்டத்தில் நிற்கும் பிள்ளைகள் எலிக்கு உதவி செய்ய கைகளைத் தூக்கியாவது அல்லது கைகளை விட்டுவிட்டாவது அதை தப்பியோடச் செய்கிறார்கள். ஆனால் பூனையை மாத்திரம் உள்ளே செல்ல லகுவில் விடுகிறதில்லை. எலியைப்

பிடித்துவிட்டால், எலியா யிருந்தவன் பூனையாகிறான். அவன் எலியை வட்டத்தில் நிற்கும் பிள்ளைகளிலிருந்து பொறுக்கி எடுக்கிறான்.

2. ஸ்லாப்சாக்.—இதில் குழந்தைகள் வட்டமாய் நிற்கிறார்கள். ஒரு குழந்தை வட்டத்தைச்சுற்றி ஓடி வேறொரு குழந்தையைத் தொடுகிறான். அந்தக் குழந்தை உடனே வட்டத்தைச்சுற்றி எதிர்முகமாக ஓடி தான் எங்கிருந்து கிளம்பினானோ அந்த இடத்திற்கு, மற்றவன் தன்னிடத்திற்கு வருவதற்குள், வர எத்தனிக்கிறான். முதலில் எந்தப் பையன் தன் இடத்திற்கு வந்து சேருகிறானோ அவன் வட்டத்திலுள்ள பிள்ளைகளோடு சேருகிறான். மற்றவன் இன்னொருவனைத் தொடவேண்டியது. இம்மாதிரியே கடைசிவரையில் செய்யவேண்டியது.

3. எருது.—கைகளைக் கோத்துக்கொண்டு வட்டமாய் பிள்ளைகள் நிற்கிறார்கள். மத்தியில் நிற்பவன் எருது. அவன் வட்டத்திற்குள் அங்கு மிங்கும் ஓடி வட்டத்தைவிட்டு வெளியேவர முயலுகிறான். ஆனால் பிள்ளைகள் கைகளை கெட்டியாய் பிடித்துக்கொண்டு அவனை வெளியில் வரவொட்டாமல் தடுக்கிறார்கள். எருது வட்டத்திற்கு வெளியே வந்துவிட்டால் அவனைத் துரத்திக்கொண்டு ஓடுகிறார்கள். எந்த பையனை அவன் முதலில் தொடுகிறானோ அவன் புது எருது.

4. மூன்று வரிசைகள்.—பிள்ளைகள் இரண்டு வட்டமாய்—ஒன்றுக்குள் ஒன்றாய்—நிற்கிறார்கள். இப்போது இரண்டு வரிசைகள். இந்த ஜோடிகளில் ஒன்று வெளியில் வந்து ஒருவன் ஓடுகிறவனாகவும் மற்றவன் பிடிக்கிறவனாகவும் ஆகிறான். ஓடுகிறவன் பிடிப்படும் சமயமாயிருந்தால் நிற்கின்ற ஜோடிகளுக்கு ஒன்று முன்னால் நின்று விடுகிறான். இப்போது மூன்று வரிசைகள். மற்றவன் ஓடவேண்டியதுதான். இவன் ஓட ஆரம்பிக்கிறதற்குள் வேறொருவன் தொட்டுவிட்டால் தொட்டவன் பிடிக்கிறவனாகவும், முன்பிடிக்க வந்தவன் ஓடுகிறவனாகவும் ஆகிறார்கள்.

5. பந்தெறிதல்.—இது சாதாரணபந்துப்போட்டி விளையாட்டு. இது பந்தை சரியாய் எறிதல் பிடித்தல் இவைகளுக்கு தகுந்த அப்பியாஸம் தரும். பிள்ளைகள் இரு

வகுப்புகளாக பிரிக்கப்படுகிறார்கள். ஒவ்வொரு வகுப்பும் வட்டத்தைச்சுற்றி நிற்கிறார்கள். ஒவ்வொரு வட்டத்தின் நடுவிலும் ஒவ்வொரு பையன் நிற்கிறான். அவன் சைகை காட்டின உடனே பந்தை தன் கக்ஷிகாரர்கள் ஒருவரிடம் எறிகிறான். அவன் திரும்பவும் நடுவில் நிற்பவனுக்கு பந்தைப் போடுகிறான். உபயோகிக்கும் பந்து புட்பாலாகவாவது கை பந்தாவாவது இருக்கலாம். கைப்பந்தாயிருந்தால் வட்டம் பெரிதா யிருக்கவேண்டும். யாராவது ஒருவன் (நடுவில் நிற்பவனாவது அல்லது வட்டத்தில் நிற்பவனாவது) பந்தைப் பிடிக்கத் தவறிவிட்டால் அவன் பந்தை எடுத்து யார் எறிந்தானோ அவன் கையில் கொடுக்கவேண்டும். எந்த வட்டத்தில் இருப்பவர்கள் முதலில் ஆட்டத்தை முடிவு செய்கிறார்களோ அவர்கள்தான் ஜெயித்தவர்கள்.

6. **பந்தேறிதல்.**—ஆட்டக்காரர்கள் விளையாடுமிடத்தில் வட்டமாய் வரைந்த கோட்டைச்சுற்றி நிற்கிறார்கள். ஒருவன் குறிப்பிட்ட ஓர் இடத்தில் நிற்கிறான். அங்கிருந்து ஆட்டக்காரர்கள் ஒவ்வொருவருக்கும் பந்தையெறிகிறான். நன்றாய் பிடித்தவன் திரும்பவும் பந்தை எறிந்தவனிடம் எறிகிறான். எவனொருவன் பந்தைப்பிடிக்க தவறுகிறானோ அவன் இடம் மாறி தன் இடத்தை பந்தெறிந்தவனுக்கு விட்டுவிட்டு பந்தெறிந்தவன் ஸ்தானத்தை அடைகிறான். ஆட்டத்தின் கடைசியில் எவனொருவன் அதிக தடவை பந்தை பிடித்திருக்கிறானோ அவனே ஜெயித்தவன்.

7. **மரசிப்பாய்கள்.**—ஆட்டக்காரர்கள் ஒரு வட்டமாக நிற்கிறார்கள். இருவர் நடுவில் நிற்கிறார்கள். இருவரும் ஒரு காலை நொண்டிக்கொண்டு ஆட்டத்தை ஆரம்பிக்கிறார்கள். நொண்டும்போது கைகளை மார்பின் குறுக்கே கட்டிக் கொள்ளுகிறார்கள். ஒருவன் மற்றவனை, தோளால் இடித்து நொண்டியிருக்கும் காலை கீழே வைக்கச்செய்கிறான். எவன் காலை கீழேவைக்கிறானோ அவன் தனக்கு பதிலியாக இன்னொருவனை ஏற்படுத்தி ஜெயித்தவருடன் போராட அனுப்புகிறான். தோற்றுப்போனவன் காலியான இடத்திற்கு வருகிறான். ஒவ்வொருதடவை ஜெயித்ததும் முன்னாடி ஏற்பாடு செய்யப்பட்ட ஜெய சங்கியைக்கு ஒன்று கணக்காகிறது.

## உள்ளே ஆடும் ஆட்டங்கள்.

8. **இல்லாதவனை கண்டு பிடித்தல்.**—இது சாதாரணமாய் வகுப்பில் நடக்கும் ஆட்டம். இது குழந்தையின் உற்று நோக்கும் சக்தியை விருத்திசெய்ய உபயோகிக்கும் ஆட்டம். ஒரு குழந்தையை வகுப்பிற்கு வெளியே போகச்செய்து ஒருவனை வகுப்பில் சௌகர்யமான இடத்தில் ஒளித்து வைக்கிறது. (படுதாவுக்கு பின்னுடியாவது படங்களுக்குப் பின்னுடியாவது, கதவுக்கு பின்னுடியாவது, உபாத்தியாயர் மேஜையின் கிழாவது) வெளியில் அனுப்பப்பட்ட குழந்தையைக் கூப்பிட்டு "எந்த பையன் இல்லை" என்று கேட்கிறது. பையன் சொல்வதற்கு ஒரு கால அளவை ஏற்படுத்தவேண்டும். இம் மாதிரியே செய்யவேண்டும்.

9. **இல்லாத சாமானை கண்டுபிடித்தல்.** — இது முன் ஆடின ஆட்டத்தின் வேறுபாடு. முன்போல ஒரு பிள்ளையை வகுப்பிற்கு வெளியே அனுப்புகிறது. கண்ணிற்கு நன்ருய் புலப்படக் கூடியதான வகுப்பு சாமான்களில் ஒன்றை எடுத்து மறைத்து விடுகிறது. வெளியில் போனவன் வந்ததும் 'எந்த சாமான் இல்லை' என்று கேட்கிறது:

10. **கண்களாட்டம்.**—சாமான்ய ஒரு தட்டில் சிறியதானவும் பழக்கமானதுமான பொருள்களை வைக்கிறது. அந்தத் தட்டை மெதுவாய் வகுப்பைச்சுற்றி எடுத்துச் செல்லுகிறது. அதிலிருக்கும் பொருள்களை ஒவ்வொரு குழந்தையும் பார்ப்பதற்கு சில நிமிஷங்கள் கொடுக்கவேண்டும். பிறகு அவர்கள் பார்த்தபொருள்களின் பெயரை பிள்ளைகளை எழுதச் செய்யவும். இந்த ஆட்டத்தை மற்றப் பாடங்களுடன் ஸம்பந்தப் படுத்தலாம். இந்தப் பொருள்கள்: இலைகள், பூச்சிக்கூடுகள், கற்கள், இன்னும் இயற்கை பாட ஸம்பந்தமான வஸ்துக்களாக இருக்கலாம். ஒரு தட்டில் சாமான்களை வைப்பதற்கு பதிலாக எழுத்துக் கூட்டுவதற்காக சில வார்த்தைகளை எழுதி காண்பிக்கலாம். அல்லது மனக் கணக்கிற்காக எண்களின் ஒருவரிசை அல்லது பூகோள சம்பந்தமான படங்கள் இவைகளாகவுமிருக்கலாம். எவனொருவன் நீளமான ஜாப்தா கொடுக்கிருனே அவன்தான் ஜெயித்தவன்.

11. வாசனையறியும் ஆட்டம்.—நல்ல வாசனையுள்ள சாமான்களை பையில் போட்டுக் கட்டிவிடு (உ-ம்.) காப்பிக்கொட்டை, லவங்கம் முதலிய வாசனை திரவியங்கள். இந்தப்பைகளை பிள்ளைகளிடம் கொடு. அதனுள் இருப்பதை ஊகித்து சொல்லும்படி செய்.

12. தொட்டறிதல்.—சில குழந்தைகள் கண்களைக் கட்டிவிடு. அனேக சாமான்களை வரிசையாய் அவர்களுக்கு முன் வை. அவர்கள் அவைகளை கையில் எடுத்து தடவிப்பார்த்து என்ன சாமான் என்று சொல்லவேண்டும். இந்த ஆட்டத்தை வேறு விதமாகவும் ஆடலாம். குழந்தைகளுக்கு அநேக பொருள்களைக் காண்பி. கண்களைக் கட்டியபிறகு ஒவ்வொரு சாமானைக் கீழேபோடு. கீழேபோட்ட சாமான் என்ன என்று சொல்லச் செய்.



# அனுபந்தம்

## I

## கிண்டர்கார்டனில் உபயோகிக்கும் உபகரணங்கள், படங்கள் முதலியன.

### கைத்தொழில்.

கட்டைகள்.
வர்ணங்கள்—குழாய்களில்.
சீமைச் சுண்ணும்புக்கட்டி—பலவர்ணங்கள்.
மேற்படி —வெண்மை.
காகிதம் —பழுப்புக் காகிதம்
மேற்படி —வெண்மை.
மேற்படி - பலவர்ணங்கள்.
பிரசுரங்களிலுள்ள படங்கள்.
கத்தரிக்கோல்.
அட்டைகள் கனத்ததும், மெல்லியதும்.
பிசின் அல்லது பசை.
நூல் கட்டைகள்.
பேனுக்கத்திகள்.
களிமண்.
களிமண்ணை வைத்து உருவமமைப்பதற்கான தட்டுகள்.
சித்திரங்கள் வரைய புஸ்தகங்கள்.
நெருப்புப்பெட்டிகள், அல்லது அட்டையால் செய்த சிறு பெட்டிகள்.
மணிகள்.
குச்சிகள்.
விதைகள்.
தைப்பதற்குக் கித்தான்.
வர்ணமுள்ள கம்பளி.
வர்ணமுள்ள துணி.
வெள்ளை நூல்.
வர்ண நூல்.
ஊசிகள்.

## கணக்கு.

கட்டைகள்.

மாண்டிஸோரி;—கட்டைகள், ஆறுபக்கமுள்ள கனவடிவமான கட்டைகள் முதலானதுகள்.

மாண்டிஸோரி:—க்ஷேத்திரகணித சம்பந்தமான உருவங்கள்.

மேற்படி:— வட்டமான நீண்ட கட்டைகள் Cylinders.

கெஜக்கோல், அடிக்கோல்.

ஆழாக்கு, படி.

பவுண்டு, அவுன்ஸ்.

திராசு.

நாணயங்கள்.

## இயற்கைப் பாடம்.

விதைகள்—காய்கறி, புஷ்பவகையரா.

பூந்தொட்டிகள்

பூப்படிகம்— உபாத்தியாயர் மேஜைக்கு.

புஷ்பச்செடிகளுக்குத் தண்ணீர் சொட்டும் தகரக் குவளை.

ஒன்று அல்லது இரண்டு பக்கெட்டுகள்.

தோட்டத்தில் வேலை செய்வதற்கான கருவிகள்.

பூண்டுகளை சேகரிப்பதற்காக கூடை.

சிறு ம்யூசியம், (பிள்ளைகளும், உபாத்தியாயரும் விநோதப்பொருள்களை சேகரித்து வைக்கிறது).

மணல் குவியல், பள்ளிக்கூடம் நெருக்கமான இடத்திலிருந்தால் ஒரு பெரிய பெட்டியில் மணலை கொட்டிவைத்தல், பிள்ளைகள் தாராளமாய் விளையாடக்கூடிய இடமாயிருக்கவேண்டும்.

## சரித்திரம் பூகோளம்.

லோகத்திலுள்ள மஹான்களின் படங்கள்.

முக்கியமாய் பாட அட்டவணையி லுள்ளவர்கள் படங்கள்.

சக்கரவர்த்தி, சக்கரவர்த்தினி படம்.

அவர்கள் வசிக்குமிடத்தின் படம்.

பெரிய கட்டடங்களின் படங்கள்.

லோகத்திலுள்ள ஜனங்களின் படங்கள்.

கப்பல்களின் படங்கள்.

சிப்பாய்கள் படங்கள்.

அந்த ராஜதானி கவர்னர் படம்.

கூடுமானல்.

1. மாஜிக்லான்டர்ன்; வெவ்வேறு தேசங்கள், ஜனங்கள், இவைகளைக் காட்டும் ஸ்லேட்கள்.

2. 3 அல்லது 4 ஸ்டிரியஸ் கோப்களும் படங்களும்.
3. இயற்கையமைப்பைக் காட்டும் தேசபடம்.
4 காற்றுத்திக்கை காட்டும் கருவி. இதை சுலபமாய் செய்து கொள்ளலாம்.
5. ஸன்டையல். (Sun-dial)
6. நிழலைக் காட்டுவதற்கான ஒரு கொம்பு.

## படங்கள்.

பின்வரும் படங்களைப் பள்ளிக்கூடங்களில் தொஙகவிடலாம்.

பள்ளிக்கூட ஹாலில்.—

1. சக்கரவர்த்தியின் படம்;
2. சக்கரவர்த்தினியின் படம்;
3. சரஸ்வதி படம்;
4. லக்ஷ்மி படம்;
5. மடோனுவும் குழந்தையும்;
6. பப்பிள்ஸ் (Bubbles).
7. தேவதைகளின் சிரஸுகள்.
8. சாம்யல் பையன்.
9. யூனிடி
10. அங்கிலஸ்.
11. சகுந்தலா படம்.
12. யசோதையும் கிருஷ்ணனும்.

வகுப்பு சுவரில.—

1. பிள்ளைகள் படித்த வீரர்களின் படங்களை வகுப்பில் சுவரில் தொங்கவிடுகிறது.

2. ஒவ்வொரு வகுப்பிலும் பூகோள சம்பந்தமான தேச படம் அல்லது படங்கள்.

3. பூஞ்செடிகள், புஷ்பங்கள் படம்; இவைகளை பத்திரிகைகளிலிருந்து கத்தரித்து ஒட்டிவைத்துக்கொள்ளலாம். இதுவும் தவிர கீழே சொல்லப்படும் படங்களில் ஒன்றுவது வகுப்பில் தொங்கவிடவேண்டும்.

4. கவர்னர் படம்.
5. சீதாவும், தங்கமானும்.
6. தமயந்தி.
7. தப்பிப்போன ஆடுகள்.
8. புலித்தலை
9. நாயின்தலை.

# II

பாடக்குறிப்பு.

## இயற்கைப் பாடம்.

### ஐந்தாவது வகுப்பு.

| Excursion—வெளியில் போய்ப்பார்த்தல். | வகுப்பில் நடத்துதல். |
|---|---|

I. Course:

**செடிகள்.—**

| | |
|---|---|
| (1) காம்பவுண்டிலுள்ள அனேகவித வேர்கள். | (1) வேர்கள். |
| (2) காம்பவுண்டிலுள்ள அடிமரங்கள். | (2) அடிமரங்கள். |
| (3) அனேகவிதமான இலைகள். | (3) இலைகள். |
| (4) மிஸ்டர் ரங்கராஜு தோட்டத்தைப் போய்ப் பார்த்தல். | (4) மொக்குகள்; புஷ்பங்கள், காய்கள், பழங்கள். |
| | (5) செடிகள் விருத்தியாகும் விதங்கள். |

**பிராணிவர்க்கம்.—**

| | |
|---|---|
| பட்சிகள் பாடுவதைக் கேட்க அதிகாலையில் வெளியே போகுதல். | (6) பழக்கமான பட்சிகள் அதன் பிரிவுகள். |

**இயல்பான தோற்றங்கள்.—**

| | |
|---|---|
| | (1) காற்று; அதன் இருப்பை எப்படி அறிகிறோம்? |
| | (2) காற்று எப்படி உண்டாகிறது? |
| | (3) காற்றுக்காட்டியை செய்து காற்றடிக்கும் திசையை அறிதல். |

II. Course:

**செடிகள்.**

| | |
|---|---|
| (1) செடிகளின் வளர்ச்சியைக் கவனித்துப் பார்த்தல். | (1) விதைகள், விதைகளின் பாகங்கள்; நெல், சோளம் இவைகளைக் கவனித்துப் பார்த்தல். |

(2) பிரத்தியக்ஷமாய் விதைகளை விதைத்து அவைகளின் வளர்ச்சியைக் கவனித்து வருதல்.

(2) வளர்ச்சியைக் காட்டும் அட்டவணை ஒன்று வைக்கவும்.

(3) செடிகள் ஆகாரத்தை எப்படி சேகரிக்கிறது?

(4) விதைகள் எப்படி பரவுகிறது?

பிராணிவர்க்கம்.—

(1) பூச்சிகள்; அவைகளின் சத்துருக்களும், சிநேகிதர்களும்.

(2) தவளையின் ஜீவ சரித்திரம்.

இயல்பான தோற்றங்கள்.—

(1) மழை எப்பொழுது உண்டாகிறது?

(2) எப்படி உண்டாகின்றன?

(3) மழைக்கு முன்னும் பின்னும் வானத்தின் தோற்றம்.

(4) மழையின் உபயோகம்.

III. Course:

செடிகள்.—

(1) தோட்டத்திலுள்ள மண்ணைப் பரிசோதித்தல்.

(1) செடிகளும், மண்ணும்; அநேகவித மண்ணைப் பரிசோதித்தல்; அவ்வித மண் எப்படி உண்டாகிறது. எவ்வித மண்ணில் எவ்விதமான பயிர் வளர்கிறது என்பதை கவனிக்கிறது.

(2) ஆற்று மண்ணை பரிசோதித்தால், ஆறு மண்ணை அறுத்துக்கொண்டு போகிறது.

பருவம் மாறும்போது மரங்களுடைய மாறுதல்களை கவனித்தல்.

(2) சாமான்ய மரங்களின் உபயோகம்.

(3) பின்வரும் மரங்களை படித்தல்.

1. புளி, 2. மா, 3. தூங்குமூஞ்சி, 4. வேம்பு, 5. வாதநாராயண மரம், 6. தென்னைமரம்.

பிராணிவர்க்கம்.—

| | |
|---|---|
| (1) வண்ணாத்திப் பூச்சி முட்டைகளைக்கொண்டு வருதல். | (1) வண்ணாத்திப் பூச்சியின் ஜீவ சரித்திரம். |

இயல்பான தோற்றங்கள் —

1. சூரியன் இருக்குமிடத்தைக் கொண்டும், அதன் நிழலைக் கொண்டும் நேரமறிதல். இரவு பகல் கால அளவு.
2. சந்திரன், நக்ஷத்திரங்கள் இவைகளைக் கவனித்தறிதல்.

## இயற்கைப் பாடம்.

### நான்காவது வகுப்பு.

I. Course:

**செடிகள்.—**

பின்வரும் மரங்களின் வேர், அடிமரம்; இலைகள், பூக்கள், காய்கள், பழங்கள் இவைகளை பரிசோதித்தல், அதன் உபயோகம். தென்னை, பனை, வேம்பு, ஆலமரம், முருங்கைமரம்.

**பிராணி வர்க்கம்.—**

1. பூனை, 2. நாய், 3. இந்த இரண்டின் ஒற்றுமைகள் வித்தியாசங்கள்;

4. சாமன்ய பட்சிகளைக் கவனித்தறிதல்; அதன் ஆகாரம், அலகுகள் இறக்கைகள்; உபயோகம். (1) கோழி, (2) புறா, (3) வாத்து.

**இயல்பான தோற்றங்கள்.—**

1. சூரியனிருக்கும் இடத்தைக்கொண்டு நேரம் அறிதல், அதன் நிழலைக் கொண்டு மறிதல்.

2. செங்கல் காளவாய், விறகுவாடி இவைகளைப்போய்ப்பார்த்தல்,

II. Course:

**செடிகள்.—**

முதலில் சொல்லியபடி பின்வரும் மரங்களையும் செடிகளையும் பரிசோதித்தறிதல்.

வாழைமரம், கத்தரி, அவரை, மிளகாய், வண்டை, வெங்காயம், முள்ளங்கி, பட்டாணி, ரோஜா.

பிராணிவர்க்கம்.—

1. பசு. 2. குதிரை. 3. இரண்டையும் ஒப்பிட்டுப்பார்த்தல்.

4. சாதாரண பறவைகள் — முதலில் சொல்லியபடி, 1. கிளி. 2. மைனு.

இயற்கையான தோற்றங்கள்.—

1. குளத்தைப் பற்றிய பாடம்.

2. பாலம், அணைக்கட்டு; ஒரு கிணறும் ஏற்றமும்; இவைகளைப் போய்ப்பார்த்தல்.

III. Course:

செடிகள்.—

முதலில் சொல்லியபடி பின்வரும் மரங்களையும் செடிகளையும் கவனித்தறிதல்.

(1) கொருக்காப்புளி, (2) மா, (3) தாழை, (4) சப்பாத்தி, (5) காம்பவுண்டிலுள்ள முட்செடிகள்.

பிராணிவர்க்கம்.—

(1) ஆடு.

(2) நீர்ப்பறவைகளை கவனித்தறிதல் — அதன் ஆகாரம், அலகு, இறக்கைகள், கால்கள், உபயோகம்.

1. மீன்கொத்தி. 2. கொக்கு.

(3) மீன்.

இயற்கையான தோற்றங்கள்.—

1. நதியைப்பற்றி பாடம்.

2. தச்சன் பட்டடை, தையல்கடை, கட்டிக்கொண்டிருக்கும் வீடு. இவைகளை கவனித்து பார்த்தறிதல்.

## இயற்கைப் பாடம்.

### மூன்றுவது வகுப்பு.

I. Course:

**செடிகள்.—**

பிள்ளைகள் பின்சொல்லப்படும் மரங்களையும் செடிகளையும் கவனித்து அவைகள் எந்தெந்தச் செடிகள் என்று அறிதல்.

நிழல் கொடுக்கும் மரங்கள்; பால்வடியும் மரங்கள், செடிகள்; பிசின் தரும் மரங்கள்; முட்களுள்ள மரங்கள்; இலைகள், வேர்கள், காய்கள். குறைந்தது ஆறு மரங்களை கவனித்தறிதல்: தென்னை, பனை, புளி, வேம்பு, கொருக்காப்புளி, தாழை, தூங்குமூஞ்சி மரம்; நாகதாளி.

குறிப்பு.—இம்மரங்களை கவனிக்க வகுப்பை வெளியில் அழைத்துப் போகவேண்டும். அம்மரங்களைப்பற்றி பிள்ளைகளுக்கு தெரிந்ததை ஸ்வேச்சையாய் சொல்லவிடவேண்டும். உபாத்யாயர் ஒரு குறிப்புப்படம் வரைதல்.

**பிராணிவர்க்கம்.—**

பசு, வெள்ளாடு, பூனை, நாய், குதிரை, கோழி இவைகளின் நடை அநுகூலமானதா பிரதிகூலமானதா, குட்டிகள் அல்லது குஞ்சுகள்.

**இயல்பான தோற்றங்கள்.—**

(1) கருமான்பட்டடை, (2) மட்கலம் செய்யுமிடம்; (3) ரஸ்தாபோடுதல் இவைகளைப் போய் கவனித்துப் பார்த்தல்.

## II. Course:

**செடிகள்.—**

கீழ்சொல்லப்படும் செடிகளின், காய்கள், விதைகள், உருவம், முட்கள் இவைகளை கவனித்துப்பார்த்தல். சித்திர விளக்கப்படங்கள், களிமண்ணால் உருவ மமைத்தல்.

வாழைமரம், கத்தரி, அவரை, வண்டை, மிளகாய், வெங்காயம், முள்ளங்கி, மல்லிகை, ஜின்னு.

குறிப்பு.—சில விதைகளை பிள்ளைகளுக்குக் கொடுத்து விதைக்கச் செய்கிறது.

**பிராணிவர்க்கம்.—**

கீழ்சொல்லும் பிராணிகளை கவனித்தறிதல் – அவைகளின் நடை, அநுகூலமானதா, பிரதிகூலமானதா, குட்டிகள் அல்லது குஞ்சுகள்:

வாத்து, குழிமுயல், மாடப்புரு, காக்கை.

**இயல்பான தோற்றங்கள்.—**

1. புஸ்தகம் பயிண்டு செய்தல்.
2. நூல் நூற்றல்.
3. விறகுவாடி.
4. குளங்கள்.

இவைகளைப் போய்ப் பார்த்தல்.

## III. Course:

1. முன்னால் பார்க்காத மரங்களை கவனித்தறிதல்.

மரங்களின் மாறுதல்கள்.

**பிராணிவர்க்கம்.**—

கீழ்சொல்லும் பூச்சிகளை கவனித்தல்: அது எப்படி வசிக்கிறது, எந்த காலத்தில் காணப்படுகிறது, எவ்விடத்தில் ஆகாரத்தை சம்பாதிக்கிறது.

1. வண்ணாத்திப்பூச்சி, 2. கம்பளிப்பூச்சி அல்லது முசுக்கட்டை, 3. தத்துக்கிளி, 4. சிலந்தி, 5. பூமியிலுள்ள பூச்சி, 6. எறும்புகள், 7. பறவைகள்.

**இயல்பான தோற்றங்கள்** —

(1) நதியின்கரை, (2) ரயில்வே ஸ்டேஷன் இவைகளைப் போய்ப் பார்த்தறிதல்.

## இயற்கைப் பாடம்.

### இரண்டாவது வகுப்பு.

I. Course:

1. காம்பவுண்டிலுள்ள கீழ்வரும் மரங்களை கவனித்தல்: காம்பவுண்டில் வெவ்வேறு இடங்களில் ஒரேவிதமான மரங்கள் இருக்கலாம். அவர்கள் முன் கவனித்த மரங்களைப்போன்ற மரங்களை கண்டறிதல். பிறகு மரத்தின் கீழ் உட்கார்ந்து அந்த மரத்தைப்பற்றி அவர்களுக்குத் தெரிந்ததை பேசச்செய்தல்—ஒழுங்கான பாடம் கூடாது: அவர்களுக் கிஷ்டமானவைகளை சேகரிக்கச் செய்தல்;

தென்னை, பனை, ஆல், மா, புளி, வேம்பு.

2. பெற்றோர்கள், சகோதரர்கள், சகோதரிகள் அவர்கள் நமக்கு என்ன செய்கிறார்கள்.

ஆகாரம்: எப்படி கிடைக்கிறது, எப்படி சாப்பிடுகிறோம்.

3. சரீரத்தின் வெளி அவயவங்கள்.

4. பின்வரும் பிராணிகளின் தோற்றம், ஆகாரம் இவைகளை கவனித்தல்.

பசு, ஆடு, பூனை, நாய், குதிரை.

II. Course:

1. உபாத்தியாயர் ஒவ்வொரு பாடத்திற்கும் பின் சொல்லப்படும் காய்கறிகளை கொண்டுவரவேண்டும். பிள்ளைகள் அவைகளின் பெயர், உபயோகம் இவைகளைச் சொல்லவேண்டும்.

வகுப்பில் வைக்கப்பட்ட சட்டியில் பிள்ளைகள் ஒன்று அல்லது இரண்டு காய்கறிச்செடி அல்லது பூச்செடி வைக்கவேண்டும். அன்று பாடத்தின் பொருளை களிமண்ணால் உருவ மமைக்கவேண்டும்.

வாழைக்காய் அல்லது பழம், கத்தரிக்காய், அவரைக்காய், வண்டைக்காய், கொத்தவரக்காய், மிளகாய், வெங்காயம், முள்ளங்கி, பட்டாணி, முருங்கக்காய், மல்லிகைப்பூ, ரோஜாப்பூ.

2. கோழி, குழிமுயல், காக்கை, மாடப்புரு, இவைகளின் தோற்றம், ஆகாரம் இவைகளை கவனித்தல்.

3. மீன், தவளை இவைகளின் சலனம், வர்ணம், இருப்பிடம்.

III. Course:

1. முதலில் சொல்லியபடி கீழ்சொல்லும் மரங்களை கவனித்தல். கொருக்காப்புளி செடிகள், நாகதாளி, தாழை, தூங்குமூஞ்சிமரம்.

2. பிராணிகளை கவனித்தல்.—சலனம், வர்ணம், இருப்பிடம்—வண்ணாத்திப்பூச்சி, முசுக்கட்டை அல்லது கம்பளிப்பூச்சி, சிலந்தி, தத்துக்கிளி, நத்தை, எறும்புகள்.

## இயற்கைப் பாடம்.

### பாலர் வகுப்பு.

### ஒரு வருஷத்திற்கு.

வெளியில் உபாத்தியாயருடன் செல்லுதல்.

1. காம்பவுண்டிலுள்ள மரங்களை கவனித்து பெயர் சொல்லுதல்.

2. இலைகளைச் சேகரித்தல்.

3. உபாத்தியாயர் மேஜையில் வைப்பதற்கு புஷ்பங்களை சேகரித்தல்.

4. செடிகளையும் மரங்களையும்பற்றி தெரிந்தவைகளை பிள்ளைகள் பேசுதல். உபாத்தியாயர் அவர் சொல்வதைக் கேட்டுக்கொண் டிருத்தல். உபாத்தியாயர் போதிக்கக்கூடாது.

5. காம்பவுண்டில் மேய்கிற பிராணிகளைப்பார்த்து பெயர் சொல்லுதல், அவைகளின் ஆகாரம், உபயோகம் முதலியன. பிள்ளைகள் உபாத்தியாயருக்குச் சொல்லவேண்டியதே யொழிய உபாத்தியாயர் சொல்லக்கூடாது.

6. காம்பவுண்டில் எந்த பட்சிகள் பறக்கின்றன, சாமான்ய பறவைகள், நிறம், பெயர், ஆகாரம் முதலியன.

7. ஆற்றங்கரையில் போய் மீன்பிடிப்பதைக் கவனித்தல்.

8. வகுப்பில் வைக்கப்பட்டிருக்கும் செடிகளுக்கு ஜலம் கொட்டுதல்.

இவைகளிலெல்லாம் பிள்ளைகளை ஸ்வேச்சையாய் பேசவிடவேண்டும். ஒவ்வொரு குழந்தையும் பள்ளிக்கூடத்திற்கு வரும்போதும் போகும்போதும் பார்த்தவைகளைப்பற்றிப் பேசுதல்.

9. வீட்டில் நடக்கும் விசேஷங்கள் கலியாணம், விருந்து முதலானதுகள்.

10. ஆகாயத்தை கவனித்து நிர்மலமாயிருக்கிறதா, மேகங்கள் நிறைந்திருக்கிறதா என்று சொல்லுதல்.

11. மழை பெய்யும் நாள்.

## தமிழ்.

### ஐந்தாவது வகுப்பு.

### ஒரு வருஷத்திற்கு.

1. வகுப்புப் பாடபுஸ்தகம்—மௌனமாயும், உரத்தும் படித்தல், பிள்ளைகள் வாசித்ததை சொல்லுதல், கஷ்டமான பதங்களையும், வாக்கியங்களையும் விளக்கி சொல்லுதல்.

2. ஒவ்வொரு வாரத்தில் காபி புஸ்தகத்தில் எழுதுதல்.

3. பிள்ளைகள் வாசக புஸ்தகத்தை வாசித்தல்.

4. மௌனமாய் வேறு கதை புஸ்தகத்தை பிள்ளைகள் படித்தல் தங்கள் சொந்த வார்த்தையில் வாசித்ததைச் சொல்லுதல்.

5. தகுந்த வாக்கியங்களை மனப்பாடம் செய்தல்.

6. வியாசம்: (1) படித்த விஷயத்தை எழுதுதல்.
(2) உபாத்தியாயரால் சொல்லப்பட்ட அல்லது வாசிக்கப்பட்ட கதையை எழுதுதல்.
(3) கொடுத்த வார்த்தைகளைக் கொண்டு கதையை எழுதுதல். காகிதம் எழுதுதல்.
(4) ஒரு இடம் அல்லது மனிதன் இவற்றைப்பற்றி விவரித்தெழுதல்.
(5) பிள்ளைகள் ஒருவருக் கொருவர் கேள்விகள் கேட்டு உத்தரம் சொல்லுதல்.

### நான்காவது வகுப்பு.

### ஒரு வருஷத்திற்கு.

1. வாய்மொழியாய் பிள்ளைகளின் அநுபவத்தையும் தற்கால சமாசாரங்களையும் பற்றி பேசுதல். தினந்தோறும் 15 நிமிஷம் இதற்காக செலவிடவேண்டும்.

2. வகுப்பு பாடபுஸ்தகம், மௌனமாயும், உரத்தும் வாசித்தல்; வாசித்த விஷயத்தை பிள்ளைகள் சொல்லுதல். உபாத்தியாயர் கடின சொற்களையும் வாக்கியங்களையும் விளக்கிச் சொல்லுதல்.

3. ஒவ்வொரு வாரத்திலும் அப்போது நடந்த பாடத்தின் சில வாக்கியங்களை எழுதுதல்.

4. கதை புஸ்தகத்தை பிள்ளைகளை, நிறுத்தாமல் உரத்து வாசிக்கச் செய்தல்.

5. வியாசம்.—அவர்கள் வாசித்த விஷயத்தை எழுதுதல். வகுப்புப் புஸ்தகமானாலும் சரி, கதைப் புஸ்தகமானாலும் சரி.

## மூன்றாவது வகுப்பு.

### ஒரு வருஷத்திற்கு.

1. வகுப்புப் புஸ்தகம்.

2. உபாத்தியாயர் கதையிலிருந்து சிறுவாக்கியங்களை சொல்லி எழுதச் செய்தல்.

3. இயற்கைப்பாட நேரங்களில் வெளியில் போனபோது பார்த்த விஷயங்களைபற்றி பேசுதல் பிள்ளைகளை அவர்கள் இஷ்டம்போல் பேசவிடுதல், உபாத்தியாயர் ஒரு விஷயத்தைச்சொல்லி பிள்ளைகளுக் குத் தெரிந்தமட்டும் சொல்லச் செய்தல்.

4. உபாத்தியாயர் தகுந்த கதைகளைப் பிள்ளைகளுக்கு வாசித்துக் காட்டுகிறது. அந்தக் கதையை பிள்ளைகளைச் சொல்லச் செய்கிறது. சிறு சிறு வாக்கியங்களாக கதையை எழுதச் செய்கிறது.

5. பிள்ளைகள் பாடல்களைக் கற்று பாடுகிறது.

6. பாடத்தைப் பார்த்து அதன் விஷயத்தை வாய்மொழியாய் சொல்லுதல்.

## இரண்டாவது வகுப்பு.

I. Course:

1. அந்த வாரத்திய கதைப்படத்தைப் பற்றி சம்பாஷித்தல். கதை சம்பந்தமான சிறு வாக்கியங்களை கரும்பலகையில் எழுதுதல், பிள்ளை கள் அதைப்படித்தல்.

2. ஒன்று அல்லது இரண்டு பாடல்களைக் கற்றல்.

3. பிள்ளைகளுக்கு சிறு கதைகளை வாசித்துக் காட்டுகிறது, பிள்ளை கள் அவைகளை சுறுக்கமாய்ச் சொல்லுதல்.

4. பிள்ளைகள் கரும்பலகையில் எழுதப்பட்ட வாக்கியங்களை எழுதுதல்.

II. Course:

1. சம்பாஷணை, சம்பாஷணை விஷயத்தை எழுதுதல்.

2. வகுப்புப் புஸ்தகம்.

3. பாடல்களை மனப்பாடம் செய்தல். உபாத்தியாயர் பாடல்களைக் கரும்பலகையில் எழுதுகிறது. பிள்ளைகள் பாடல்களைத் தங்கள் புஸ்தகத்தில் எழுதுதல்.

III. Course:

1. வகுப்புப் புஸ்தகம்.

2. வாக்கியங்களை அமைத்தல்.

3. வகுப்புப் புஸ்தகத்தில் வாசித்ததைப் பிள்ளைகள் சொல்லுதல்.

4. உபாத்தியாயர் உரத்து வாசிக்கிறது; பிள்ளைகள் வாசித்ததை விவரமாய்ச் சொல்லுதல்.

5. பாடல்களை மனப்பாடம் செய்து, எழுதுகிறது.

## பாலர் வகுப்பு.

I. Course:

1. படங்கள், பாடல்கள்.

2. அபிநயப் பாடல்கள்.

3. கதையிலுள்ள வார்த்தைகளைக் கற்பித்தல்.

4. பழக்கமான வார்த்தைகளிலுள்ள உயிர் எழுத்தின் ஒலிகளைக் கற்பித்தல்.

5. பிள்ளைகளை ஸ்வேச்சையாய் பேசவிடுதல். காலையில் சம்பாஷிக்கும் காலத்தில் படங்களை சம்பந்தப்படுத்தி பேசச்செய்தல்.

II. Course:

1. முதல் பிரிவில் சொல்லப்பட்ட 3–4 லக்கமுள்ள விஷயங்களை நடத்துதல்.

2. பாடல்கள்.

3. வார்த்தைகளைக் கொண்டு விளையாட்டு (ரயில் விளையாட்டு).

4. பாடங்களை வாசித்தல்.

5. வார்த்தைகளை எழுத்துக்களைக் கொண்டு அமைத்தல்.

III. Course:

1. வாக்கியங்களை அல்லது மனப்பாடமான பாடல்களை வாசித்தல் (முதல் பாடம்).

2. கதைகளிலிருந்து எடுத்து எழுதப்பட்ட வாக்கியங்களை வாசித்தல்.

3. பாட்டுகள்.

4. உபாத்தியாயரால் கரும்பலகையில் எழுதப்பட்ட சிறு வாக்கியங்களை வாசித்தல்.

5. ஸ்வேச்சையாய் சம்பாஷித்தல், பாடங்களைப் பார்த்துச் சொல்லுதல். கரும்பலகையில் எழுதி வாசித்தல்.

6. பெரிய வகுப்புப் பிள்ளைகள் பாலர்களுக்காக எழுதிய புஸ்தகத்தை வாசித்தல். (பாலர்களுக்குத் தெரிந்த கதையை எழுதுதல்).

7. எழுதுதல்.

## கணக்கு.

### ஐந்தாவது வகுப்பு.

I. Course:

(1) இரண்டு அல்லது மூன்று ஸ்தானங்களைக்கொண்டு பெருக்கல்.
(2) நீண்டவகுத்தல்—இரண்டு அல்லது மூன்று ஸ்தானங்களால்.
(3) சாதாரண பின்னங்கள் சம்பந்தப்பட்ட கணக்குகள் Punnet III. Ex. 51, 54, 56.
(4) ப்ளானும், ஸ்கேலும், Lay. II. Ex. 13, 14.
(5) கலப்பு எண் சம்பந்தப்படுத்திய கணக்குகள் Punnet III. Ex. 55, 56, 57.

II. Course:

(1) தசாம்சபின்னம், பத்திலொன்று. எப்படி எழுதப்படுகிறது.
(2) லகுவான கூட்டல் முதலானதுகள்—தசாம்சபின்னம் ஒரே ஸ்தானமுள்ளது.
(3) பின்னங்கள்—பகுதிஎண், தொகுதிஎண் என்றால் என்ன.
(4) பஞ்சாங்கம். *Calendar*. மாஸத் தேதிகள் Punnet III. Ex. 61.

III. Course:

(1) லகுவான—காலத்தையும் தூரத்தையும் சம்பந்தப்படுத்திய—கணக்குகள்.
(2) வட்டமான உருவம் வெட்டுதல், ஒரு வட்டத்தின் சுற்றளவை அளத்தல் Lay. II. Ex. 3, 4.
(3) காகிதத்தால் மூடியுள்ள ஒரு பெட்டி செய்தல், Lay. II. Part 2. Ex. 3.
(4) மேற்படி Lay II. Part 2. Ex. 11, 12.
(5) காம்பெஸை உபயோகித்து லகுவான டிஸெயின்கள்.

## நான்காவது வகுப்பு.

I. Course:

(1) கூட்டல் கழித்தல், 3 அல்லது மேற்பட்ட ஸ்தானங்கள் மேற்படி 3 அல்லது மேற்பட்ட வரிசைகள்.

(2) பெருக்கல் வாய்ப்பாடு. $2 \times 1$ —— $2 \times 16$.
$3 \times 1$ —— $3 \times 16$.

$12 \times 1$ —— $12 \times 16$.

(3) பைகளை அணுவாக்குதல், அணுக்களை ரூபாயாக்குதல்.
(4) ரூ. அ. பை கூட்டல், கழித்தல்.
(5) ரூ. அ. பை பெருக்கல், வகுத்தல்.

II. Course:

(1) கெஜம், அடி. அங்.—கூட்டல், கழித்தல்.
(2) மேற்படி லகுவான பெருக்கல், வகுத்தல்.
(3) வீசை, பலம், தோலா. கூட்டல், கழித்தல் முதலானதுகள். லகுவான கணக்குகள்.

(4) சாதாரண பின்னங்கள். $\frac{2}{8}, \frac{3}{8}, \frac{4}{8}, \frac{5}{8}, \frac{6}{8}, \frac{7}{8}$, பின்னக் குறிப்பு
(5) கடைக்கணக்குகள். $\frac{1}{2}, \frac{1}{4}, \frac{3}{4}$, பின்னங்கள் கலந்தது.

III. Course:

(1) கடைக்கணக்குகள். இரண்டு அதற்கு மேற்பட்ட சாமான் கள்; கொடுத்த தொகையில் மீதியை கண்டுபிடித்தல்.

(2) கடிகாரம், மணி, அரைமணி சம்பந்தமான கணக்குகள்.

(3) வாரத்தின் நாட்கள், காலசம்பந்தமாயுள்ள கணக்குகள்.

Punnet III. Ex 60

(4) நேர் கோடுகளால் அமைந்த டிஸெயின். அடிக்கோலைக் கொண்டு காகிதத்தில் வரைதல்.

## மூன்றாவது வகுப்பு.

I. Course:

(1) 1000 வரையில் எண்ணுதல். மூன்று ஸ்தானத்தில் கூட் டல், கழித்தல், பக்கத்து ஸ்தானத்திற்கு அடுத்ததிலிருந்து கடன்வாங்கி கழித்தல்.

(2) கையாண்டு, தூக்கிப்பார்த்து எடையை ஒப்பிட்டுப் பார்த்தல், உபாத்தியாயர் தீராசுகொண்டு காட்டுதல்.

(3) பெருக்கல் வாய்ப்பாடு $2 \times 1$ —— $2 \times 12$.
$3 \times 1$ —— $3 \times 12$.
$10 \times 1$ —— $10 \times 12$.

(4) ஒரு ரூபாய்க்கு மேல்படாமல் அணு, பை, கூட்டல், கழித்தல்.

II. Course:

(1) $\frac{1}{2}$, $\frac{1}{4}$, $\frac{1}{3}$ இவைகளின் பாவம். காகிதம் மடித்தல், வர்ண மிடல், $\frac{1}{2}$ அங்குல சதுரகாகிதத்தை உபயோகித்தல். Lay. I. Ex. 6, 7, 8.

(2) சாமான்ய பின்னம் $\frac{1}{2}$, $\frac{1}{4}$, $\frac{3}{4}$ இவைகளை கூட்டல், கழித்தல்.

(3) இரண்டு ஸ்தானமுள்ள ஒரு எண்ணை ஒரு ஸ்தானமுள்ள எண்ணால் பெருக்குதல்.

(4) இரண்டு ஸ்தானமுள்ள ஒரு எண்ணை ஒரு ஸ்தானமுள்ள எண்ணால் வகுத்தல்.

(உ-ம்.) $\begin{array}{r|l} 2 & 9 \\ \hline & 4 \end{array}$—1 மீதி; $\begin{array}{r|l} 2 & 42 \\ \hline & 21 \end{array}$; $\begin{array}{r|l} 2 & 43 \\ \hline & 21 \end{array}$—1 மீதி.

Punnet. புஸ்தகம் பார்க்கவும்.

(5) (ஒரு ரூபாய்க்கு உள்ளாக) கடைக்கணக்கு.

(6) எடை அல்லது நிறை—தோலா, பலம், வீசை.

III. Course:

(1) அளத்தல்—$\frac{1}{8}$ அங்குலம் வரையில் கணக்கிடவும்.

(2) களிமண்ணால் ஆறுபக்கங்களுடைய கனவடிவம் செய்தல்.

(3) காகிதத்தால்—ஆறுபக்கங்களுடைய கனவடிவம் செய்தல். மூடியில்லாத ஒரு பெட்டி செய்தல்.

(4) நேர்கோடுகளால் டிஸையின்—$\frac{1}{2}$ அங்குல சதுர கட்டங்களுள்ள காகிதங்கள்—கோடுகளும், வர்ணமிடுதலும்.

## இரண்டாவது வகுப்பு

I. Course:

(1) நூறு வரையில் எண்ணுதல், எழுதுதல்.

(2) இரண்டுகளாகவும், மூன்றுகளாகவும் எந்த எண்ணிலிருந்தும் ஆரம்பித்து எண்ணுதல்.

(3) மனக்கணக்கு, 2, 3 ஐ எந்த எண்ணுடனும் கூட்டுதல் அடையாளம் +; =.

(4) எண்களை பத்துகளாகவும், ஒன்றுகளாகவும் பிரித்தல்—குச்சிகள். காய்கள்.

(5) $\frac{1}{2}$ பாவம், காகிதம் மடித்தல், சதுரம், அரையடி, அரைகெஜம்.

(6) பென்ஸல், பேனு, $2\frac{1}{2}$ அங். முதலான நீளத்தை காகிதத்தில் கத்தரித்தல்.

(7) வகுப்பை அளத்தல், கெஜம், அடிக்கோல் இவைகளை உபயோகித்தல்—துணிக்கடை—விளையாட்டு.

(8) நாணயங்கள். பெயர், பொருமானம், பெரியது சிறியது.

(9) பெருக்கல் வாய்ப்பாடு $1 \times 2$—$10 \times 2$ பத்துதரம் இரண்டு.
$1 \times 3$—$10 \times 3$ பத்துதடவை மூன்று.

உபயோகம்.

## II. Course:

(1) இரண்டு ஸ்தானங்களுக்கு மேற்படாத ஒரு எண்ணேடு 9, 9 க்கு கீழ்பட்ட எண்களை கூட்டுதல்.

இரண்டு ஸ்தானங்களுள்ள எண்ணேடு இரண்டு ஸ்தானங்களுள்ள எண்ணை கூட்டுதல்.

(2) ஐந்து ஐந்தாக எண்ணுதல்.

(3) நூறிலிருந்து கீழே எண்ணுதல்.

(4) கழித்தல்.—ஆட்டங்களைக்கொண்டு—ஒன்பது ஊசிகள். மீன் குட்டை.

(5) கழித்தல்—மனக்கணக்கு—10 க்கு குறைந்த எண்ணை இரண்டு ஸ்தானமுள்ள எண்ணிலிருந்து கழித்தல்.

(6) 10 க்களை எந்த எண்ணிலிருந்தும் கழித்தல்; ஒரு எண்ணை மற்ருெரு எண்ணிலிருந்து கழித்தல். இரண்டு எண்களும் இரண்டு ஸ்தானங்களுக்கு மேற்படக் கூடாது.

(உ-ம்.) 46–29; முதலில் 9 ஐ 46 லிருந்து கழிக்கிறது. பிறகு 20 ஐ 37 லிருந்து கழிக்கிறது.

## III. Course:

(1) மனக்கணக்கு – சுறுசுறுப்பாய் செய்யவேண்டும் – கூட்டல், கழித்தல்—ஒரு ஸ்தானமுள்ள எண்கள்.

(2) இரண்டு ஸ்தானமுள்ள எண்களைக் கூட்டுதல், கழித்தல்.

(3) பெருக்கல் வாய்ப்பாடு. $1 \times 4$—$10 \times 4$—10 தடவை 4.
$1 \times 5$—$10 \times 5$—10 தடவை 5.

$2 \times 3 = 3 \times 2$. இந்த உண்மையை அறிதல் அடையாளம்.

(4) இரண்டு, இரண்டாக பிரித்து வைத்தல்.

$$\frac{8}{2} = 4; \quad 2 \times 4 = 8.$$

$$2\overline{)8}$$
$$4$$

மூன்று மூன்றுகளாக பிரித்தல். $\frac{9}{3} = 3; \; 3 \times 3 = 9.$

அடையாளம்; ÷ ;

**உதாரணம்.**

**வகுத்தல்—பங்கிடுதல்; 3 பிள்ளைகளுக்கு 12 பழங்கள்.**

**வகுத்தல் — குவித்தல்; 4 குவியல்களுக்கு 12 பழங்கள்.**

(5) முகத்தலளவு;—பால், நெய் வாங்கும் அளவைக்கொண்டு.

(6) இந்து நாணயங்கள். 4 காலணு — 1 அணு.
16 அணு — 1 ரூ.
8 இரண்டணு— 1 ரூ.
4 கால் ரூ. — 1 ரூ.
2 அரை ரூ. — 1 ரூ.

## பாலா அல்லது முதல் வகுப்பு.

I. Course:

(1) புலன்களை பயிற்றுவிக்கும் அப்பியாஸங்கள். பதார்த்தங்களை கண்டறிதல், அவைகளை கையாடுதல், அவைகளைக்கொண்டு கட்டுதல், வர்ணங்களைப் பார்த்தறிதல், காதைப் பயிற்றுதல்; உற்றுநோக்கியறிதல்; சமதளமான வஸ்துக்களை கண்டறிதல், திசைகள், இருப்பிடம். Spier's Arithmetic. Pages 37 to 52.

(2) ஒன்றை மேலேவைத்து ஒப்பிட்டுப் பார்த்தல் மற்றொரு பொருளைக்கொண்டு ஒப்பிட்டுப்பார்த்தல். Spier's Arithmetic.

(3) பெரியது, சற்று பெரியது, ரொம்பவும் பெரியது; நீளம், சற்று நீளம், ரொம்பவும் நீளம் இது விஷயத்தை கட்டைகளைக்கொண்டு பிள்ளைகள் அறிதல். Spier's Arithmetic. Page 69.

(4) சதுரம், வட்டம், முக்கோணம் இவைகளை அதே மாதிரியான உருவத்தை (Montesari insets) வைத்து வர்ணகாகிதத்தில் வெட்டுதல். Spier's Arithmetic.

(5) 10 வரையில் எண்ணுதல், முதலாவது, இரண்டாவது, மூன்ருவது என்று கூப்பிடுதல், பிரித்தல், குவித்தல், எண்ணுதல்.

(6) காகிதத்துண்டுகள், குச்சிகள் இவைகளைக்கொண்டு, 2 களாகவும், 3 களாகவும் சேர்த்தல். உபாத்தியாயர் எண்ணை கரும்பலகையில் எழுதுகிறது. உரத்து வாசிக்கிறது.

2,

3,

(7) அனேக சாமான்களைக்கொண்டு 1 முதல் 10 வரையில் எண்ணுதல், எழுதுதல்.

## II. Course:

(1) 12 வரையில் எண்ணுகிறது.

(2) 12 வரையில் எழுதுதல்.

(3) சாண், டிலிக்ஸ் கட்டைகளைக்கொண்டு நீளத்தை ஒப்பிட்டுப் பார்த்தல்.

(4) 12 வரையிலுள்ள எண்களை விபாகம் செய்தல்.

5, △ +.

6,

இம்மாதிரியே மற்ற எண்கள்.

(5) இரண்டு எண்களை கூட்டல், தொகை பன்னிரண்டுக்கு மேற்படக்கூடாது.

(6) 1, 2, 3 முதலான எண்களை 12 க்கு குறைவான எண்களில் கழித்தல்.

## III. Course:

(1) 20 வரையில் எண்ணுதல், எழுதுதல்.

(2) 12 லிருந்து தலைகீழாக எண்ணுதல், அம்மாதிரியே 20 லிருந்து.

(3) இரண்டு எண்களை கூட்டுதல்—தொகை 20 க்கு மேற்படாமல்.

(4) கூட்டல் சம்பந்தமான சில கணக்குகள்.

(5) 100 வரையில் எண்ணுதல்.

(6) 12 லிருந்து 20 வரையிலுள்ள எண்களை விபாகம் செய்தல்:— குச்சிகளை கட்டுகளாகவும், தனிக் குச்சிகளாகவும்—2 களாகவும், 3 களாகவும், 4 களாகவும், ஒன்றுகளாகவும் விபாகம் செய்தல்.

## பூகோளம்.

### ஐந்தாவது வகுப்பு.

I. Course:

(1) பெரிய நீர், நிலப் பிரிவுகள்.

(2) மலைகள், ஆறுகள், பள்ளத்தாக்குகள், பீடபூமிகள் இவைகளைப்பற்றி பாடம்.

(3) பூமியிலுள்ள முக்கியமான மலைகள், முக்கியமான ஆறுகள்; பிள்ளைகள், மலைகளின் இருப்பிடத்தையும், ஆறுகளின் உற்பத்தி ஸ்தானத்தையும், அவைகள் போகும் வழியையும் படத்தில் கண்டறிய வேண்டும்.

(4) ஐந்து பூமண்டலங்கள், அவைகளின் முக்கியமான விசேஷக் குறிப்புகள்.

(5) நிரக்ஷரேகை, தீர்க்கரேவை இவைகளின் பாவம்.

(6) வெவ்வேறு இடங்களில் நேர (மணி) வித்தியாசம்.

II. Course:

(1) இரவும் பகலும்.

(2) பருவங்கள்

(3) சூரியன், சந்திரன், சந்திரன் பிறைகள்.

(4) சூரிய, சந்திர கிரஹணம்.

(5) நிலக்கரியும் அது அகப்படும் சுரங்கமும், வைரக்கல், மற்ற உலோகங்கள், எங்கே அகப்படுகின்றன.

(6) ஒரு தேசத்தின் சீதோஷ்ணத்தை அறிவதற்கான முக்கிய காரணங்கள்.

(7) பிரிட்டிஷ் ராஜ்யம்: பொதுவாய்.

III. Course:

(1) இந்தியா, அதன் பாகங்கள், ஆறுகள், மலைகள், முக்கிய பட்டணங்கள், ஏற்றுமதி, இறக்குமதி.

(2) சென்னை ராஜதானி—விஸ்தாரமாய்.

## பூகோளம்.

### நான்காவது வகுப்பு.

I. Course:

(1) பூகோளபடத்தைக் கொண்டு கண்டங்களையும், சமுத்திரங்களையும் காண்பித்தல்.

(2) தங்கள் சொந்த தேசமும், சக்கரவர்த்தி இருப்பிடமும்.

(3) சென்னை, பம்பாய், கல்கத்தா. டெல்லி — இந்தியாவின் தலைநகரம் இவைகளை படத்தில் கண்டறிதல்.

(4) இங்கிலாந்து, இந்தியா இவற்றைசுற்றியிருப்பவைகளைப் பற்றி அறிதல்.

(5) சென்னையிலிருந்து லண்டனுக்கு பிரயாணம் போகும் வழியிலிருக்கும் கடல்கள், தேசங்கள், ஜலசந்திகள் முதலியன.

II. Course:

(1) கவர்னருடன் தென்னிந்தியாவில் பிரயாணம்.

(2) கங்கை நதி.

(3) பிள்ளைகள கவனித்தறியும் சூரியன் சலனம் (ஒருநாள், ஒரு வருஷம்). இரவும் பகலும் எப்படி உண்டாகிறது.

(4) பூமியைச்சுற்றி பிரயாணம்.

(5) பூமியில் வெவ்வேறு சீதோஷ்ண மண்டலங்களில் வசிக்கும் மனுஷ்ய ஜாதிகள். இருப்பிடம், கைத்தொழில், உடை இவைகளின் வித்தியாசங்கள்—படங்கள் மூலமாய் விளக்குதல்.

III. Course:

(1) இந்தியா; இயற்கை அமைப்பு, சீதோஷ்ணம், மலைகள், ஆறுகள், விளைபொருள்கள், காடுகள், மைதானங்கள், கைத்தொழில், முக்கியமாய் விவசாயம்.

(2) ராஜதானி — பொதுவிவரம் — மலைகள், ஆறுகள், பட்டணங்கள்.

(3) செங்கல்பட்டு ஜில்லா—

(4) ராஜதானியில் ஸ்வதேச ராஜாவால் ஆளப்படும் ராஜ்யம்.

## பூகோளம்.

### மூன்றாவது வகுப்பு.

I. Course:

(1) திசைகள்.

(2) சாயை.

(3) காற்றடிக்கும் திக்கை காட்டும் கருவி (weather-cock).

(4) ப்ளான் வரைதல் முதல்பாடம், கோடு இழுத்தல், அளவைக் கொண்டு ப்ளான்போடுதல், வகுப்பு, ஸ்கூல் ப்ளான், ஸ்கேல்.

(5) தீபஸ்தம்பத்தின் உபயோகம்.

(6) அடையார் நதி.

II. Course:

(1) சைதாப்பேட்டையி லிருந்து செல்லும் இருப்புப்பாதை எவ்வெவ்விடத்திற்கு செல்லுகிறது.

(2) கவர்னருடன் உதகமண்டலம் (நீலகிரி) செல்லுதல்.

(3) கடலோரத்தில் ஒரு விடுமுறைநாள்.

(4) பூமியின் உருவம்.

(5) மேகங்களும் மழையும்.

(6) ஏரியைப்பற்றிய பாடம்.

III. Course:

(1) சைதாப்பேட்டை—விஸ்தாரமாய்.

(2) செங்கல்பட்டு ஜில்லா முக்கிய பட்டணங்கள்.

## பூகோளம்.

### இரண்டாவது வகுப்பு.

I. Course:

(1) இங்கிலீஷ்காரர்கள்.

(2) சீனர்கள், ஜெப்பானியர்கள்.

(3) நார்வே ஜனங்கள், ருஷியர்கள்.

(4) ஸ்விட்ஜர்லண்டு, ஹாலண்டு, பெல்ஜியம் இந்த தேசங்களிலுள்ள ஜனங்கள்.

(5) அமெரிக்கர்கள்.

(6) தென் ஆப்பிரிக்கர்கள்.

II. Course:

(1) ஈஜிப்ட் தேசத்தவர்கள்.

(2) இடெலி, ஸ்பெயின் தேசத்தவர்கள்.

(3) பாரசீகர்கள், அராபியர்கள்.

(4) பிக்மீஸ்.

(5) ராபின்சன் குரூஸோ கதை.

III. Course:

(1) காலேஜ்.

(a) எல்லைகள், (b) அங்கே போவதற்கான ரஸ்தாக்கள், (c) அதிலுள்ள கட்டடங்கள், (d) தோட்டங்கள், (e) விளையாடுமிடம்.

(2) வாடர்லூஸ் கதை. Kipling's Jungle Book.

(3) காட்டு மிருகங்கள்.

## சரித்திரம்.

### ஐந்தாவது வகுப்பு.

I. Course:

(1) நம் ராஜாங்கமுறை.

(2) பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவிற்கு வந்தது.

(3) இந்தியாவில் இதர தேசத்தார்கள்.

(4) வியாபாரக் கூட்டக்காரர்கள் எப்படி யுத்தத்திற்கு ஆரம்பித்தார்கள்.

(5) க்ளைவ்—ஆற்காடு முற்றுகை.

(6) பிரிட்டிஷ்காரர்கள் எப்படி பங்காளத்தில் அரசரானுர்கள்.

(7) ஹைதர் ஆலி.

(8) டிப்பு சுல்தான்.

(9) ஸர் தாமஸ் மன்ரோ.

II. Course:

(1) சிவாஜி—மஹராட்டியர் தலைவர்.

(2) டெல்லியில் மஹராட்டிரர்கள்.

(3) சீக்கியர்கள் யுத்தவீரர்களானது.

(4) ரன்ஜிட்சிங்—லாகூர் சிங்கம்.

(5) மகம்மது கெஜனி, கோரி, டோக்லாக்.

(6) பேபர், ஆக்பர், ஔரங்கசீப்.

(7) மொகலாய ராஜ்யத்தின் க்ஷீணதசை.

III. Course:

(1) அசோகா, விக்கர்மாதித்யா, புத்தா.

(2) மகம்மது தீர்க்கதரிசி.

(3) தற்காலத்தும், முற்காலத்தும் யுத்தமுறைகளை ஒப்பிடல், இப்போது நடக்கும் பெரும் யுத்தம்.

(4) நெப்போலியன், நெல்சன், வில்லிங்கடன்.

(5) லார்ட் வில்லியம் பென்டிங்க், லார்ட் டெல்ஹௌஸி, கடைசி டெல்லி முற்றுகை, லார்ட் ரிப்பன்.

(6) ஆங்கில ராஜ்யத்தின் நன்மைகள்.

## நான்காவது வகுப்பு.

I. Course:

(1) புதியதாய் கண்டறிந்ததும், யுக்திகளும்.
(2) அச்சிடுதல்—விஸ்தாரமாய் ஆரம்பம் முதல் அதன் விருத்தி.
(3) போக்குவரவு சாதனங்கள்—முற்காலத்திலும், தற்காலத்திலும்.
(4) பழைய காலத்து வியாபாரிகள்:
இந்துக்கள், போர்த்துகேசியர்கள், அராபியர்கள்
(5) ஆல்புகர்க்—வியாபாரி அரசன்.
(6) தற்காலத்தில் இந்தியாவிலுள்ள வியாபாரிகள்.

II. Course:

(1) நம் முன்னோர்கள்.
(2) அலெக்ஸாண்டரும் போரஸனும்
(3) மஹாபலிபுரம்.
(4) தஞ்சாவூரும் சோழராஜாவும்.
(5) சோமனதபுரத்துக் கோவில்.
(6) பிருதுவி ராஜனும் சம்யுக்தையும்.
(7) அல்லாவுதின் சித்தூரை பிடித்தது.
(8) தாஜ்மஹால்.

III. Course:

(1) ஸெயின்டு ஜார்ஜ் கோட்டை.
(2) லார்ட் க்ளைவ்.
(3) புதுச்சேரியும், பிரான்சுக்காரர்களும்.
(4) பிரான்சுக்காரர்கள் நம் சிநேகிதர்கள்.
(5) விக்டோரியா மஹாராணியார் குமாரன், பேரன்.
(6) கவர்னரும் அவர் ராஜாங்கமுறையும்.

## மூன்றாவது வகுப்பு.

I. Course:

(1) ராமாயணக் கதை.
(2) மஹாபாரதக் கதைகள்.

II Course:

(1) கிராம பரிபாலனம்.
(2) போஸ்டு ஆபீஸும் அதன் வேலையும்.
(3) இருப்புப்பாதைகள், ரயில்வே ஸ்டேஷன் அதன் வேலைகள்.
(4) கப்பல்கள்—அனேக விதம்.

III. Course:

(1) பறங்கிமலைக்குப் போகுதல்:
சிப்பாய்கள், அவர்கள் வேலை, எங்கே வசிக்கிறார்கள், பிள்ளைகள் சிப்பாய்ஆட்டம் ஆடுதல்.
(2) தைரியமான சிப்பாய்களைப்பற்றிய கதைகள். 3 கதைகள்.
(3) யூனியன் ஜாக்.
(4) நம் நேசக்கட்சியாரின் துவஜங்கள்.

## இரண்டாவது வகுப்பு.

I. Course:

(1) சபலா—திவ்வியமான பசு.
(2) புத்தர்.
(3) நச்சுப்பொய்கை.
(4) வாட் என்பவரும் கடாரமும்.
(5) நெல்சனும் ஹார்டியும்.
(6) லேட்பிரிகேடின் சண்டை.

II. Course.

(1) லக்னோ கலக உபசமனம்.
(2) டேவிட் லிவிங்ஸ்ட்டன்.
(3) டெல்லி மகுடாபிஷேக உற்சவம்.
(4) புரூஸும் சிலந்தியும்.
(5) பொயடீஸியா.
(6) காப்டன் குக் (Cook).
(7) நைடிங்கேல் அம்மையார்.
(8) சமாதானம்செய்யும் எட்வர்ட்.

III. Course:

(1) சாவித்திரி, சத்தியவான்
(2) நளனும் தமயந்தியும்.
(3) ராமனும் சீதையும்.
(4) கிருஷ்ணனுடைய பால்யம்.
(5) சகுந்தலா.
(6) நெல்ஸன்—கப்பல் சண்டைத் தலைவன்.

குறிப்பு.—ஒரு வருஷத்தை மூன்று பாகமாகப்பிரித்து (1) ஜூலை முதல் செப்டெம்பர் முடியவும், (2) அக்டோபர்முதல் டிசம்பர்முடியவும், (3) ஜனுவரிமுதல் ஏப்ரில்முடியவும் பாடக்குறிப்பு எழுதப்பட்டிருக்கிறது.

# III

## தற்சமய சிகிச்சைகள்.

எலிமெண்ட்ரி பள்ளிக்கூடங்கள் அனேகமாய் நாட்டுப்புறங்களி லிருக்கிறபடியாலும், நாட்டுப்புறத்து ஜனங்கள் நன்ருய் கற்றவர்களாயிருப்பது சாத்தியமில்லாதபடியாலும் அப்பள்ளிக்கூட உபாத்தியாயர்கள் மருந்து விஷயமாய் கொஞ்சம் கற்றிருப்பது நல்லது. அந்த அறிவானது அவர்களிடம் ஒப்புவிக்கப்பட்ட பிள்ளைகளின் சரீரசௌக்கியத்திற்கு சாதகமாகும்.

புண்.—அடிக்கடி பிள்ளைகள் தங்கள் சரீரத்தில் எங்கேயாவது ஓரிடத்தில் அழுக்கான கந்தைத்துணியை கட்டிகொண்டு வருவதைப் பார்க்கிரேம். அந்தப் புண் பார்ப்பதற்கு அல்பமாக இருக்கலாம். வீட்டில் செய்யும் சிகிச்சையால் அநுகூலமாகிக் கொண்டுவரலாம் அல்லது அதை நன்ருய் கவனித்துப்பார்க்க வேண்டியதாகவுமிருக்கலாம் புண், சிவபபாகவும், வலியுள்ளதாகவு மிருந்தாலும், புண்ணைச் சுற்றி வீங்கியிருந்தாலும், எல்லாம் சரியாயில்லாமலிருந்தாலும் டாக்டரிடம் காட்டவேண்டியது அவசியம்.

ஆனல் பள்ளிக்கூடத்தில் எப்போதும் தற்செயலாய் சில ஆபத்துக்கள் நேருகிறது. உபாத்தியாயர் அதற்கு என்ன செய்யவேண்டியது என்பதை தீர்மானித்துச் செய்யவேண்டும்.

கீழே விழுவதால் உண்டாகும் காயம்.—ஒரு குழந்தை உயரமான இடத்திலிருந்து கீழே விழுந்துவிட்டால், அதனல் நல்ல காயம் ஏற்பட்டால், கூடுமானவரையில் அந்த இடத்திலிருந்து கொஞ்சதூரம் தூக்கிப்போய் சௌகரியமான ஓர் இடத்தில் படுக்கவைக்கவும்; குளிர்காற்று மேற்படாமல் நன்ருய் கம்பளத்தால் போர்த்தல் நல்லது. இருந்த இடத்திலேயே டாக்டர் வரும் வரையில் படுத்திருக்கச் செய்யவும். ஒரு நிமிஷநேரமேனும் ஸ்மரணை தப்பியிருந்தால் ஒருமணி அமைதியாய் படுத்திருக்கும்படி செய்து பிறகு வீட்டுக்கனுப்பவும். வேண்டுமானல் பெற்ருேர்களிடம் ஒன்று அல்லது இரண்டுநாள் அலையாமல் படுத்துக்கொண்டிருப்பது நல்லது என்று சொல்லவும்.

வெட்டுக்காயம்.—காயத்தை போரிக்ஆஸிட் கலந்த தண்ணீரால் நன்ருய் கழுவி சுத்தமான ஒருதுண்டு துணியால் (ஆஸிட் தண்ணீரில் தோய்த்து) கட்டிவிடவும்.

சுட்டுப்புண்.—சுட்ட இடத்தில் நன்ருய் வாஸலயினை தடவிவிடு. இது அகப்படாவிட்டால் பொங்கின ஜலத்தில் ஒரு சிறுதுணியை நனைத்துப் பிழிந்து சூடாறினபிறகு அந்தத் துணியை உபயோகிக்கலாம்.

மயக்கம்.—மயக்கமுள்ளவனை நன்ருய் படுக்கவிடு. சட்டை, துணிகள் இவைகளை தளர்த்திவிடு. நல்லகாற்று அவன்மேல் வீசும் படி விடவும். குளிர்ந்த தண்ணீரை முகத்தில் அடித்தலும் நல்லதுதான்.

விஷமுள்ள (Berries) சிறுபழங்களை தின்னல்.—அதிகமான உப்பை வெந்நீரில் கரைத்து குடித்தால் குணமாகும்.

## தொத்து நோய்கள்.

தொத்து நோயுள்ள குழந்தைகளை அடிக்கடி பள்ளிக்கூடத்திற்கு அனுப்பிவிடுகிருர்கள். உபாத்தியாயர் இந்தத் தொத்து நோய்களைக் கண்டறியவேண்டும். அந்தப் பிள்ளைகளை வீட்டுக்கு அனுப்புவதுடன், டாக்டரிடம் பார்க்கவேண்டுமென்று பெற்ருேருக்கு ஒரு கடிதமும் எழுதலாம்.

சின்ன அம்மை.—பொதுவாய் முதலில் ஜலதோஷம், தலைவலியுடன் ஆரம்பம். பிறகு மூக்கு, கண்கள் இவைகளிலிருந்து நீர் வடிகிறது. அதன் பிறகு இருமல். மறுநாள் சற்று லகுவாயிருக்கிறது. அந்த சமயத்தில் பிள்ளைகள் பள்ளிக்கூடத்திற்கு வந்து விடுகிருர்கள் இந்த நோய் மற்றப் பிள்ளைகளுக்குத் தொத்திக்கொள்ளுகிறது. மூன்ரும் நாள் உடம்பில் அம்மைகள் இருப்பதைப் பார்க்கலாம். ஆகையால் முதல் நாளே, ஜலதோஷம், தலைவலி இருக்கும்போதே பிள்ளைகளை வீட்டுக்கு அனுப்பிவிடவேண்டும். நன்ருய் சொஸ்தமான பிறகுதான் பள்ளிக்கூடத்திற்கு வரவேண்டும் என்று சொல்லியனுப்பவும்.

கக்குவான் இருமல்.—இந்த நோய் அதிகமாய் பரவுமாதலால் அதை தடுப்பது மிகவும் கஷ்டம். முதலில் இருமல் மும்முரமாயிருக்கும். பிறகுதான் கக்குவான் என்பது தெரியும். இருமல் அதிகமாயிருந்தால் பிள்ளையை பள்ளிக்கூடத்தை விட்டு அனுப்பிவிடுவது நல்லது. இருமல் நிற்கும்வரையில் வீட்டிலேயே இருக்கும்படி சொல்லவும்.

இருமல், ரத்தாசயத்திற்கு, ஸ்வாசாசயத்திற்கும் அதிக கெடுதிபை உண்டுபண்ணும். ஆகையால் டாக்டரிடம் அந்த நோயுள்ள பிள்ளைகளை காண்பிக்கவேண்டுமென்று பெற்ருேர்களுக்குச் சொல்லவும்.

சிரங்கு.—சிரங்குள்ள பிள்ளைகளை பள்ளிக்கூடத்தில் சேர்க்கலாகாது. இதற்கு சிகிச்சை உடம்பு முழுவதும் கெந்தகம் கலந்த எண்ணெயை ராத்திரியில் தடவி காலையில் நன்ருய் தேய்த்து

குளிக்கிறது. உடுக்கும் வஸ்திரங்களையும் சுத்தமாய் வைத்துகொள்ளுகிறது.

படர்தாமரை.—இந்த நோயுள்ள பிள்ளைகளை பள்ளிக்கூடத்திலிருந்து விலக்கி, விடவேண்டும். பிறகு சேருவதற்கு டாக்டரிடமிருந்து அந்த வியாதி நிவர்த்தியாயிற்று என்று கடிதம் கொண்டு வரவேண்டும்.

ஜ்வரம்.—குழந்தைகளுக்கு முதலில் ஜலதோஷம் தலைவலி, உடம்பு கதகத வென்றும் இருக்கிற . அவர்களை க்யுனையின் சாப்பிடச் சொல்லவும். சொஸ்தமாகும்வரையில் பள்ளிக்கூடத்திற்கு வரக்கூடாது என்று பிள்ளைகளிடம் சொல்லவும்.

கண்வலி.—கண்வலியுள்ள பிள்ளைகளை பள்ளிக்கூடத்திற்கு வரக்கூடாது என்று சொல்வதுடன் கண்களுக்கு இந்த வியாதியால் கெடுதி நேரிடுமாதலால் டாக்டரிடம் பிள்ளைகளை காண்பிக்கும்படி சொல்வது நலமாயிருக்கும்.

## பெற்றோர்களுக்கு அறிக்கை.

தூக்கம்.—5 வயதுமுதல் 8 வயதுவரையிலுள்ள பிள்ளைகளுக்கு தினம் 12 மணி நேரம தூக்கம்வேண்டும் குழந்தைகள் தூங்கும் போது இரைச்சலே கூடாது. நல்ல காற்றோட்டமான இடத்தில் தூங்கவிடவேண்டும். ஈரமான இடத்திலும், சாரல் அடிக்கும்படியான இடத்திலும் தூங்கலாகாது. கைகால்களையாவது நன்றாய் கழுவிக்கொண்டு படுக்கவேண்டும். பகலில் கட்டிக்கொண்டு அழுக்காய்ப்போன ஆடைகளுடன் படுப்பதை கூடியமட்டும் தடுக்க முயலவேண்டும்.

ஒழுங்கான பழக்கங்கள்.—தினந்தோறும், காலையில் பிள்ளைகளுக்கு பல்தேய்த்து முகம் கழுவுதல், நன்றாய் உடம்பை தேய்த்து குளித்தல், தலைமயிரை நன்றாய் வாருதல், இவ்வழக்கங்கள் உண்டாகவேண்டும். நன்றாய் நகங்களை எடுத்துவிடவேண்டும். வாரத்திற் கொருமுறை எண்ணெய் தடவி ஸ்நானம் செய்யவேண்டும். குறித்தகாலத்தில் ஒவ்வொன்றையும் செய்யவேண்டும்.

ஆகாரம்.—கைகால்களை கழுவிக்கொண்டு சாப்பாட்டுக்கு உட்காரவேண்டும். சாப்பிடும்போது மெதுவாயும், போட்ட ஆகாரத்தை வீணாய் ஒதுக்கித் தள்ளாமலும் சாப்பிடவேண்டும். சாப்பிட்ட பிறகு 10 நிமிஷமாவது உட்கார்ந்திருந்து பிறகு விளையாடப் போகவேண்டும்.

## Appendix IV

### BOOKS FOR CONSULTATION

#### Number and Space Work

| | |
|---|---|
| The Groundwork of Arithmetic | ... Punnett. |
| Exercises in the Groundwork of Arithmetic | ... Do. |
| Constructive Work. Teachers | ... Lay. |
| Do. do. Pupils | ... Do. |
| Primary Arithmetic | ... Spier. |

#### Nature Study

| | |
|---|---|
| A Handbook of Nature Study | ... Thompstone. |
| Nature Study | ... Rennie. |
| The Farm | ... Jack & Co. |
| The Stars | ... Do. |
| Birds | ... Do. |
| Lessons from Zoology I, II, III, IV. | Duraiswami Sastri. |
| Observation lessons in Plant life | ... Shoesmith. |
| Do. do. in Animal life | ... Do. |
| Nature Facts and Fairies | ... Sandford. |

#### History

| | |
|---|---|
| Heroes of Indian History | ... Allen. |
| Cambridge Historical Readers | Introductory.<br>Primary.<br>Junior.<br>Intermediate.<br>Senior. |
| Boys Book of Inventions | ... Baker. |
| Heroes of European History | ... Creighton. |
| Voyages and Discoveries | .. Cook. |
| Heroes of England | ... Edgar. |
| The Wonder Book of Soldiers<br>Do. do. Sailors | Published by Ward-lock & Co. |
| The Story of Stanley | ... Golding. |
| The Indian Heroes | ... Kincaid. |

| | |
|---|---|
| Deccan Nursery Tales ... | Kincaid. |
| Last Expedition ... | Scott. |
| Story of Kitchener ... | Wheeler. |
| The Great War ... | Newbolt. |
| Autobiographies of Children's Heroes. | Pub. by Jack & Co. |
| My Book of Brave Men ... | Pub. by Blackie & Son. |

### Geography

| | |
|---|---|
| Flags of All the Nations ... | Wilcox. |
| Geography of the World ... | Viraraghavachari. |
| Do. Chingleput ... | Do. |
| Peeps at Many Lands ... | Pub. by Black. |
| Little People in Far-off Lands ... | Tapsell. |
| All the World in Picture and Story. | Riley. |
| Nations of the World ... | MacKinder. |
| Distant Lands ... | Do. |
| The Story of the World ... | O'Neill. |
| Observation Lessons in Geography... | Shoesmith. |

Any good General Geography for Reference.

### Maps

Of the World.
India.
The District you live in.
Your own Town.
Your own Village.
Your School Grounds.
The British Empire.

### Handwork

| | |
|---|---|
| Handwork in Early Education ... | Plaisted. |
| Paper Modelling ... | Swannell. |
| Toy Making ... | Polkinghorn. |
| Educational Handwork ... | Jenkins. |

### Games

| | |
|---|---|
| Games with Aims ... | Watson. |
| Games without Music ... | Bates. |

| | |
|---|---|
| Play Ground Games | ... Wood. |
| Handbook of Games | ... Pub. by Bengal Education Department. |

### Stories

| | |
|---|---|
| Fairy Tales | ... Anderson. |
| King Arthur and his Knights | ... Malory. |
| Tom Brown's School Days | ... Arnold. |
| Pilgrims Progress | ... Bunyan. |
| Alice Adventures in Wonderland | ... Carroll. |
| Alice Through the Looking Glass | ... Do. |
| Folk Tales of Bengal | ... Day. |
| True Tales of Indian life | ... D. N. Neogi. |
| Stories from Grimm | ... Pub. by Jack & Co. |
| Nursery Tales | ... Do. |
| Just So Stories | ... Kipling. |
| Jungle Book I | ... Do. |
| Do. II | ... Do. |
| Water Babies | ... Kingsley. |
| Blue Fairy Book | ... Lang. |
| Green do. | ... Do. |
| Red do. | ... Do. |
| Stories for the Story Hour | ... Marsials |
| Stories to tell to Children | ... Bryant. |
| Sacred Tales of India | ... Neogi. |
| Cradle Tales of Hinduism | ... Nivedita. |
| Wild Animals I have Known | ... Seton. |
| Indian Story Book | ... Wilson. |

### Kindergarten System

| | |
|---|---|
| The Indian Kindergarten | ... Gillingham. |
| Do. do. | ... Brander. |
| The Kindergarten Guide | ... Bates. |
| The Child and his Education | ... Gordon. |
| The Children's Garden | ... Chandler. |
| From a Kindergarten Window | ... Gordon. |

# இப்புத்தகத்தில் உபயோகித்திருக்கும் வார்த்தைகளுக்கு சரியான இங்கிலீஷ் வார்த்தைகள்.

சிக்ஷணம்—Education.

உடனுணர்வு—Sympathy.

பறறுதல்கள், மனப்பற்றுதல்கள், ஊற்றம்—Interests.

இயற்கைகுணம்—Instinct.

நூல், இயற்கை, செயற்கை இவற்றின் ஸம்ருதி—World of literature, nature and art.

சக்தி—Power.

திறமை, ஆற்றல், திராணி—Capability.

விகாஸமடைதல். (மலர்தல்) —Unfolding.

பெருக்க, வளர்க்க, விருத்தியை அடைவிக்க—Develop.

ஊன்றிப்பார்—Watch.

திறமை யடையச்செய் — Enable.

ஹிதமான—Healthy.

குறைவு நீங்கி நிறைவுபெற்று சிறப்புற்று விளங்கப்பெறும்—Will be perfected and beautified.

இயக்கம் (உலாவுதல்)—Movement.

திடம் தரும் ஆட்டங்கள்—Vigorous games.

சீலம்—Character.

பிரத்தியேகத்துவம்—Individuality.

பாவப்பிரகாசகமான வேலை (மனதிலுள்ளதை காரிய ரூபமாய் வெளியிடல் — Expression work.

கட்டுக்காவல் கண்காணிப்புக்குட்பட்ட — Watched and guarded.

(அவன் அபிப்பிராயத்தை) கணிசிக்க—Respect (his opinion).

பணிவு—Obedience.

வேளை தப்பாமை—Punctuality

அனுஷ்டானத்தின் பிரபாவம்—Force of example.

எல்லாம் வல்ல All powerful.

நன்குணர—Recognize.

இச்சாசக்தி—Will.

பாடக்கொத்—Curriculum.

மிருது ஸ்வபாவமாக்கும் குணமுடைமை — Humanising influence.

பயிற்சி வகைகள்—Exercises.

ஒன்றுக்கொன்று பொருத்தமாக்கிக்கொள்—To cordinate.

பதிலளிக்க—Respond.

அங்கநேர்மையாய் உட்கார்தல், நிற்றல் முதலியவை—Good postures.

ஹாஸ்ய ரஸ அறிவு—Sense of humour.

ஒலியின்ஸ்வாரஸ்யமான(இனிய) சேர்க்கை—Rhythm.

காவ்யருசி—Poetical sense.

கற்பனுசக்தி—Creative power.

புலனுணர்ச்சிகள்—Sensations

பராக்குப்பார்த்தல்-Distraction.

சஞ்சலமான—Restless.

வாயுமண்டல நிலைமை, வாயுநிலைமை—Weather.

உஷ்ணநிலைமை-Temperature.

மூலாதாரமான தசைகள்—Fundamental muscles.

உபதசைகள்—Accessory muscles.

பரிணுமவாதம் – Theory of evolution.

ரூடிக்கிரமமான — Conventional.

வடிவு—Outline.





PRINTED AT THE S.P.C.K. PRESS, VEPERY, MADRAS—B. 8097